"படர்கதை வினைமுற்று நாமம் குறிப்பின்
பெறப்படும் திணைபால் அனைத்தும் ஏனை
இடத்தவற் றொருமைப் பன்மைப் பாலே" (265)

எனக் கூறுவர்.

(எ.டு) அவன் வந்தான் உயர்திணைப் படர்க்கை ஆண்பால்
அவள் வந்தாள் உயர்திணைப் படர்க்கைப் பெண்பால்.

(7) "வேறு இல்லை உண்டு ஐம்பால் மூவிடத்தன" (339) என நன்னூலார் இம்மூன்றும் இருதிணை, ஐம்பால், மூவிடங்கட்கும் பொதுவான சொற்கள் என்கிறார். இவை எழுவாயோடு பொருந்தி நிற்றலை நாம் காணலாம்.

(எ.டு) அவர் வேறு. நண்பன் உண்டு நண்பன் இல்லை } Common to five-fold classifications of Gender

(8) பெயர்ச் சொல் Collective—தொகுதியாக வருங்கால் அதன் பயனிலை ஒன்றன் பாலையுடையதாய் அமைந்திருக்கும்.

(எ.டு) வையாது உலகம் (இடவாகுபெயர்) (Synecdoche).

(9) படர்க்கையிடத்தின்கண் ஓர் உருவம் ஆணு, பெண்ணு என்று அறியாதபோது இருதிணைக்கும் பொதுவான ஒரு வினைமுற்றினைச் சேர்த்து வழங்குதல் நம் இலக்கண நெறியாக விளங்குகிறது

"ஐயந் திணைபா லவ்வப் பொதுவினும்
மெய்தெரி பொருண்மேல் அன்மையும் விளம்புப". (376)

என்பது நன்னூல் நூற்பா.

(எ.டு) ஆண் மகனே பெண் மகளோ அங்கே தோன்றுகின்றவர்?

(10) 'யாவர்' எனும் வினாச்சொல் 'யார்' எனத் திரிந்து வருதல் இயல்பு.

(எ.டு) "இவன் யார் என்குவை யாயின்". (புறம்-13) என்பதின்கண் 'யாவன்' என்னும் சொல்லுக்கு மாறாக 'யாவர்' என்னும் பன்மைச் சொல்லின் திரிபாம் 'யார்' என்பதே காணப்படுகின்றது.

(11) இலககண நூலாா ஏவல் ஒருமை விணை முற்றுக்கள் (Imperative Verbs) முன்னிலைககுரிய 'ஆய' என்னும பால் காட்டும் விகுதி (Pronominal suffix) புணாநது, பின் கெட்டு அமைகின்றன என்பா

"செய்யாய் என்னும் முன்னிலை வினைசசொல்
செய்யென் கிளவி ஆகிடன் உடைததே". (தொல். 450)

(எ.டு) 'நீ நடவாய' — இலககணப படைபபு.
'நட' — உண்மை மொழி (அ) வழககியல நிலை.

(12) எழுவாய்ககும பயனிலைககும இடையே செயபபடு பொருள் (object) நிற்கும (SOP). இநநிலை சிறுபான்மை மாறி நிறறலும உண்டு வினையெசசமாக நிறகுஙகால செயபபடு பொருள தவறுமல வினைககு முன் நிற்கும.

(எ டு) வள்ளுவா குறளை இயற்றினா. S O P
குறளை வளளுவா இயறறினா O S P
வளளுவா குறளை இயறறிச சிறந்தாா. S O P

(13) (a) இரணடு அலலது இரணடிற்கு மேற்பட்ட எழுவாயகள ஒரு சொற்றொடரில வநதால தன்மைப பன்மை வினைச சொலலைப பயன்படுததுகினறோம. எழுவாயகள, தனமை ஒருமைப பெயருடன் முன்னிலைப பெயரோ, படாககைப பெயரோ, மூன்றுமோ வரின தனமைப பனமை வினைச சொலலைப பயன படுததுகின்றோம்.

(எ டு) யானும நீயும் போனோம, யானும அவனும் போனோம;
யானும் நீயும அவனும போனோம. (I Person Plural.)

(b) எழுவாய், முனனிலை, படர்ககைகளாகவிருபபின் முனனிலைப பன்மை வினையைப பயனிலையாக அமைககின்றோம.

(எ டு) நீயும் அவனும சென றீா (II Person Plural.)

(c) எழுவாய உயாதிணையிலும, அஃறிணையிலும சோநததாகவிருபபின் வினைச சொல உயர்திணைப பன்மையா யிருததல் வேண்டும.

(எ.டு) கண்ணனும் நாயும் வநதாாகள. (High caste.)

(14) பெயரடையெலலாம பெயருக்கு முன்னும், வினை யடையெலலாம வினைககு முன்னும அமைகின்றன.

(எ டு) அருமை மகள் – 'அருமை' (பெயரடை-adjective)
நன்றாகப் பாடினள் – 'நன்றாக' (வினையடை – adverb).

ஆங்கிலம் போன்ற மொழிகளில் வினைக்குப் பின் வினையடை வரும்.

(எ டு) Raju ran fast.
வடமொழியிலுள்ள பெயரடை, முதலியன திணை, பால் ஏற்கும். (Declension of adjective)

(எ டு) अच्छा लड़का
अच्छी लड़की

(15) 6-ஆம் வேற்றுமையுருபும், எல்லைப் பொருளைத் தரும் 5-ஆம் வேற்றுமை உருபும் பெயர் கொண்டு முடிவன. பிற வேற்றுமையுருபுகள் வினைகொண்டு முடிவன. 4-ஆம் வேற்றுமையில் சிலவிடங்களில் உருபு பெயர்கொண்டு முடிதலும் உண்டு

(எ டு) எனது உயிர்—6-ஆம் வேற்றுமை விரி (Genitive)
மதுரையின் வடக்கு சென்னை–5-ஆம் வேற்றுமை விரி (Delimitive)
நான் அவருக்கு மகன்–4-ஆம் வேற்றுமைவிரி (Dative)

(16) "இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல" (தொல. சொல் 19)—தமிழ் மரபு.

(எ. டு) 'நீர் தண்ணிது'
'உயிர் உணரும்'.

மாறாகச் செயற்கைப் பொருளை ஆக்கத்தோடு கூறுவர்.

(17) வண்ணச் சினைச் சொல்லில், பண்புச் சொல்லும், சினைச் சொல்லும், முதற்சொல்லும் வழக்கினுள் மயங்கி வாரா.

"அடைசினை முதல்என முறைமூன்றும் மயங்காமை
நடைபெற் றியலும் வண்ணச் சினைச்சொல்".
(தொல். சொல். 26)

(எ. டு) செங்கால்நாரை.

செம்மை – பண்படை (Quality noun)
கால் – சினைச்சொல் (Part of the body)
நாரை – முதற்சொல் (Noun form)

ஆனால், செய்யுளின்கண் இது மயங்கி வரும்

"கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த
செவிசெஞ் சேவலும் பொகுவலும் வெருவர
வாய்வன் காக்கையுங் கூகையுங் கூடி" (புறம் 238).

(18) இத்துணை யென்று அறியப்பட்ட சினைச் சொல்லுக்கும், முதற் சொல்லுக்கும் வினைப்படு தொகுதிக்கண் உம்மை கொடுத்துச் சொல்லல் வேண்டும்.

"இனைத்தென அறிந்த சினைமுதற் கிளவிக்கு
வினைபடு தொகுதியின் உம்மை வேண்டும்"
(தொல் சொல் 33)

(எ டு) "பன்னிரு கையும் பாற்பட இயற்றி" (திருமுருகு 118)
"முரசு முழங்குதானை மூவருங் கூடி" (பொருந–54)

(19) சிறப்புப் பெயரும் இயற்பெயரும் இணைந்து வருங் கால் இயற்பெயர் சிறப்புப் பெயருக்கு முன்னர் வராது.

"சிறப்பி னாகிய பெயர்நிலைக் கிளவிக்கும்
இயற்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்"
(தொல். சொல். 41)

(எ. டு) தெய்வப் புலவர் திருவள்ளுவர்.
செந்தமிழ்க் காவலர் சிதம்பரநாதனார்

(20) "இரட்டைக் கிளவி இரட்டிற்பிரிந் திசையா" (தொல் சொல். 48)-என இரட்டித்து நின்று பொருளுணர்த்துஞ் சொற்கள் பிரிந்து தனியே வழங்கமாட்டா.

(எ டு) "குறுகுறு நடந்து சிறுகை நீட்டி" (புறம்–188)

(21) உணர்ச்சி ஈடுபாட்டால் பேசுவோன் கேட்போனின் கருத்தைக் ஈர்ப்பதற்காக ஒரு சொல்லையே அடுக்குத் தொடராகக் கூறுதலும் உண்டு.

(எ. டு) பாம்பு பாம்பு.

L. Kellner என்பார். "Tantalogy is the natural vehicle of emphatic speech"[6] எனக் கூறுவர்.

---

[6] L. Kellner–Historical Outlines of English Syntax P 21

(22) ஆங்கிலத்தில் சொற்களை இணைத்தற்கு 'and' என்ற இணைப்பு இடைச்சொல் (conjunctive particle) வரும். அச்சொல் பல பெயர்கள் தொடர்ந்து வரும் போது ஈற்றில் மட்டும் வரும்.

(எ-டு) The Chera, the Chola and the Pandya ruled the Tamilagam

ஆனால், தமிழின்கண் 'உம்' இடைச்சொல் ஒவ்வொரு பெயர்ச் சொல்லீற்றிலும் வரும்.

(எ-டு) சேரனும், சோழனும், பாண்டியனும் தமிழகத்தை ஆண்டனர்.

(23) செப்பாக வரும் சொற்றொடருக்கும் (Statement), வினாவாக வரும் சொற்றொடருக்கும் (Question) வேறுபாடு இல்லை. செப்பாக வரும் சொற்றொடரின் ஈற்றில் ஆ, ஓ முதலானவை வினா இடைச்சொற்களாகச் சேர்க்கப்படும் (அல்லது) செப்புச் சொற்றொடரில் சுட்டுப்பெயர் நிற்குமிடத்தில் வினாப்பெயர் அமைக்கப்படும்.

(எ-டு) சாந்தி வந்தாள் - செப்பு (Statement)
சாந்தி வந்தாளா? - வினா. (Question)
அங்கே கண்டான். - செப்பு (Statement)
எங்கே கண்டான்? - வினா (Question)

(24) தமிழ்மொழியில் அடையாக வந்து தழுவும் சொற்கள் தழுவப்படும் சொற்களுக்கு முன்னர் வரும். பெயரெச்சம் பெயர்ச்சொல்லுக்கு முன்னும், வினையெச்சம் வினைச்சொல்லுக்கு முன்னும் வரும்.

(எ-டு) நல்ல எண்ணம். — R P + Noun.



பெயரெச்சம்

சுவைத்து மகிழ்ந்தேன் — V. P + F V.



வினையெச்சம்.

இச்சொற்றொடர் முறை தொன்றுதொட்டு நம்மொழியின்கண் நிலைத்து வருவதொன்றாகும்.

(25) ஆங்கிலம் போன்ற மொழிகளில் சொற்கள் சொற்றொடரின் இன்னின்ன பொருள்களை உணர்த்துதல் மரபு.

(எ-டு) John sees David.
S P O

இதன்கண் சொற்கள் நிற்கும நிலையைக கொண்டு எழுவாய, செயப்படுபொருள் ஆகியவற்றை அறிநது கொளள முடியும. சொறகளை மாறறினுல பொருள மாறுபாடமையும ஆனுல தமிழின்கண வேறறுமையுருபுகளைச சொறகளோடு இணைததுப பொருள வேறுபாடடை எளிதாக உணாததுகின்றனர்.

C. F Hockett என்பவர், 'சொற்றொடர்' என்பதற்கு விளக்கங் கூறுங்கால், "A sentence is a grammatical form which is not in construction with any other grammatical form: a constitute which is not a constituent"[7] என்பாா. பகுதியாக இல்லாமல் ஓா ஆககமாக இலககண நீர்மையில அமைவதே சொற்றொடரின் தன்மையாம. ஆதலால் எழுவாய பயனிலை -(SP)- என்று அமைதலே சிறந்தது எனலாம. பொதுவாகச சொற்றொடரினை நானகு கூறுகளாகப் பகுபபா

(i) செப்பு – Statements (ii) வினு – Questions.
(iii) ஏவல – Commands (iv) வியபபு – Exclamations

சொற்றொடா அமைபபினை அல்லது முறையினை நாம (Syntactic process) நான்கு வகையாகக கொளளலாம.

(i) தொடா முறை – Order.

(ii) தொடா அமைபபு – Government.

(iii) தொடா இயைபு – Concord

(iv) மாடடெறிவு – Cross-reference.

சொற்றொடரில் எழுவாய, பயனிலை என்று ஒரு சீராக வருதல தொடா முறையாம் குறிபபிடட சில வடிவஙகளை முறையாக வைத்துப பொருள உணாததுதலைத் தொடர் அமைபபு முறை எனலாம. எசசஙகள பெயரோ, வினையோ கொண்டு முடிதலை நோககுக நம மொழியில எழுவாயும பயனிலையும் திணைபால எண் இவறறின இயைபைச செவவனே போற்றுவதால அதனைத தொடா இயைபு எனலாம. சொற்களின் நிலை உணாநது ஏற்ற இடததில் மாட்டெறிநது பொருள கோடல இறுதி நிலையாம. ஆறறொழுககு, கொணடு கூட்டுப் பொருள கோள இதன்கண அடஙகும.

"சுரை ஆழ அமபி மிதப்ப" — மொழிமாறறு.
"சுரை மிதபப அம்மி ஆழ" — ஆறறொழுக்கு.

[7] C. F Hockett – A Course in Modern Linguistics. (P. 199).

இவையன்றி, திராவிட மொழிக்கு உரிய சிறப்பான பெயரெச்சப் பாங்கு, வினையாலணையும் பெயர் நீர்மை, குறிப்பு வினையின் தன்மை, ஐயப் பொருளில் இடைச் சொற்கள் வந்து அமைதல் முதலியன தமிழ்த் தொடரியலை மாண்புறுத்தும் எனல் மிகையன்று

(எ-டு) உயர்ந்த பிறப்பு. — Relative Participle.
பயின்றவள் வென்றாள் — Participial Noun.
நனி நன்று — Implied Finite Verb.
அணங்குகொல் ஆய்மயில்கொல். — Particles denoting doubtful object

இன்றைய மொழியியல் அறிஞர் பலர் சொற்றொடரியலைத் தனியே எடுத்து விளக்குங்கால் பலவகை மொழிக் கூறுகளையும் பிணைத்துப் பேசுவர் Simeon Potter என்பவர், "Sentences may be analysed segmentally into phonological units called phonemes and syllables, into morphological units called morphemes and words, and into syntactic units called phrases and clauses At the same time sentences may be described suprasegmentally in respect of the prosodemes of length, stress and pitch; and intersegmentally in respect of the prosodeme of syllabic transition or juncture" [8] என்று மொழிவர் சொற்றொடரியலில் ஒலியன், அசை, பொருளசை, சொற்கள், தொடர்மொழி, தொடர்க் கூறு என்றும், அளபெடுத்தல், அசைஒலியழுத்தம், குரல் அழுத்தம் என்றும், அசைமாற்றம், இணைப்போலி என்றும் பல்திறவகையால் பாகுபடுத்திக் காட்டுதலை இதனின்றும் உணரலாம். இவ்வாறு சொற்றொடரிலக்கண அமைதி, தனிப்பட்ட ஒரு மொழியின் சீர்மை, பெருமைகளைப் பாங்குறப் பேணி, மக்கட் குரலின் ஒருமித்த உணர்வோடு ஒன்றி, மொழியின் உயிர்த் துடிப்பாக நின்று ஒளிர்தலைக் காண்க.

---

[8] Simeon Potter – Modern Linguistics. P 105

# 15. 'சொல்லும் பொருளும்'.
# Semantics.

ஒரு மொழியின்கண் கால நிலைக்கு ஏற்றவாறு சொற்பொருள் நிலை மாறுதல் இயல்பு. அண்மைக்கால மொழியியற் கலை (Linguistics) வளர்ச்சி பெற்ற பின் மொழிச் சொற்கட்குரிய பொருட் சிறப்பினைத் தனியே எடுத்து விளக்கும் அறிவுத்துறை உருவாக்கப்பெற்றது. இதனைச் 'சொல்லும் பொருளும்' அல்லது 'சொற்பொருளியல்'—'Semantics' என்று அழைக்கின்றோம். அறிவு மனம் படைத்த மக்கள் இடம் பொருள் ஏவல் இவை உணர்ந்தே ஒரு சொல்லினை உரிய பொருளில் வழங்கத் தலைப்படுதலை நாம் உணர்வோம். "Usage is the highest authority in matters of language"[1] என்று Otto Jespersen கூறுவார்.

> "If Usage wills it so, to whom belongs
> The rule, the law, the government of tongues".
>
> —Horace

மொழி தனித்தன்மை வாய்ந்த படைப்பன்று (No language is a unique manifestation) மக்கள் இனம் ஒன்றி நின்று உருவாக்கியது ஒன்றாதலின், சமுதாயத்தின் தூண்டுதல் காரணமாக அதனைப் பேசுவோர் மனநிலைக்கு ஏற்றவாறு சொற்பொருள் அமையும் (All meanings are arbitrary and socially induced) பழைய ஆங்கிலச் சொல்லாகிய (Old English) 'maenan' என்பதன் திரிந்த வடிவமே 'to mean' என்னும் வினையாம். சொற்கள் பொருள் தருங்கால தம் நிலையில் பெரு விளக்கங்களைத் தாங்கிப் பல பொருள்களைத் தரும். "It is no exaggeration to say that every word represents an elaborate complex of meaning"[2] என்பர் G P. Zipf என்னும் அறிஞர்.

அடிப்படையான தனித்த அமைப்புகளைக் கொண்ட மொழியில் சொற்பொருள் மாற்றம், வடிவமும் அதன் செயற்

---

[1] Otto Jespersen—Mankind, Nation and Individual. P 110

[2] G K. Zipf — The Psycho—Biology of Language P 235.

கூறும் போல மக்கள் மன நிலைக்கு ஏற்றவாறு அமையும். அடிப் படைச் சொற்றொகுதி இலக்கண நெறி முறைகளால் பேணப் பட்டு வருதலின் புறத்தே நிகழும் ஆதிக்க நிலைக்கு முழுமையாக இடம் கொடுக்காமல் இருத்தலைக் காணலாம். "A language consists of a large number of fundamentally independent features, the individual forms Since, in principle, the relation between sound and meaning, corresponding to form and function, respectively, is arbitrary There is a central core of basic vocabulary and grammatical elements in language which is strongly resistant to outside influence"[3] – என்று Joseph H Greenberg கூறுவார். சமுதாய மாற்றங்கட்கு ஏற்ப நிறை பொருள் தரும் உயர் சொற்கள் புது நிலைகளைத் தருதல் கண்கூடு. "Words which were once pregnant with meaning may either put on new significations in consequence of social change"[4] என்று A H Sayce கூறுவது அனைத்து மொழிகட்கும் பொருந்தும்.

எனவே சொற்பொருள் என்பது பொருளின் நீர்மையை உணர்த்துவதாய், அறிவியற்கலையாகவும், தத்துவப்பொருளாக வும், எண்ணக் கோவைகளை ஒழுங்குபடுத்த வல்லதாகவும் ஒளிரும். "The name 'Semantics' has been given to the study of the concept of meaning, and semantics is at once a science, a philosophy, and a kind of discipline of thought which has many applications in science outside linguistics[5] என்று A E Warbyshire கூறுவதை நோக்குக. எத்தகைய பொருளைக் கூறும் (morphological element) சொற்பொருள் மாற்றத் தினைப் பெறும் என்பது வெளிப்படை.

(எ.டு) 'Superman'
'Superstition'
'Superstructure'

இவற்றுள் 'Super' என்னும் முன்னடை, பொருள் மாறுபாட் டிற்குத் துணை புரிதலைக் காண்க.

---

[3] Joseph H. Greenberg–Essays in Linguistics P 73–74

[4] A. H. Sayce–The Principles of Comparative Philology P. 300

[5] A. E. Warbyshire – A Grammar of Style. P 144.

உணர்வுகள் உந்தப்படுவதால் நாம் சில சொற்களில் வினையடைகளை மிகுதியாகப் பயன்படுத்துகின்றோம் "Thank you very much indeed" என்பதைக் காணக (Intensive adverbs show a tendency to pile up) 'Literally' என்னும் ஆங்கிலச் சொல் 'Literature' என்னும் சொல்லடியாகப் பிறந்து முழுமையான பொருள் நல்கி உலக வழக்கிடையே தருதலும் சொற்பொருளியலே

(எ. டு) 'He literally devoured the morning paper'.

ஒரு சொல்லின் பொருள் காலப் போக்கில் பெருகுதலும் உண்டு

(எ. டு) human → humane

ஒரு பொருளைத் தரும் பலவேறு இனமொழிச் சொற்களை ஆங்கிலத்தில் நாம் காணலாம்

| (எ டு) | Kingly | (English) | — Synonyms |
|---|---|---|---|
| | Royal | (French) | (ஒரு பொருள் பிற |
| | Regal | (Latin) | சொற்கள்.) |

நம் நாட்டில் 'Congress' என்ற சொல் வழக்கு ஒரு தனிப் பட்ட கட்சியைக் குறிக்க, அமெரிக்காவில் அது 'Parliament' என்னும் பொருளைத் தருகின்றது ஆதலின்றல மொழியின் பண்புக்கு ஏற்றவாறு ஒவ்வொரு மொழியின்கண்ணும் சொற்கள் வழங்குதலை நாம் அறியலாம் ஒரு மொழியின்கண் மூன்று நிலைகளாகச் சொற்பொருள் மாற்றங்கள் நிகழும் என்று வரையறுப்பர்

(i) சொற்பொருள் சுருக்கம் — Restriction
(ii) சொற்பொருள் விரிவு — Expansion
(iii) சொற்பொருள் வேறுபாடு— Transference.

இவற்றை முறையே Specialisation or narrowing, Generalisation or widening, Displacement or shifting என்பர்.

நம் திராவிட மொழியின்கண் சிறப்பாகத் தமிழில் இலக்கண நெறிகள் இலக்கிய மரபுகளை நனகு பேணி வருதலைக் காணலாம். 'தமிழ் மரபு' என்வொன்று காக்கப்படுவதாலதான் சீரிளமைத் திறத்தை மெய்மமறந்து வாழ்த்தி வருகின்றோம் ஒருமை, பன்மை நிலைகள், திணைபால் விகுதிகள் ஆகியவை

எலலோரிடமும் செவவனே வழஙகப்படுகின்றன. 'ஒருவன்', 'ஒருததி' என்பன உரிய வழககமாம 'ஒருவள' எனபது வழக கனறு. 'எழில', 'அழகு' எனபன ஒனறலல. எழுசசி எனபதனைப பொருளாகக கொணடு எழுகின்ற அழகு - வளாகினற அழகு - 'எழில' எனப பெறும.[6] 'காமம', 'காதல' எனபன இன்று பொருள வேறுபாடு பெறறுவிடடன. பழஙகாலததில காமம குறறமறற காதலாக இருநதுவர, இன்று ஒவவாத ஒன்றினை அச சொல சுடடி வருதலைக காணலாம [7]

(1) சொற்பொருள் சுருக்கம்.

பிரெஞசு மொழியில 'auca' எனபது 'பறவை'யைப பொதுவாகக குறிததுவர, இநநாளில 'goose' எனறு சுருஙகிய நிலையில தனிதத ஒன்றினையே குறிபபிடும (1) 'பொன' எனற சொல நம மொழியில 'உலோகம' எனனும பொருளில 'செம பொன' 'கருமபொன' எனறு வழஙகி வநதது ஆனால இனறு 'தஙகம' (gold) எனறே வழஙகபபடுதலைக காணக.

(2) 'மான்' என்னும சொல விலஙகுகளைப பொதுவாகக குறிககும 'மா' எனபதனை அடியாக னகர எழுததுச சாரியை புணாநது வழஙகி வநதது இநநாளில் 'மான' புளளிமான (deer) எனற அளவுககுப பொருள் சுருஙகி அமைநது விடடது.

(3) 'நாறறம' எனனும சொல் நறுமணமுளள பொருள நலனைப பழஙகாலததில மிகுவிதது வர, இறறை நாளில, 'தீய மணததை'யே குறிபபடும அளவுககு அதன் பொருட சிறபபுக குறைநது சுருஙகி விட்டது.

(4) 'ஐயா' எனனும சொறபொருள் சுருககம மிக விநதையானது "ஐ வியபபாகும" என்பது தொல்காபபிய உரியியல நூறபா (89) பெருமை அலலது தலைமை காரணமாக இச சொல அமைநதமை வெளிபபடை.

(எ.டு) "என்னை முன் நில்லனமின தெவவிர."

(திருககுறள. 771)

"என்னை, புறகையுணடும் பெருநதோளன்னே." (புறம். 84)

'ஐ' என்னும் அடிச சொல வழியே ஐயன், ஐயை, ஐயா என்று உயாதிணை முபபாற சொறகள அமைநதன 'தமையன'

---

[6] Dr. அ சிதமபரநாதனா – தமிழோசை பககம 87
[7] „ „ பககம 87

என்பதில் 'தம்+ஐயன்' என்னும சொற புணாசசியின் தெளி பொருள காணக ஆனால இன்று சமயச சடஙகுகளில ஈடுபாடு கொணடு தலைமை ஏறறு வரும ஒரு குறிபபிட்ட சாதியாருககே அச்சொற் பொருள சுருஙகியுளளமை அறிக

(5) 'பிளளை' எனும் சொல தெலுஙகில 'பிலல' (pilla) என்றும், கன்னடததில 'பிள்ளெ' (pille) எனறும வழஙகப படுகின்றன. இளமைப பொருளைக குறிககும சொலலாகவே அஃது அமைநதது.

(எ. டு) "பாாபபும பிளளையும் பறபபவற்று இளமை"
(தொல மரபு 4)

"மகவும பிள்ளையும பறழும பாாபபும்
அவையும அனன அபபா லான." (தொல். மரபு 16)

ஓரறிவுயிரைப பிள்ளை என்பா. அதனாலதான் 'தென்னம் பிளளை' 'கமுகம பிள்ளை' என்ற வழககுகள தோன்றின இடைக காலததில 'பிள்ளை' என்னும் சொல் உயாதிணைக குழவியைக குறிததது

(எ டு) 'உருவறியாப பிள்ளையழுத பெரியோரை யென் சொல்ல'. (கமபர். அயோததியா காணடம. 100)

இன்று அடையடுககாது அது வருமாயின் ஆண பிளளையைக குறிககும 'பெணணோ பிளளையா பிறநதது', "பெற்ற மனம் பிதது பிள்ளை மனம கல்லு" என்னும வழககுகளை நோக்குக. இவவாறு இசசொல வழககின் சுருஙகிய பொருள நலனைக காணக.

(6) 'செய்யுள்' என்பது செய்யப்பட்டதாம். தொல்காப் பியச செய்யுளியலில, 'பாட்டுரை நூலே வாய்மொழி பிசி அஙகதம முதுசொல்' என்பன செய்யுளாகவே சுட்டப்பட்டன.

(எ. டு) "நாடடுதும யாமோா பாடடுடைச் செய்யுள"
"உரையிடை யிட்ட பாடடுடைச செயயுள்"
(சிலபபதிகாரம்–பதிகம.)

வீரசோழியம் யாபபுப் படலததில (நூற்பா 6) 'செய்யுள்' என்னும சொல் 'பாட்டு' என்று வழஙகபபட்டமை அறிக.

### (ii) சொற் பொருள் விரிவு :-

(1) 'நெய' எனபது பளபளபபும, ஈரமையும, குளிரச சியும உடைய பொருளைக குறிதது வநதது.

> (எ டு) 'நெயம் மாண சிவிறியா' (பரிபாடல். 6 - அடி 34)
> 'மையிருங கூநதல நெயயணி மறபப' (சிலமபு-
> அநதிமாலை. 56)

பினனா 'எள + நெய் > எணணெய' என்று எள்ளினின்றும எடுககபபடட எணணெயககு ஆகிவநதது. ஆனால, இன்று 'எணணெய' என்பது பொதுச சொலலாக மாறி, வேபபெண ணெய, தேஙகாயெணணெய, ஆமணககெணணெய, மண் ணெணணெய எனறு விரிவு பெறறு விடடது. இதனால எள + நெய > நலலெணணெய் எனறு முனனடை (Prefix) பெறலாயிறறு.

(2) தணணீர > தணமை + நீர என்பதே வழககு. இத் தணமை அடியாகத 'தணடலை' (சோலை) 'தணணவன' (திஙகள்) 'தணணம புனல' (குளிரசசி) எனபன பிறநதன. அந்நாளில் 'நீர' என்பது பொதுசசொல

> (எ டு) 'நெலலும உயிரன்றே நீரும உயிரனறே'. (புறம். 186)
> 'நீரின் றமையாது உலகெனின் யாரயார்க்கும்
> வானின் றமையா தொழுகக'. (திருககுறள் 20)

ஆறறு நீர, ஊறறு நீர, மழைநீர, வெநநீர, கண்ணீர, புணணீர என்பனவற்றை நோககுக குளிரநத நீரே தண்ணீரா தல் வெளிபபடை ஆனால இன்று சுடு தணணீர, காபபித தணணீர, தேததணணீர, கஞசிததணணீர என்று பொருள விரிவடைய அனறைய 'தணணீர' இனறைய 'பசசைத தண்ணீ ராக' மாறியது வியபபே.

### (iii) சொற் பொருள் வேறுபாடு.

(1) 'கால' என்பது நம் உடலின் நாலில் ஒரு பகுதியாம். ஆனால இன்று 'காலில இடிததுக கொண்டேன்' என்றால அடியையே (foot) குறிககும்

(2) 'தலை' என்பது மேலான பகுதி. ஆனால், 'தலை நோகிறது' எனில நாம் நெற்றியின் மேறபகுதியையே (fore-head) குறிககின்றோம

(3) 'நாட்டுப்புறத்தான்' என்பது நாட்டின் புறத்தே வாழும் ஒருவனைக் குறிக்கும் சொல்லாக இருந்தது அன்று, இன்று அப்பொருள் வேறுபட்டு இழி பொருளாக வழங்குதல் காண்க

இவையன்றி, நம் மொழியின் கண் பல்வேறு நிலைகள் உருவாகியுள்ளமையையும் காண்டல் நன்று. 'போா' என்னும் சொல் வைக்கோல் போா, வாட் போர் ஆகியவற்றைக் குறித்து நின்று, இந்நாளில் பின்னைய பொருளை மட்டும் குறிப்பிடுதல் காண்க. மாறாக, வீடு, இல், மனை என்னும் பல சொற்கள் ஒரு பொருளையே குறித்து நிற்க, இந்நாளில் 'வீடு' என்னும் சொல்லால் மட்டுமே குறிப்பிடுகின்றோம் இவ்வாறு ஒரு சொல்லுக்கு ஒரு பொருள், ஒரு பொருளுக்கு ஒரு சொல் என்ற நிலைகள் அமைந்தன

களியாட்டத்தைக் குறிக்கும் 'களி' என்னும் சொல் இன்று மகிழ்ச்சியை மட்டும் குறிப்பிடுதலைக் காணலாம் 'சூழ்ச்சி' என்பது சூழ்ந்து நிற்றல், சூழ்தல் என்று பொருள் தந்து, இன்று எண்ணங்களால் எழும் நுண் பொருள் நலனைத் தருதல் காண்க 'விருந்தே புதுமை' என்பது தொல்காப்பியம். இந்நாளில் விருந்தினா அல்லது புதியவரைக் குறிக்கும் பருப் பொருட் சொல்லாக உள்ளது

அனைத்து மொழிகளிலும் ஒரு சொல் உணாத்தும் பொருள் மெல்ல நெகிழ்ந்து பொருள் வேறுபடுதல் இயல்பாகவே அமையும். ஒரு சொல்லின் பொருட் சிறப்பைத் தெளிவுறுத்த முற்படுங்கால் அஃது உருவகச் சொல்லாக அமைதலும் கண் கூடு மக்கள் மனம் வளாச்சி மிகுதியால் தாக்குறும் பொழுது ஒரு சொல்லின் பொருள் தனித்துச் சிறந்து நிற்கும் மக்கள் அறியாமை காரணமாகச் சில சொற்கள் தம் உண்மைப் பொருளை இழந்து விடும். பழையன கழிந்து புதியன புகுதல் கால வழுவின்மையால், உலக மொழிச் சொற்கள் பலவேறு மாறுபாடுகளைக் காண அது மொழிப் பண்பாக மலாந்து சிறத்தல் அறிவு நாகரிகமன்றோ!

# 16. 'மொழிச் செல்வாக்கு'.
# The Influence of Language.

மக்களின் வாழ்விலே பிறந்து, மக்களால் வளர்க்கப்பட்டு, மக்களின் வாழ்வை நாகரிகம் உடையதாக உயர்த்தி வரும் மொழி ஓர் அரிய கலையாகும். ஒரு மொழியின் சொற்பொருள் வளமும், வறுமையும், பேசுவோரின் மன வளத்தையும், வளமின்மையையும் ஒட்டி அமைவதாகக் கூறுவர். உலகத்து மொழிகள் ஒவ்வொன்றும் பலவாண்டுகளாகப் பல தலைமுறையினரால் வளர்க்கப்பட்டு அவர்களின் பேருழைப்பினை உறுதுணையாகக் கொண்டு இன்று பேரமைப்பாகத் திகழ்கின்றது. "Every language in the gross is an institution, on which scores of hundreds of generations and unnumbered thousands of individual workers have laboured"[1] என்று Whitney அவர்கள் குறிப்பிடுவர். இம்மொழியியலை உள நூல் என்று கருதுவாரும் உளர். உலகத்துப் பொருள்கள் தொடக்கத்தில் எளிதாயிருந்து பின் பலவகை அமைப்புகளைப் பெற்று இன்று வளர்ச்சி பெற்றுள்ளன. ஒரு மொழியினர் பெற்றிருந்த பண்பாடும் நாகரிக வளர்ச்சியும் இத்தன்மையன என்பதை அம்மொழியின் சொற்கோவையால் உணரலாம்.

ஓர் இனத்தாரிடமிருந்து மற்றோர் இனத்தார் சமயம், நாகரிகம், மொழி ஆகியவற்றைப் பெறுகின்றனர். அரசியல் காரணமாகவோ, சமயம் காரணமாகவோ, கலையாக்கம் காரணமாகவோ மக்கள் பிற இனத்தாருடனும், நாட்டினருடனும் பழகும்பொழுது மொழிகளிடையே கலப்பு ஏற்பட்டு வருதலை நாம் காணலாம். (Inter-mixture of language due to migration of people)

இன்றைய நிலையில் ஒரு மொழி பேசுகின்ற மக்கள் பிற மொழிகளைப் பேசும் மக்களோடு தொடர்பு கொள்ளாமல் தனித்து வாழ இயலாத அளவுக்கு நம் வாழ்க்கைப் போராட்டம் பெருகி வருகின்றது. காலச் சூழலுக்கு அடிமையாகாமல் தனித்த வாழ்வு காண நம்மனோரால் இயலுமா? ஆனால் பிற மொழியினரோடு சேர்ந்து பழக வேண்டியுள்ளது என்ற ஒரே காரணத்தினால் மிகுதியான அளவுக்குப் பிற மொழிச் சொற்களை நம

[1] W D Whitney – The Life and Growth of Language. P. 309.

மொழிககண புகுததிஞல, நம் மொழியின் தனிதத ஆற்றலும், பெருமையும இழநது விடும பணடைய மொழி வேறு, இனறைய மொழி வேறு என்னும இருநிலைகள ஏறபடடு விடும. இதறகு மாருகப பிற மொழிச சொற்களைக கலததலாகாது எனறு மொழி வெறி காரணமாக நாம இருபபின, இவவுலக வளாசசியோடு ஒன்றி நின்று நம மொழி வளராது தேஙகி நின்று பேசசு வழககறறுப போய விடும (loss of spoken forms or colloquial dialects) எனறு அஞசுவோரும உளா எனவே ஒரு மொழி வளாசசிககுப பிற மொழிச சொறகள ஓரளவு தேவை ஆஞல இனறியமையாச சூழலில ஓரளவுககுடபடடு பிற மொழிச சொறகளைக கடன் வாஙகுதல என்பது இழிநததனறு என அமைதி காணபோர் மிகப பலர் ஒரு மொழியின செலவாககால அதன் சொறகள பிற மொழிகளில கலததல என்பது மிக எளியது பனனெடுஙகாலமாகவே இப பிற மொழிக கலபபு அவவநநாடடுச் சூழலுககு ஏறறவாறு அமைநது வருதலை நாம மொழி வரலாறறிடையே காணலாம

ஒரு மொழிக குடும்பததுளளேயே பேசசு வழககின் காரணமாக நேரும மாறறஙகளை ஒடடிச சொறகள கடன வாங்கபபட்டு வழஙகுமாயின, அதனைக கிளைமொழிககலபபு (Dialect borrowing) எனலாம (The borrowed features come from within the same speech area ) பிற மொழிகளிலிருநது நாகரிகப பணபாடடுக கலபபுறவால புகும சொறகளைப பண்பாடடுக கலபபு (cultural borrowing) எனபா. (Words come from a different language due to the exchange of cultural aspects) இவவாறு சொறகள கடனுக வாஙகபபடும பொழுதோ, தாமாகப புகுகினற பொழுதோ, மொழி நிலையில சொறகளிடையே ஒலியன மாற்றங்கள (phonetic changes) ஏறபட, அதனுல ஒலியன அமைபபு முறையே (phonetic pattern) மாறும ஒரு மொழி வரலாற்றில கடன வாஙகிய முறைகளைபபறறிய ஆயவு நிகழின், நாம அமமொழி பேசும மககளின் பணபாடடு வரலாறறையும (Cultural history) அதனினறும அறிநத கொளள இயலும்.

'கடன வாஙகல' அலலது 'borrowing' என்னும சொல லிறகு விளககம தரும Joseph H Greenberg என்பவா, ஒலி அமைபபிலும, சொறபொருள நிலையிலும வேறு பாடு காடடாது பிறமொழிச சொறகளை ஒரு மொழி ஏறறுக கொளளும பாஙகு எனறு குறிபபிடுவா "Borrowing, in accordance with normal usage, is defined here as the acceptance in

one languagc of a form, in both its sound and its meaningful aspects, from another language, though usually with both phonetic and semantic modifications''.[2]

நம தமிழ மொழியில மிகப் பழங்காலந்தொட்டே பிற மொழிச சொறகள புகத தொடங்கின ஆனல அறபபழமையும, இலககணச செறிவும மிகக தமிழ மொழி, பிற மொழிச சொற்களை அவ்வாறே ஏற்றுக கொள்வதில்லை. தன் ஒலிமுறைக கேறபவே உருமாறி வழங்குமாறு ஆககிக கொள்ளும அளவுக குத தமிழிலககணம கட்டுபபாடு விதித்துள்ளமையை நாம் காணலாம. தொலகாபபியா,

> ''வடசொற் கிளவி வடவெழுத தொரீஇ
> எழுததொடு புணாநத சொலலா குமமே''
> —(சொல். 401)

என்று நூற்பா அமைதது விதி வகுததுளளாா எனவே யாதொரு வேறுபாடும கொளளாமல, ஒலி மாறுபாடும இலலாமல பிற மொழிச சொறகளைக கடன வாஙகிக கொளளலாம என்ற கருதது நமமனோரால ஒததுக கொளளபபடுவதில்லை அழகு உணாசசி வேணடியோ, தேவையின்றியோ சொறகளைக கடனுக வாஙகும பொழுது எதிாபபு எழுதல இயலபே பழஙகாலந தொட்டே தமிழ மொழியில வடமொழிச சொறகள் புகுநதன எனினும, தமிழ மொழியைத தன் வழியில திருபபிககொள்ளும ஆற்றல் வடமொழிககு இலலாது போயிற்று. தறபவம், தற்சமம எனும இரு நிலைகளில் வட சொற்கள் தமிழிடையே புகுந்தன என்று நனனூலாா வடமொழியாககததினகண குறிபபிடுவர். தமிழுககே உரிய சிறப்பெழுததுககள் ''ற ன ழ எ ஒ'' என்பன. பிற எழுததுககள பொதுவானவையாகக கருதப்பெறறன. ஆனல் ஈசான தேசிகா என்பவர் தமது இலககணக கொத்துரை யில,

> ''அன்றியும தமிழ்நூறகு அளவிலை அவற்றுள்
> ஒன்றே யாயினும தனித்தமிழ உண்டோ?
> அன்றியும ஐநதெழுத்தால் ஒருபாடை என்று
> அறையவும நாணுவா அறிவுடை யோரே''—

என்று கூறியுள்ள நிலை மிகவும் இரஙகத்தக்கது. புலவர் பெருமககள் வடசொற்களைப புறககணிககவும, பாமரர் வட சொற்களை மிகுதியாகக கொண்டனர்.

---

[2] Joseph H. Greenberg - Essays in Linguistics -P. 69

தமிழ் வடமொழியிலிருநது சொறகளைக கடன் வாஙகியதைப போலவே வடமொழியும தமிழிலிருநது சொறகளைக கடன் வாஙகியுள்ளமையை அறிஞா பலா கீழே காட்டிக கூறுவா "Dravidian scholars like Dr Caldwell, Gundert, Kittel and others have discussed the question of borrowings in their works Dr Caldwell seems to be more inclined towards the ultimate relationship of the Dravidian with the Indo-European Dr Sten Konow is inclined to think the Dravidian languages form an independent group by themselves Dr Gundert while admitting borrowing on either side, seems to echo the ideas of Kumarila bhatta, as regards Dravidian borrowings and the derivations offered to Dravidian words"[3] என்று K. Ramakrisnayya கூறுவதைக காணக

சஙக இலககியஙகளிலும, காபபியஙகளிலும, பிறபட்ட சமய இலககியஙகளிலும வட சொறகள் காலததிறகு ஏறற வாறு புகுநதும பெருகியும உள்ளன உரையாசிரியாகளுள் சேனாவரையா வட மொழிப போககை மேறகொணடனா பரிமேலழகா வட மொழி மதம பறறினா பவணநதியாா, குண வீர பணடிதா ஆகியோா வட சொல இலககணப போககைத தழுவினா அணி இலககணம வட நூல பறறியது சைனா களும, புததாகளும வட மொழி தமிழுடன் கலககக காரண மானவாகள் சமஸகிருதம வாயிலாகவும, பாலி மொழி வாயிலா கவும, ஆரிய மொழி தமிழ மொழியுடன கலநதுள்ளது. பலல வாகள் காலததில் வட சொறகள் பேரளவில கலககத தொடங கின பினனா சஙகரரும, இராமாநுசரும, தஙகள் சமயக கோடபாடுகளைப பரபப வேணடி வட சொறகளைக கையாணட னா. மணிபபிரவாளம என்ற தனிபபட்ட நடை ஒன்று உருவாகி விடவே, அம்முறையை ஒட்டிப பல வட சொற்கள் ஆரியததிலிருநது தமிழின் கண புகலாயின இவ வட மொழிக கலபபு அமையவே நம தமிழிறகுச சில இழபபுகள் நோநதன

(i) திராவிட ஒலிததிரிபும, சொறறிரிபும

(ii) திராவிடச சொறகளின வழககழிவும, சிதைவும.

(iii) திராவிடச சொல வழி ஐயபபாடு

இனி, நம தமிழ மொழி வரலாறறில் பிற மொழிச செல வாககால உருவான கலபபுச சொறகளை நிரலே காணபோம

[3] K Ramakrishnayya-Dravidian Cognates-Introduction (P. ix)

(1) அரசியல கலபபு.- (Political borowings) கவுன்சில், அசெமபிளி, கலெகடா, ஜடஜ, தாசிலதாா, மேயா, காாபபரேஷன்.

(2) வணிகக கலபபு - (Commercial borowings) டன் அவுன்ஸ, பவுணடு.

(3) சமயக கலபபு ·- (Religious borowings) அர்சசனை, அபிஷேகம, பிராாததனை, விககிரகம, நைவேததியம.

(4) சமூகக கலபபு :- (Social borowings) விதவா விவா ஹம, பாலய விவாஹம

(5) பிற மொழிக கலபபு :- (Borrowings from other languages )

(i) சமஸ்கிருதம - (Sanskrit) மனு, சிசு, சீடன, தாமம, ரிஷபம, தனுசு, நாசம, ஆசனம, மோகம, பக்ஷி

(ii) இநதி .- (Hindi) அசல, அபின், ஹல்வா, ஆஜா, ஜமுககாளம, ஜாபதா, ஜலதி, ருசு, சபாஷ.

(iii) போாததுகீசியம -(Portuguese) அலமாரி, ஜன்னல, பாதிரி.

(iv) ஆஙகிலம :- (English) உயில, மெயில, லயன், ாரஙகி

(v) பொசியன் ·- (Persian) திவான், தாபாா, பஜாா, மேஜை, சாபத

(vi) அராபியமொழி :- (Arabic) சாஹிப், ஸலாம, ஆலகஹால, காபபி

(vii) பிரெஞசு .- (French) பீரோ.

(viii) சீனமொழி :- (Chinese) டீ.

(ix) இலததீன :- (Latin) ஒயின்.

(x) இததாலிய மொழி (Italian) பியானோ, ஸோலோ, பேஙகு

தொல்காபபியததில சாதி, தாபதப பாககம என்ற சொற் கள் உளளன. தொகை நூலகளிலும, திருககுறளிலும் வட சொலலாடசி குறைவாகவே காணபபடும. சிலபபதிகாரததைக காடடிலும, மணிமேகலையில் மிகுதியான வடசொற்கள் உளளன. காரணம மணிமேகலே சமயக காபபியமாக அமைநதமையேயாம. இவ்வாறு கால நிலைககு ஏற்றவாறு வடசொல்லாட்சியின பெருககம அமைநத தன்மையை நாம இலககிய வரலாறறினுள காணலாம. 'ஈடு' என்னும நாலாயிர திவவியப பிரபநததின்

உரையபகுதியில வடசொற்கள் மணிபபிரவாள நடையில் பரவ லாகப பெருகியுள்ளமையை நன்கு அறியலாம

மேலை நாட்டார வருகையால் நம மொழியினகண பிற மொழிச் செலவாககு பெருகியது டசசுககாரா, பிரெஞசுககாரா, போாததுககீசியா, ஆஙகிலேயா முதலானோா வருகையால அவாகளின் மொழிச சொறகள கலநதன தமிழ நாட்டில் பல இடஙகட்கு அவாகள் பெயரிடுமபொழுது பிறமொழிச சொறகள புகுநது விட்டதையும காணலாம்.

(எ டு) பரஙகிமலை — St Thomas Mount
பரஙகிபபேட்டை— Port Novo.
தரஙகமபாடி — Tranquebar

இனி, பிறமொழிச செலவாககுக காரணமாக நம மொழியின் சில சொறகள் வழககொழிநது விட்டன என்பதையும அறிதல வேணடும. 'மணடலம', 'கூறறம' என்ற சொறகள அழிய, 'மாகாணம்' 'ஜில்லா' என்ற சொறகள ஆதிககம பெற்றன. ஆனால இந்நாளில 'மாநிலம' 'மாவட்டம' 'கோட்டம' என்னும் சொறகள புததுயா பெறறுளளமையைக காணக. 'கழஙகு', 'அமமானை' எனனும சொறகள அன்றைய மகளிா விளையாட்டை உணாததி வநதன. இன்று அவறறின் நிலையே நாம அறியாத ஒன்றாய நோநதுவிட்டது. மாறாக, chess, bridge, carams என்னும பிறமொழிச சொறகள வழககில பயின்று வருகின்றன. அரைமா, ஒருமா, இருமா, முநதிரி என்னும் அளவுப பெயாகள காணவிலலை. மாறாக, மிலலிகிராம, கிராம என்பன வும, பேரளவுணாததும விட்டா என்பதுவும் இன்று பயிற்சியில் உள்ளன

### வடமொழியில் தமிழ்ச்சொற்கள் : Tamil words in Sanskrit.

நம் தமிழின்கண பிறமொழிச சொறகள் வந்து கலந்தமை போலவே, வடமொழியிலும் தமிழ்ச சொறகள கலநதுளளன என்று அறிஞா கருதுவா. மொழியுலகில் தனிப்பட்ட கருததுக கட்கு இடநதரும மனப்பான்மை பெருகவேணடும வடமொழியில் தமிழச சொறகள் என்று கூறுவதே ஒரு சிலருக்கு வியபபாக இருககலாம். Dr Caldwell, Dr. Gundert முதலானோா திராவிட மொழிகளிலிருநது வட மொழி பலவேறு சொறகளைக கடன் வாஙகியுள்ளது என்பதனைத தெளிவாகக கூறியுள்ளனர். Rhys Davids என்னும் அறிஞர், வடமொழி, எபிரேயம், கிரேக்கம

ஆகிய மூன்று மொழிகளிலும் தமிழச் சொறகள உள்ளன எனபா "The three classical languages of the world viz, Sanskrit, Hebrew and Greek, contain Tamil words in the vocabulary" எனனும் அவருடைய கருத்தினை ாணடு நோககுக ஆனல கமமவாகளில சிலா தமிழ்' எனபதே 'திராவிடம' எனற வட சொலலின் திரிபு எனறு கூறி மகிழதலை நாம காணலாம. இனி, நாம வடமொழியின்கண காணப் பெறும தமிழச சொற களை ாணடுச சுருஙகக காணபோம.

தமிழ, மலையாளம இவறறில் 'அகில்' எனற சொல காணபபடும மாததை உணாததும இசசொல "குடமலைப பிறநத ஆரமும அகிலும" எனறு படடினபபாலையிலேயே குறிபபிடபபடுகிறது துளு மொழியில 'அகிலு' எனற வடிவம உணடு இசசொல சமஸகிருத மொழியிலும, பிராகிருத மொழி யிலும காணபபடுகிறதே அன்றி, வேறு இநதோ-ஐரோபபிய மொழிகளில காணபபடவிலலை ஆனல வடமொழியிலிருநது பிராகிருதம வழியாகத தமிழுககு இசசொல வநதது எனறு கூறுதல பொருநதாது

'கடக' எனற சொலலும தமிழ 'கட்டு' என்ற சொலலடி யாகப பிறநது வளையல' எனற பொருளில வடமொழிககண உளளது எனபா Dr அ சிதமபரநாதனா வடமொழியினா 'கடகா' எனபதறகுத தகக அடிச சொலலைக காடட இயலாது இடாப்படுவா 'கடினம' எனபது வடசொல என்பா. இது 'கடடி' எனற தமிழச சொலலடியாகப பிறநதிருகக வேணடும தெலுஙகில 'கடிதி', கனனடததில 'கடுகு', துளுவில் 'கடடி' என்னும் வடிவஙகள இருததலை நோககுக

'கமலம' என்ற சமஸகிருதச சொல் குவளையின் திரிபு எனலாம தமிழில 'குவளை,' கன்னடததில் 'குவளெ', 'கோவல', தெலுஙகில 'கலவா' எனனும வடிவஙகளை நோககுக. இவற்றின் அடியாகத தான 'கமலம' எனபது தாமரையைக குறிககத தோறறியிருததல வேணடும என்பா. [4]

இவ்வாறே தமிழக கலஙகல' வடமொழியில 'கலஹ' என்று காணபபடுகிறது. 'கல்' என்னும வினையடியாகப பிறநத 'கலை' என்பது தூய தமிழச சொல இதுவே வடமொழி யில 'கலா' எனறு திரிநதுளளது கூநதலையுணாததும 'குழல' என்னும சொல திராவிட மொழிகளில் காணபபடுகின்றது

---

[4] Dr. அ சிதம்பரநாதனா – தமிழோசை - பககம் 58

தமிழும, மலையாளமும் – 'குழல', தெலுங்கு – 'குருளு', கன்னடம்- 'குருள்'. இனி, வட சொல்லாகிய 'குரால' எனபது இஙகிருநது சென்ற ஒன்றே.

'கூவல்' என்பது கிணறறையுணாததும் தமிழ்ச சொல. 'குடம புகாக கூவல்' என்பது சிலபபதிகாரததில காணபபடுவது இது வட மொழி இருககு வேதததில 'கூப' எனறு காணப படுதலை நோககிக 'கூபம' என்பதே 'கூவல' ஆயிறறு என்பா துளுவில 'குவலா' என்பதையும நோககுக இபபழமையான சொல எவவாறு வட சொல்லாக இருககக கூடும? நம தமிழ 'தண்ணுமை' என்பது தான் வட மொழி 'டிண டிம' எனக கூறுவா

**T Burrow** என்றும் இன்றைய மொழி அறிஞா தம முடைய 'The Sanskrit Language' எனனும நூலில இருககு வேதததில காணபபடும தமிழச சொறகளைக குறிபபிடுகின்றா. தமிழில் உள்ள உலககை, குடம, வலம, மயில, மாலை, முரசு, வள்ளி, உடுககை முதலான சொறகள வடமொழியில் முறையே **ulūkhalā, kuta, bala, mayūra, mālā, muraja, valli, hudukkā** என இவவாறு புகுநதுளளமையைக காட்டுவா.[5]

**"On the other hand, it is important to note that there is a small nucleus already found in the Rigveda Such are ulūkhalā: ...It is clear that as for as Sanskrit is concerned the active period of borrowing from Dravidian was well over before the Christian era"[6]** எனபாா பேராசிரியா **T Burrow** அவாகள இவவாறு மொழிககலபபு என்பது ஒரு நாட்டு வரலாறறின் சூழலை அடியொற்றி அமைவதை நாம நன்கு சிநதிததுப பாாககவேணடும

சொற்களின் பிறப்பு வரலாற்றை இலககண நெறிப்படி நின்று ஆராயநது அவை எம்மொழியைச சாாநதவை என்று கூறலாம. 'எவவகையிலேனும ஒரு சில சொறகள பிற மொழி யினினறும வநது கலததல் இயலபு' என்பா மொழி நூலாா **J Vendryes** என்பவா, **"Contact between languages is an historical necessity"** [7] என்று கூறுவர். ஆயினும பிற மொழிச

---

[5] திரு. கோ. இராமச்சநதிரன் – பிற மொழிகளில தமிழ்ச சொல்லாட்சி பககம் 35

[6] **T Burrow -The Sanskrit Language P** 386

[7] **J Vendryes-Language. P.** 280.

சொற்களை வரையறையின்றி எககாலததிலும் எநநூலிலும் புகுததுவது தவறாகும பிற மொழிச சொறகள புகாவணணம காததல மிகவும அரிதாகும அவவாறு மொழிக கலப்பு ஏற படும பொழுது, இரு மொழிகளில செலவாககு உடைய மொழி வாழப் பிறிதொன்று அழியும. அரசியல் துறையில செல வாககுக காரணமாக ஆஙகில மொழி அனைததுலக மொழியாக (The International Language) இன்று தகுதி பெற்றுளளமை யைக காணக மொழிபெயாபபாளாகளின் சோமபல காரண மாகவும மொழிககலபபு அமையும

இமமொழிக கலபபில் பொருள்களின் பெயாகளும, பணபுப பெயர்களும மிகுதியாகக கலககும. வினைசசொற்கள குறைநத அளவிலேதான் கலககும. இடைச சொறகளைக கடன் வாஙகு தல அரிது துணைவினை. வேறறுமை உருபுகள, வினைவிகுதிகள ஆகியவை கடன வாஙகப பெறுதலிலலை பிற மொழிச சொற் கள வரையறையின்றிக கலககப பெறறுளளதாகக கூறபபடும ஆஙகில மொழியிலும இலககணக கலபபிலலை ஆஙகில மொழி யின் இலககணக கூறுகள இடைச சொறகள அனைத்தும (Anglo Saxon) எனபதினின்றும பெறறவைகளே அன்றிப பிற மொழியிலிருநது வநது புகுநதவையலல என்பா மொழியியலாா. ஒரு மொழி பேசும மககள தாஙகள பேசும பொழுதும, எழுதும பொழுதும பிறமொழி இலககண அமைபபைக கடன் வாஙகுதல இயலபு. இநதியாகள எழுதும ஆஙகிலததில இநதிய மொழிக கூறுகள் (Indianisms) மிககு இருபபதாக ஆஙகிலேயா குறைப படுவா. பகை கொண்டு நாடு கவரும மககள் தஙகள் மொழி யைப பரப்புதல் இயல்பு. ஒரு நாட்டின் அரசியல் மாறுதல்கள அநநாட்டு மொழியை விரைவாக மாறறும நாடடு மககளின் வாழவில் அமைதி நிலவும போது, மொழியின்கண மாறறம மிகவும மெதுவாக நிகழும

மன்பதையின் ஆககப் பொருளாகிய தமிழ் மொழி, ஆரியம் போல் உலக வழக்கு அழிநதொழியாது, உலக நடைககு ஏற்றவாறு வளபபம் பெற்றுச் சிறப்புற ஆவன மேற்கொள்ள வேண்டும. மொழியாககம் நாள்தோறும் புததுணாவு பெற்று, ஞானிலத்தில் கலைச சொறகளையும் உருவாக்கிப் புதுமை பூண்டு, என்றும் உயர் தனிச செமமொழியாக ஒளிரத தமிழ் நெஞ்சங்கள் கடனுற்ற வேண்டும் எனல் பேதை நெஞ்சததின் அறியாமையோ!

---

# 17. 'ஆங்கில அகராதிகளில் தமிழ்ச் சொற்கள்'.

# Tamil Words in English Dictionaries.*

Prof. Dr. அ. சிதம்பரநாதனார், M.A., Ph.D., M.L.C

ஆங்கிலமொழி உலகிலுள்ள பல்வேறு மொழிகளில் வழங்கும் சொற்கள் பலவற்றைப் பயன்படுத்திக்கொண்டிருக்கின்றது என்பது பலர் அறிந்த உண்மை. உலக மக்கள் தொடர்பு காரணமாக உலக மொழிகள் பலவற்றிலிருந்து அப்பொழுதைக்கப்பொழுது ஆங்கில மொழி கடன்வாங்கிப் பயன்படுத்திய சொற்கள் உள. சில வேளைகளில் கருதிய அவ்வப் பொருளைக் குறிப்பதற்குரிய துல்லியமான சொற்கள் ஆங்கிலத்தில் இல்லாத காரணத்தால், அவ்வப்பொருளைக் குறிப்பதற்கு அந்தந்த மொழிச்சொற்களையே ஆங்கிலம் கடன் வாங்கிக் கொண்டிருக்கிறது. சில வேளைகளில், பிற நாடுகளுக்குச் சென்ற ஆங்கிலேயர்கள் தங்கள் நாட்டிற்குத் திரும்பிச் சென்ற பிற்பாடு தங்கள் பேச்சிலும் எழுத்திலும் பிறநாட்டுச் சொற்கள் சிலவற்றை வழங்கிய காரணத்தால் ஆங்கில அகராதிகளில் இடம்பெற்றவையும் உண்டு. ஆங்கில எழுத்தாளர்களாகிய Thackeray, Southey, Rudyard Kipling, Francis Thompson முதலியவர்கள் இயற்றிய பனுவல்களில் இந்தியச் சொற்கள் சிலவற்றைப் பயன்படுத்தியுள்ளனர். கி. பி. 16–ஆவது நூற்றாண்டு முதல் 19-20–ஆம் நூற்றாண்டுவரை ஆங்கிலேயர்களுக்கு இந்தியா நாட்டோடு ஏற்பட்ட வாணிகத் தொடர்பினாலும், அரசியல் தொடர்பினாலும் ஆங்கில மொழியிற் சென்றேறி வழங்கிய சொற்கள் ஆங்கில அகராதிகளில் இடம்பெற்றுள்ளன. அத்தகைய சொற்களுள் தமிழ்ச் சொற்கள் சில இக்கட்டுரையில் எடுத்துக்காட்டப்பெறும்.

"அணைக்கட்டு" (Anicut) என்ற சொல் 1784-இலேயே ஆங்கிலத்தில் வழங்கியுள்ளது. "இஞ்சி" என்ற சொல்லும் ஆங்கிலத்திற்குச் சென்று 'Ginger' என்று வழங்குகிறது. ஜிஞ்சர் என்பது சமஸ்கிருதச் 'சிருங்கவேரா' என்ற சொல்லின் திரிபு எனச் சிலர் கூறுவர். 'சிருங்கா' என்பது கொம்பு என்னும் பொருளுடையது என்றும், "வேரா" என்பது உடம்பு என்னும் பொருளுடையது என்றும், 'சிருங்கவேரா' என்னும் சொல் கொம்பு போன்ற வடிவுடைய பொருளைக் குறித்தது என்றும்

* A paper presented at the XXVI International Congress of Orientalists at New Delhi in Jan, *1964*.

அவர் பகர்வர். மலையாள மொழியிலுள்ள "இஞ்சிவேர்" என்பதன் திரிபாகக 'சிருங்கவேரா" என்பது இருத்தல கூடு மென Col Yule என்பார் கருதுகிறார் மலையாள "இஞ்சிவோ" ஒருகாலத்தில தமிழ "இஞ்சிவோ" தான என்பது தெளிவு

"ஓலை" என்னும் தமிழச சொல "ஓல" என மலையாளத திற காணபபடுகிறது இதுவே போர்ச்சுகீசிய மொழியில "ஒலலா" (olla) என வழங்கத தொடங்கி, போர்ச்சுகீசிய-ஆங்கிலேயத தொடர்பினால ஆங்கிலத்திலும "olla" என 1622-இலேயே வழங்கத் தலைபபட்டதாகத தெரிய வரு கிறது. ஓலையோடு தொடர்புடைய 'இலை' என்னும் சொல தொகைச சொல்லாக ஆங்கிலத்திற சேர்ந்திருக்கிறது தமிழப "பசசிலை" ஆங்கிலத்தில "Patchouli (or) Patchouly" என 1845 -இல போய வழங்கத தலைபபட்டதாகத தெரிகிறது. மலையாளம, கன்னடம ஆகிய மொழிகளிலும காணபபடும "பசசிலை" மண முடைய சாறறினைத தரும ஓர இலையாக ஆங்கிலத்தில குறிக கபபட்டிருக்கிறது முபபத்திருவகை ஓமாலிகைகளில ஒன்றுகப பசசிலை மதிக்கபபட்டதென்பது சிலபபதிகாரத்தால அறியப படுகிறது

"கஞ்சி"- "Conjee" (or) "Congee" என்னும சொல 1698 முதல ஆங்கிலத்தில வழங்கலுற்றமை தெரியவருகிறது இரா ணுவச சிறைக்குப பெயராகக "கஞ்சி வீடு"-"Congee house" என ஆங்கிலத்தில வழங்கியுள்ளனர் சிறையகத்தே சோறு போடாமல கஞ்சியே வார்க்கபபட்டமையால "கஞ்சி வீடு" என்பது சிறைக்குரிய பெயராக மதிக்கபபட்டது

தமிழ்க "கட்டுமரம" 1697-இல ஆங்கிலத்தில் வழங்கத தலைபபட்டது 'Catamaram" என்ற வடிவில ஆங்கிலத்தில சென்றேறி வழங்கிய இசசொல் தோணியைக குறித்து, பிறகு தாக்கும தோணியைக குறிக்கத் தலைபபட்டது நாளடைவில ஏட்டிக்குப போட்டி செயயும பெண்டிரைக குறிக்கத தலைப பட்ட வம்புக்காரி (Cross-grained woman) என்ற பொருளில 'Catamaram' என்னும சொல வழங்கததலைபபட்ட ஆண்டு 1833.

"கணக்குப் பிள்ளை" என்னும தமிழ்ச் சொல் 1680-இல ஆங்கிலத்தில "Conico poly" என்ற வழக்கினதாயிற்று.

"கயிறு என்பது திருக்குறளில் "திருவினைத் தீராமை ஆர்க்கும் கயிறு" என முன்னரே ஆளப்பட்டுள்ளது. கயிற்றினால பிணிக்கபபட்டுச் செல்லும மிடா "கயிறு பிணித்துக காடிவைதத கலன்" எனப் பெரும்பாணாற்றுப்படையிற பேசபபட்டுளது.

இது மலையாளத்தில "சயறு" என வழங்குவது உண்டு. அங்குத் தேங்காய் நாரிலிருந்து திரிக்கப்படும் கயறு இதனைக் குறிக்கப் படும். இது 1582-இல் 'Coir" என ஆங்கிலத்தில் வழங்க லுற்றது

"கறி" என்னுந் தமிழ்ச்சொல் தொன்றுதொட்டுத் தமிழ கத்தில் வழங்கி வருவதொன்று சோறுங் கறியும் அடிப்படைத் தமிழ்ச்சொற்கள் கறிக்கப்படுவது கறி இஃது இக்காலத்தில் கடிக்கப்படுவதெனக் கூறப்பட்டு வருகிறது. விலங்குகள் இலை களைக் கடித்துத் தின்றன என்று குறிக்கவேண்டிய இடங்களிற் சங்ககால இலக்கியங்களுட் கறித்தன எனவே குறிப்பிட்டுள்ள னா "மடப்பிணை - வேளை வெண்பூ கறிக்கும் ஆளில் அத்தம் ஆகிய காடே" எனப் புறநானூற்றுப் பாடல் ஒன்றனுள் வந் துள்ளது "திருமருப்பு இரலை -- செழும்பயறு கறிக்கும் புன்கண் மாலை" எனப் பெருங்குன்றூர் கிழார் பாடிய குறுந் தொகைப் பாடலில் வந்துள்ளது இவ்விடங்களில் கறித்தல் பொருளில் அமைந்துள்ளது "கறி" என்னுந் தமிழ்ச்சொல் கன்னடத்தில் "கரில" (karil) என வழங்கிப் போர்ச்சுக்கீசிய வழக்கிலும் "கரில" (caril) என்று ஆகி, ஆங்கிலத்தில் "curry" என்று 1898 -முதல் வழங்கிவருவது அறியப்படுகிறது. ஐரோப் பிய உணவு விடுதிகளில் "curry" இடம்பெற்றுள்ளது.

"காசு" என்னுந் தமிழ்ச்சொல் சின்ன நாணயத்தைக் குறிப்பதற்காக 1598 -இல் "cash" என ஆங்கிலத்தில் எடுத்து வழங்கப்பட்டது "வாசி தீரவே காசு நலகுவீர்" என்ற திருஞானசம்பந்தா வாக்கு 7-ஆம் நூற்றாண்டில் எழுந்தது.

"குயில" என்னுந் தமிழ்ப்பறவைப் பெயா "koel" என்று ஆங்கிலத்தில் 1826-இல் வழங்கத் தலைப்பட்டதாகத் தெரிகிறது சமஸ்கிருதத்தில் 'கோகிலா' என்று இருந்தாலும், அதனுடைய திரிபாக இதனைக் கொள்ளாமல், 'குயிலுவது குயில்' என்ற தமிழ் அடிவோப் பொருளிலிருந்து கொள்ளுவது தான் பொருந்தும். 'குயிலுதல்' என்றால் 'கூவியழைத்தல்' என் பது பொருள். இப்பொருளில் இச்சொல் பழைய தமிழ் இலக்கி யங்களில் ஆளப்பட்டுள்ளது. "கொடியிடை சோலைக் குயிலோன் எனனும் படையுட்படுவோன் பணிமொழி கூற" என்ற சிலப்பதிகார வேனிற்காதைப்பகுதி சிறந்த எடுத்துக் காட்டு "கொலக்கரை நறும் பொழிற் குயிலத்துடைந்து திரிதத புதுப்பூஞ் செம்மல் சூடி" என நத்தத்தனா சிறுபாணாற்றுப் படையிற் பாடினா

"குருநதம்" என்னும தமிழசசொல ஒன்பது வகை மணி களில ஒன்ருக மதிககபபடுவது. இது "குருவிநதம" என்றும, "விநதம" என்றுந தமிழில வழஙகியுளளது. சிலபபதிகாரததில "பதுமமும நீலமும விநதமும படிதமும" என்றவிடததில 'விநதம' எனப பேசபபடுவது 'குருவிநதம' அலலது 'குருநதம்' ஆகும. குருந்தம எனனும சொல ஆஙகிலததில "Corundum" என 1728-இல் வழஙகலுறறதாகத தெரிகிறது.

"கூலி" எனனுஞ சொல தமிழில "தெயவத்தால ஆகா தெனினும முயறசிதன் மெயவருததக கூலி தரும" என்ற திருககுறள காலததிறகு முனனுலேயே வழஙகியதொன்று உழைபபிறகொதத ஊதியம கூலி எனபபடடது. உழைப பாளரைக கூலிகள என்றனா பிறமொழியினாகள போாசசுக கீசிய மொழி வழியாக ஆஙகிலததில இச சொல 1598- இல "Coolie"– வேலையாள எனற பொருளிற் சென்றேறி உள்ளது

'தயிா" என்ற சொல சஙககாலத தமிழிலககியஙகளிற பெருவரவிறறுய வழஙகியதொரு சொல், குறுநதொகையில "முளிதயிா பிசைநத காநதள மெலவிரல" என வநதுள்ளது. பெருமபாணாறறுபபடையில "கூம்புமுகிழ உறையமம தீந்தயிா கலககி" எனறு கடியலூா உருததிரஙகணணனுா கூறியுளளாா மலைபடுகடாததில் "கானிலை எருமை கழபெய தீநதயிா" என வநதுள்ளது இசசொல மலையாளததிலும இதே வடிவததில வழஙகுகிறது 1613-இல் ஆஙகிலததில இசசொல "Tyre" (Tyer) எனச சென்று வழஙகத தலைபபடடது ஆகஸபோாடு அகராதி யில இஃது இடம பெறறுளளது சமஸ்கிருததத்திலுள்ள 'தகரா' எனற சொல தணணீரோடு கலந்த தயிரை அதாவது மோரினைக குறிககும எனறும, தமிழசசொல் "தயிா" சமஸகிருதச சொல்லி னின்று வநதது என்றும சிலா கூறுவர். ஆயினும், இது பொருநதாது சமஸகிருததத்தோடு தொடாபுடைய ஏனைய இநதோ-ஐரோபபிய மொழிகளில இவவடிவம காணப்படவிலலை யாதலாலும, தமிழொடு தொடாபுடைய திராவிட மொழிகளில இவ்வடிவம் வழஙகுவதாலும, இசசொல முதலில் தமிழிலேயே வழஙகிறறு எனக கொளளுதலே பொருநதுவது. (**The word is ultimately Dravidian in origin.**)

"தேககு" எனபது தமிழகததிலும, கேரளததிலும பெருவரவிறறுய் வழஙகும ஒரு சொல. தமிழில் 'தேககு' எனபபடுவது மலையாளததில 'தேகக' என வழஙகுகிறது. "தெயவமடையில தேககிலைக குவைஇ நும பைதீர் கடும்பொடு

பதமிகப் பெறுகுவிர" எனப பெரும்பாணாற்றுபபடையில் வநதுள்ளது. "தேககின் அகவிலை" என்பது அகநானூறறிற காணபபடுகிறது. போர்சசுககீசிய மொழிவழியாக ஆஙகில மொழிககு 1698 -இல இசசொல செனறுளளது அழுததமான நலல மரததைக குறிபபதறகுத தேககு "Teak" என்னுஞ் சொல இநத மொழிகளிற் பயன்பட்டுள்ளது 1842-ஐ ஒட்டிய ஆணடு களில் "African Teak" எனறும் "Newzealand Teak" என்றும மரவகைகள சில ஆஙகிலததிற் பெயாபெற்று வழஙகத தலைப பட்டன.

"தோப்பு" என்னுஞ் சொல் 1698 -இல ஆங்கில மொழியில் வழஙகபபட்டிருககிறது. மரஙகள நிரமபியுளள இடம 'தொகுபபு' அலலது 'தோபபு' எனப்பட்டது தமிழ, மலையாளம, தெலுஙகு, கனனடம, துளு ஆகிய மொழிகளில 'தோபபு' என்ற வழககு உண்டு இதனைச சில ஆஙகில அதிகாரி களும பயணிகளும எடுத்து "Tope" எனறு வழஙகத தலைப பட்டாரகள.

"பிணாககு" என்பது தமிழில 'பிழி' அலலது 'பீள' என்ற அடியிலிருநது பிறநதுள்ள சொல் எணணெயைப பிழிநத பிறகு கட்டியாக அமைநத பொருள பிணாககு எனபபட்டது. இஃது ஆஙகிலததில 1890-ஐ ஒட்டிய ஆணடுகளில் "Poonac" என வழஙகத தலைபபட்டு அகராதிகளில இடம பெறறுளளது.

"புஙகம" எனனும் மரபபெயா பொருநராறறுபபடை, சிலபபதிகாரம போன்ற பழைய நூலகளிற் காணபபடுகிறது. புனக மரத்து எணணெய விளககு எரிபபதறகும, தோல் நோய களைப போககுவதறகும பயன்படும் ஒருவகை நெய. இநத நெயயைப பற்றிய பேசசு 1866-இல் ஆஙகிலததில "Poonga oil" என எழுந்தது

"பூசை" என்னுஞ் சொல் பழைய திராவிட மொழிசசொல என்பது **Mark Collins, Dr S. K Chatterji** ஆகிய அறிஞர் களது கருதது பூவினாற் செய்யபபடுவது "பூசெய" என முதலில வழஙகிப் பிறகு "பூசை" எனத திரிநதிருததல வேண்டு மென இவாகள கருதுகிறாகள். தமிழ், மலையாளம, தெலுஙகு, கன்னடம, துளு ஆகிய மொழிகளில் "பூ" என்பது 'மலா' என்னும பொருளில மிகுதியாக வழங்குகிறது. திருத்தம் பெறுத திராவிட மொழிகளாகிய தோடர் கோடா மொழிகளிலும, கூவா கோண்டா மொழிகளிலும், இசசொல் வழஙகுகிறது என்பதைப் பேராசிரியா **T. Burrow** அவர்களும் எடுத்து விளககிக காட்டி

யுள்ளார 'பூசை' என்பது சமஸ்கிருத 'பூஜ!' என்ற சொல்லில இருநது திரிநது வநதது எனக கருதுவார சிலர் உளராயின, தொனமைத திராவிட அடிவேரினின்று இது பிறநதது என மதிததறகுரிய சானறுகள உள இஃது ஆஙகிலததில 1806-இலிருநது "Pooja" (or) "Puja" என வழஙகுகிறது

"மாஙகாய" எனற தமிழ-மலையாளச் சொல போர்ச்சுக கீசிய மொழியிலும, ஸபேனிஷ (Spanish) மொழியிலும வழஙகலுறறுப பிறகு ஆஙகிலததிற சென்று சேரநதுளளது 1665-இல Sir. T Herbert எனபார எழுதிய பயண நூலில ஆஙகிலததில இசசொல "Mango" என வழஙகியுளளது அவவடிவததில ஆஙகில அகராதிகளில் இஃது இடம பெறறுளளது "மா" எனற மரபபெயரடியாக "மாஙகனி" "மாஙகாய", "மாநதளிர" போனற பலவேறு சொறகள தமிழில எழுந்துளளன எடுததுககாட்டாக, "மாவின் கனி யொடு வாழைததீஙகனி" எனச் சிலபபதிகாரததில வநதிருப பதைக குறிபபிடலாம, "மாவின தளிர் ஏரெனன மேனி" என மதுரைககாஞசியில வநதுளளது "கழனி மாதது விளைநதுகு தீமபழம" எனறு ஆலஙகுடிவஙகனார குறுந தொகையிற கூறியுளளார ஐயை கோயிலிற சேமரமும மாமரமும நிரம்பியிருநதன எனபதைச 'சேவும மாவும செறிநதன' என்று சிலபபதிகாரம செபபுகிறது.

"வெட்டிவேர" என்ற தமிழசசொல் 1858-இல் ஆஙகிலத திற சென்றுசேரநது அவவடிவில "Vetiver" என அகராதி களில எடுததுஅமைககபபட்டுளளது

"வெறறிலை" என்பது தமிழ மலையாள மொழிகளிலிருநது போரசசுககீசிய மொழிககுச சென்று "Betel" எனற வடிவில் ஆஙகில மொழியில 1553 இலேயே வழஙகததலைபபட்டது 1681-இல ஒருவகை மிளகைக குறிகக "betel" என்பது வழஙகியுளளது விறுவிறுபபுளள ஒருவகை இலை என்ற கருததில இசசொல வழஙகபபட்டிருததல வேணடும வெற்றிலை யொடு கலநது பாககு தினனபபட்டதால கொட்டைப் பாககு ஆஙகிலததில "betel nut" என்று கூட வழஙகபபட்டுவிட்டது.

இவவாறு அபபொழுதைககபபொழுது சில தேவைகளை நிரபபுதறகாக ஆஙகிலததிற சென்று சேரநது வழஙகிய தமிழச சொறகளுககு ஆஙகில அகராதிகள சிலவறறில இடம தநதுளளனா எனக காணால நம மொழி ஆககததின ஒருவகைத தனிககூறுகுமன்றோ!

---

பகுதி 2

# ஒப்பியல் இலக்கணமும், விளக்கவுரை மொழியியலும்.

Part II

# The Comparative Grammar & The Descriptive Linguistics.

# 18. 'திராவிட மொழிகள்'.
# The Dravidian Languages.

திராவிட மொழிகளென்று ஓர் இனமாக வகுக்கப்பெற்ற மொழிகளுள் தமிழ் மொழியே பண்டைநாள் தொட்டுத் திருந்த முற்று அமைந்ததும், செவ்விய முறையில் வளர்ச்சி பெற்று வந்துள்ளதுமாகும். "திராவிடம்" என்பது ஒரு குறியீட்டுச் சொல்லாக நின்று, தென்னிந்திய மக்களுள் பெரும் பகுதியினரால் பேசப்பட்டுவரும் உள்நாட்டு மொழிகளைக் குறிப்பதாகும். (The Vernacular speech of the great majority of the inhabitants of Southern India) Dr Caldwell அவர்கள் திராவிட மொழிக் குடும்பத்தைப் பற்றி ஒப்பிலக்கண முறையில் ஆராய்ச்சி செய்கின்ற பொழுது திராவிட மொழிகள் என்று தாம் வகுத்துக் கொண்ட காரணத்தை விளக்கமுற வரைகின்றார்.

தென்னிந்தியாவில் வழங்கும் மொழிகள் பலவும் தமக்கென்று தனித்தனியே ஒரு பெயருடையனவேனும் அவையனைத்தையும் ஓரினமாகக் கருதிக் குறியீடு ஒன்று வழங்குதலும், அக்குறியீட்டை எடுத்தாளுதலும் ஒப்பிலக்கண முறைக்கு மிக மிக இன்றியமையாதவை என அவர் கூறுவது சாலப் பொருந்தும் "I have designated the languges now to be subjected to comparison by a common term, "Dravidian" because of the essential and distinctive grammatical characteristics which they all possess in common, and in virtue of which, joined to the possession in common of a large number of roots of primary importance, they justly claim to be considered as springing from a common origin, and as forming a distinct family of tongues"[1] என்னும் Dr. Caldwell அவர்கள் கருத்து நம் நினைவைத் தூண்டவல்லது. தென்னிந்திய மொழிகளை இலக்கண வகையால் நோக்குமிடத்து, அவையனைத்திற்கும் தனிப்பட்ட பொது அமைப்பொன்று (General structure) அடிப்படையாக இருப்பது விளங்கும்.

இம்மொழிக்கு இன்றியமையாத அடிச்சொற்கள் பலவற்றைப் பொதுப்படையாகவும், மிகுதியாகவும், தம்முள்ளே

---

[1] Dr. Caldwell - A Comparative Grammar of the Dravidian Languages. P. 3.

இம்மொழிகள் கொண்டுள்ளமையாலும், இம்மொழிகள் அனைத்தும் ஓரின மொழிகளே என்பது எளிதிற் புலப்படும். மேனாட்டு ஆய்வாளர்கள் மிகத் தொடக்க காலத்தில் இத்தென்னிந்திய மொழிகளை 'Tamulian' அல்லது 'Tamulic' என்றே இனமொழிக் குறியீடு கொடுத்து வழங்கி வந்தனர். Dr Caldwell அவர்கள் 'Tamulic' என்ற சொல்லை 'Tamil' எனக் கொள்ளுதலே பொருந்துமெனக் காட்டி, அக்கருத்தை வலியுறுத்துகின்றார் உலக மொழி வரலாற்றை நோக்குங்கால், மேனாட்டார் மேற்கொண்ட இம்முறை ஒரு வகையில் பொருத்தமாக அமையும் தென்னிந்திய மொழிகளுள் தொன்மைச் சிறப்பு மிகுந்தும், மிகப் பண்பட்டும் அமைந்துள்ள மொழி தமிழே ஆகவே இவ்வின மொழிகளைத் "தமிழ்" என்ற குறியீட்டால் வழங்குவது ஓரளவில் பொருத்தமானதே ஆயினும் ஓரினமொழிகளைப் பற்றிய ஒப்பிலக்கண ஆய்வில் நம்மவர் தெளிவு கருதித் தனிப்பட்ட ஒரு மொழியைப் பெயர் கொடுத்து வழங்கத் தனிப்பட்ட ஒரு குறியீட்டையும், ஓரின மொழிகளை வழங்கப் பிறிதொரு வகைக் குறியீட்டையும் அமைத்துக் கோடலே நன்றும். இவ்வடிப்படையில் தமிழ் மொழியை மட்டும் குறிப்பதற்குத் "தமிழ்" என்ற குறியீட்டையும், இவ்வின மொழிகள் அனைத்தையும் குறிப்பிடத் "திராவிட" என்ற குறியீட்டையும் வழங்குதல் ஒப்பிலக்கண அறிவிற்கு மிகமிகப் பொருந்துவதாகும்

பண்டை நாளில் தென்னிந்திய மொழிகள் அனைத்தையும் குறிப்பிட வடமொழியில் 'Āndhra – Drāvida– Bhāshā'[2] என்ற சொற்றொடரைப் பயன்படுத்தினர். இந்தச் சொற்றொடரை வழங்கியவர் கி. பி 7-ஆம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்தவராகக் கருதப்படும் வடமொழி வாணராகிய குமாரிலபட்டர் என்பவரேயாவர் அந்தச் சொற்றொடருக்குத் "தெலுங்கு – தமிழ் – மொழி" என்பப் பொருள் கூறலாம் இவ்வாறு பொருள் கொள்ளக் காரணம், அக்காலத்துத் தென்னிந்தியாவில் நிலவிய பெருவழக்கேயாகும் தென்னிந்திய மக்கள் தொகுதியினருள் பெரும்பான்மையினரால் பேசப்பட்ட மொழிகள் தெலுங்கும் தமிழுமேயாகும் இந்தப் பெருவழக்கு நோக்கி அவ்விரண்டு மொழிகளையும் குறிப்பிடக் குமாரிலபட்டர் மேலே கண்ட சொற்றொடரை வழங்கியிருப்பார் எனக்கொள்ளுதல் நன்று.

---

[2] Āndhra - Drāvida - bhāshā → The Telugu - Tamil language (or) the language of the Telugu - Tamil Countries.

மனுஸ்மிருதியின் 10-ஆவது பிரிவில 'திராவிடா' (Dravidians) 'பௌண்டரகா' (Paundrakas) முதலாகப பல பிரிவினா பகுததுக காட்டபபடடுளளனா. இநதப பகுதியுள 'திராவிடா' எனபது தெனனிநதியாவிலிருநத பலவகைபபட்ட மககளைப பொதுபபடையாகக குறிபபதறகு எடுததாளப்படடமை நனகு தெரியலாகும.

இநதியப பெரும மூதாதைகளில ஒருவரான சததிய விரதா (Satya vratha) என்பவரைக குறிககுமிடததுப பாகவத புராணம, 'திராவிடமனனா' (The lord of Dravida)[3] எனறே குறிககின்றது. ஸமிருதி காலததிறகுப பினபு தோனறிய மொழி ஆய்வாளா களும திராவிடம என்ற சொலலைத தெனனாட்டு மொழியினத்தைக குறிபபதறகே எடுததாண்டனா பணடை நாடகளில வட நாடடினரால திராவிட மொழிகள என்று குறிககப் பெறறது தமிழ, தெலுஙகு முதலிய தெனனிநதிய மொழிகள அனைததை யும உடகொணட ஒரு மொழியினததையே ஆகும். அன்றியும, அவை யாவறறையும ஓரின மொழிகளாகவே (Cognates) அவா கள கருதியிருநதாகள என்பதும நமககு எளிதில விளஙகும. அணமைக காலததிருநத வடநாடடு அறிஞா பலரும தென னிநதிய மொழிகளைக குறிபபிடுஙகால திராவிட மொழிகள என்றே கூறி வநதுளளனா 1854-ஆம ஆணடின இறுதியில 'திராவிடி' (Dravidi) என்பது மூலப பாகதஙகளில (Prakrits) ஒன்றே எனறும, அது பல உளநாடடு மொழிகளுககுத தாய மொழி (Dravidi-one of the recognised Prakrits)[4] என்றும இநதிமொழி நூலறிஞரான பாபு இராஜேநதிரலால் மிதரா எனபாா கூறியுளளாா.

இவவாறு மேனுடடு ஆயவாளா முதலாக அண்மையில வாழந்த நம நாடடு மொழியறிஞாகள இறுதியாகப பலரோ ராலும கூறபபெறும திராவிடம எனபது ஒரு பொதுவகைக குறியீட்டுச சொல்லாக அமையும "It thus appears that the word 'Dravida', from which the term 'Dravidian' has been formed, though sometimes used in a restricted sense, as equivalent to Tamil, is better fitted, not with standing, for use as a generic term"[5] என்பாா Dr Caldwell.

---

[3] Muir - Sanskrit Texts - vol (i)

[4] Muir — Do vol ii P 127.

[5] Dr Caldwell - A Comparative Grammar of the Dravidian Languages. P 6

அவா மேலே கண்ட பல்வகை நிலைகளையும் மிகச் சிறப்பாகப போற்றித "தமிழ" என்ற சொல வழககைச சிறபபுநிலைச சொலலாகக கருததில கொணடு தமிழ மொழியையே குறிககவும, "திராவிடம" எனற சொலலினைப பொதுவகைக குறியீடடுச சொலலாகக கொணடு தமிழ உடபடப பிற இன மொழிகளையும குறிககும அளவில வைததுத தம ஒபபிலககண ஆயவு நூலில திறமபடச செயலபடுகினறா எனலாம.



# 19. 'பண்படுத்தப் பெற்ற மொழிகள்.'
# The Cultivated Languages.

'திராவிடம்' என்ற சொல்லை Dr. Caldwell அவாகள தனிபபடட ஒரு மொழியைக குறிககும சொலலாகக கொளளாமல தமிழ, மலையாளம, தெலுஙகு, கனனடம ஆகிய மொழியினங களைக குறிககும பொதுக குறியீடடுச சொலலாகக கொள கினறுா. நமநாடடு மொழியியல மேதையாகிய Dr S K Chatterji எனபவா திராவிடம என்ற சொலலை ஆயகினறுா திராவிடம என்ற அசசொல தமிழபேசும மககடபகுதியையே குறிககும எனபா "The word 'Dravidian' is an Anglo–Indian expression, a word created by British scholars in India, and is a hybrid consisting of the Indian or Sanskrit word 'Drāvida' and the English adjectival suffix '-ian' which itself is from the Latin The form of 'Drāvida' was definitely employed with regard to the Tamil - speaking section within the Dravidian family . . ... " [1] என்னும கருததினை நோககுக ஆனால ஓா இனமொழிகளைக குறிககும 'திராவிடம்' எனற சொல வழககு Dr Caldwell அவாகளால கையாளப படடு, அவவின மொழிகள இரணடாகப பகுககப பெறுகின்றன அவை முறையே, பணபடட மொழிகள அலலது திருந்திய மொழிகள (Cultivated Languages), பணபடுததபபெறு மொழிகள அலலது திருநதா மொழிகள (Uncultivated Languages) ஆகும

1. பணபடட மொழிகள.

   (i) தமிழ — (Tamil)

   (ii) மலையாளம — (Malayalam)

   (iii) தெலுஙகு — (Telugu)

   (iv) கன்னடம — (Canarase)

   (v) துளு — (Tulu)

   (vi) குடகு/கூாக — (Coorg or kudagu)

2. பணபடுததபபெறு மொழிகள்

   (i) துதம — (Tuda)

   (ii) கோதம் — (kota)

---

Dr S. K Chatterji - Dravidian - P. 1.

(iii) கோண்டு — (Gond)
(iv) கூந்தம — (Khond or Ku)
(v) ஒரோவன் — (Oraon)
(vi) இராஜமஹால்— (Rajmahal)

இம்மொழிகளுள முதறகண தமிழ, மலையாளம முதலாகிய மொழி இனஙகளைத தனிததனியே காணபோம

(1) தமிழ – TAMIL :

Dr Caldwell அவாகள தமமுடைய ஒபபியன் மொழி யிலககணததில தமிழ மொழியின் தனிச சிறபபினை விளகக மாகக கூறுகினறா தொனமைச சிறபபுப பெறறதாய, மிகப பணபடட முறையில் வளாசசி பெறறதாய, சொலவள மிகக தாய, பழமையான சொல் இலககணஙகளின் தொனமை வடிவங களைக கொணடதாய மிளிாவது தமிழ எனக குறிபபிடுகினறா. "Tamil is the earliest cultivated of all the Dravidian idioms, the most copious and contains the largest portion and the richest variety of indubitably ancient forms"[2] எனபாா இத தமிழ மொழியினை இலககியததமிழ (Literary Tamil), பேசசுத தமிழ (Spoken Tamil) எனப பிரிததல கூடும இடைக காலததில வாழநதோா செநதமிழ (cultivated dialect), கொடுந தமிழ (uncultivated dialect) என ஒரு வகைப பாகுபாடடினைக காடடுவா ஆனால, தொனமையான இலககணம செய்யுள வழககு, உலக வழககு எனச சுட்டுதலை எணடு ஒபபிடடுக காணக பிற திராவிட மொழிகளுள நூல வழககும, பேசசு வழககும் நன்கு நிலவி இருககவும, ஆண்டும் செம்மையான வழககு என்றே, கொடுமையான வழககு என்றே நாம கொளளு கின்ற அளவுககு அமமொழி வலலாா இடநதரவிலலை என்பதனை அறிவோம.

தமிழ வழஙகும பரப்பு.

வஙகக கடலுககும குடமலைககும இடையே பழவேற்காடு முதல குமரிமுனை வரை இமமொழி பேசபபடடு வநததாக இவ வாசிரியர் குறிபபிடுவா. தென் திருவாஙகூர்ப பகுதியிலும், ஈழததின வடமேற்குப பகுதியிலும இம் மொழி பேசப பெற்று வநதமைககுச சானறுகள காடடப் பெறுகினறன. கொழுமபு நகரில் தமிழாகள் பெருமபாலோர் வணிகத்துறையில் ஈடுபடடு

2 Dr Caldwell - A Comparative Grammar of the Dravidian Languages. P. 6.

வருவதும் நாம் அறிந்தவொன்றே மலையாளம், தெலுங்கு, கன்னடம் ஆகிய மொழிகள் பேசப்பட்டு வரும் பகுதியிலும் தமிழ் மொழி வழக்கு அழியாதிருந்தல் இம்மொழியின் பெருமையைச் சுட்டிக்காட்டும் கடல்கடந்த கீழை நாடுகளில்-சிறப்பாக மலேயா, சிங்கப்பூர் ஆகிய இந்நாடுகளில் இன்றும் தமிழ் வழங்கி வருதலை நாம் அறியலாம் செல்வச் சிறப்பு வாய்க்கப் பெற்ற ஐரோப்பிய நாட்டுப் பெருமக்களின் ஏவல் மக்களாகத் தமிழர்கள் இருந்தமையை நாம் சென்ற நூற்றாண்டுகளில் காணலாம் பேராசிரியர் தெ பொ. மீ அவர்கள் 1951-ஆம் ஆண்டு கணக்கின் படி இம் மொழி பேசும் மக்கள் தொகை 27 Million [3] என்று கூறுவர் இனி, தமிழ் மாநிலத்தில் சென்னப்பப் பட்டினம் என்று ஒருகாலத்தில் வழங்கப் பெற்று இறுதியாகச் சென்னை என மருவி வரும் பகுதியே இம்மொழி பேசப்பட்டு வரும் மாநிலத்திற்குத் தலைநகரம்.

'தமிழ்' - சொல்லாட்சி :-

இம் மொழியில் குறிப்பிடத்தக்க மாற்றங்கள் சொல் நிலையில் காணப்படுகின்றன மேலை நாட்டாரும், நம் நாட்டாரும் தமிழ் என்ற சொல்லிலுள்ள சிறப்பு 'ழ்'கரத்தை உச்சரிக்க இயலாமல் தங்கள் நாச் சென்ற வழிப் பலவகையாகத் திரித்தும், மாற்றியும் வழங்கி வந்தமையை நாம் காணலாம். 'தமிழ்' (Tamil) என்ற சொல் 'தமிள்' (Tamil) எனவே பலராலும் உச்சரிக்கப்பட்டது ஐரோப்பியர்கள் இதனைத் 'தமுள்' (Tamul) என வழங்கினர் பிரெஞ்சு நாட்டு ஆசிரியர்களும் அவ்வாறே வழங்கப் போர்த்துக்கீசியர்களோ இந்தச் சொல்லுக்கு மாறாக 'மலபார்' (malabār) என்ற சொல்லைக் கையாண்டனர். அறிஞர் Colebrooke, Tāmel' என்று வழங்கினர். "The language of the province is the Tāmel to which Europeans have given the name of Malabār" [4] என்பார் அவர்

தமிழ் எனும் சொல்லுக்கு நேரான வடசொல் 'தராவிடா' (Drāviḍā) என்பதாம் இந்தச் சொல் ஒன்றே நம்முடைய ஆய்வுக்குப் பெருந்துணை புரிய வல்லதாக அமைகிறது மொழி

---

[3] Dr T. P Meenakshisundaram – A History of the Tamil Language- P. 16.

[4] Colebrooke - Essay on the Sanskrit and Prakrit Languages.

பேசும மக்களையும, மொழி வழங்கும மாநிலத்தையும இநதச சொல குறிபபிட வேணடும திராவிடம, தமிழ என்ற இரு சொறகளையும ஒபபு நோககித தனித்தனி வடிவஙகளின நிலையைக காண முறபட்டு எநதச சொல முதன்மையானது, எநதச சொல் மாறுபட்டது என்பதனைக காணலே மொழியியலாரின நோககமாம.

(1) தமிழ எனற சொல திராவிடம் என்ற சொல்லின் மருஉசசொலலா?

(2) மாறுகத் திராவிடம் தமிழின் மருஉச சொல்லா ?

(3) இருவேறு சொறகள் இருகக அவறறுள எநதச சொல் இமமொழியைக குறிகக வலலது ?

இம்மூன்று வினாககளுககு விடை காணலே இககட்டுரையின நோககம ஒலி வேறுபாடுகள மிகுது விளஙகக கூடிய இவவிரணடு சொறகளும் தோறற நிலையில ஒருவாறு ஒனறிக காணபபடும எனக கூறுவா மிகப பழஙகாலநதொட்டு இலககண, இலககியத துறைகளில் வளமபெறறு வருகின்ற தமிழ மொழியைப பேசும மககள தஙகளுடைய மொழியைக குறிபபிடப பிறமொழிச சொலலைக கடன் வாஙகியிருகக மாட்டார என்பது மட்டும துணிபு உலக வரலாறறில மொழியை அடிபபடையாகக கொணடே நாகரிகம, நாடு இவறறிறகு நம முன்னோர பெயரிட்டனா. கிரேகக மொழி, கிரேகக நாடு, கிரேகக நாகரிகம எனும இச் சொறகள தொன்மைச சிறபபோடு

ஒனறி வழஙகி வருதலை நன்குணாநதோர 'தராவிடா' (Drāvidā)

எனற வடசொல்லால தமிழை வழஙக முன வாரார அன்றியும, தமிழகததைச சார்ந்த முன்னோர தஙகள மொழிப பெருமை நோககி 'இனிமை' என்ற பொருட் சிறபபோடு 'தமிழ' என்ற சொலலால தம் மொழியை அழகு படுததினார என்பதனைக கருததில கொணடு இச சொலலின் உணமை வழககினை இனிக காணபோம்

மொழி வல்லாருள் சிலா 'தராவிடா' என்ற வடசொலலே (Corresponding word in Sanskrit to denote Tamil) 'தமிழ்' எனத் திரிபுறறது எனக கூறுவா. ஆனால், இவ்வடசொல நீரமையை எண்ணுஙகால இககூற்றுப பொருந்துமோ என்பது ஐயததிற்குரியது. தமிழர் தம் மொழியைத தமிழ் எனக் குறிககாமல், 'திராவிடம்' என்ற சொல்லால் வழங்கினர் எனக கொள்ளுதல்

அறிவுக்கு ஒவ்வாதது. ஒலியியல் முறைப்படி ஒரு சொல்லின் முதலில ஒற்றுக்கள் இரண்டு இணைநது வருதல் திராவிட மரபுக்கு அப்பாற்பட்ட கூட்டொலி அமைப்பாம். ( It cannot be Tamil Syllabation ). Dr Caldwell "The Compound 'dr' is quite un-Dravidian" [5] என்பா

'திராவிடம' என்ற சொல் 'திரமிடம்' எனப் பல இடங்களில் வழங்கப்படுகிறது திராவிடம>திரவிடம>திரமிடம் என இவ்வாறு ஆகி வருதல ஓரளவு பொருத்தமாகத் தோன்றும். இத் திரமிடம் என்ற சொல தமிழ நிகண்டுகளில் காணப்படுகின்றது. Dr Kern என்பார வராஹமிகிரரின் பிரகத்சம்ஹிதையில் (Varāhamihirar's Prahatsamhita) திராவிடம என்ற சொல்லுக்கு மாறுகத் 'திரமிடம' என்ற சொல் இருப்பதாகக் கூறுவா.

'திரமிடம்' என்ற சொல 'திரமிளம்' எனச் சில இடங்களில் காணப்படுகின்றது கி. பி 1573–இல் இயற்றப்பட்ட தாரநாதரின், "இந்தியாவில் புத்தமத வளர்ச்சி" (Taranatha's Tibetan History of the Propagation of Buddhism in India) எனும் நூலில இச் சொல்லாட்சி காணப்படுகிறது.

Dr Gundet என்பார், மலையாள மொழியின் பழமைப் புராணங்களில (Old Malayalam versions of Puranas) இத் 'திரமிளம' என்ற சொல் மிகுதியாகக் காணப்படுவதாகக் குறிப்பிடுவர்.

மகாவம்சத்திலுள்ள (Mahawamsa) பாலியில் (Pali) 'திரமிளம்' என்ற சொல் 'தமிளோ' (Damilō) எனக் காணப்படுகிறது (தராவிடா) திராவிடம் > திரவிடம > திரமிடம் > திரமிளம் > தமிளோ > தமுள் > தமிள் > தமிழ என்ற வரிசையில நம் மொழி இந்நிலை அடைந்ததாகக் காட்டுவா

உரோம நாட்டு நிலப்படங்கள் 'Peutinger Tables' என்ற பெயரால் வழங்கப்படுகின்றன. அவற்றுள் நம இந்தியப் பகுதி 'Āndra–Indi' என்றும் 'Damiricee' என்றும இரு பெயர்களால் குறிக்கப்பட்டுள்ளது. இப் பெயர்களால் ஆந்திரப் பகுதியும்,

[5] Dr. Caldwell - A Comparative Grammar of the Dravidian languages. P. 9.

தமிழ்ப் பகுதியும குறிககபபடடன எனக கூறுவா. குமாரில படடா என்பா 'Āndhra-Drāvida-Bhashā' எனக குறிபபதறகும இந நிலபபடஙகள இவவாறு குறிபபதறகும் உள்ள ஒறறுமையை ஆராயின 'Damirice' என்ற வழககைக 'Tamil' என்பதைக குறிபபதறகாக அமைந்திருகக வேணடுமெனத துணியலாம Hieun - Tsang என்ற சீன வழிபபோககரும இதசென்னக மொழியைக குறிபபிடுஙகால் 'Tchi - Mo - Lo' எனக குறிபபிடுகினறுா. இந்தச சொல்லும தமிழ் என்ற சொல்லோடு சிறுசாயல் பெற்றதாக விளஙகுகிறது. "There can be little doubt that the name Tamil may also be identified with the Tchi-mo-lo of Hieun Tsang, a word which may also be read Dimala or even Dimara"[6] என்பாா Dr Caldwell. நம் நாடடுத் தேசியப பாடலில இரவீநதிர நாததாகூா அவாகள் 'திராவிட' (Drāvida) என்ற சொலலைக கையாணடுளளாா.

'பஞசாப சிந்து குஜராத மராடடா திராவிட உதகல வஙகா" என்பதில 'திராவிட' என்ற சொலலினைப பரநத பொருளில வழஙகியுளளமையையும காணக. Dr S. K. Chatterji என்பாா, "Tagore has used the word Dravida in the extended sense to indicate that very extensive language-family with all its various component languages and dialects as well as the peoples who speak them"[7] என்று மொழிவதில இச சொல்லின் ஆழபொருள புலனாகும.

மேலே கணடவாறு ஒரு தனிச் சொல்லைப பற்றிய ஆய்வுகள் வழஙகப பெற்று வநதிருநதாலும இத தமிழ் மொழியின பழமை இலககண, இலககியஙகள் 'தமிழ' என்ற சொலலாட்சியால தம மொழியைக குறிககினறன. அகச் சான்றுகளாக இவை இருகக, உணமையை மறைததது ஆராய்தல உடன் பட்ட வழககன்று அன்றியும, பிஙகல நிகணடில, "இனிமையும் நீாமையும தமிழெனலாகும" (Sweetness and fragrance) என்று சிறபபாகப பேசபபடுகிறது. வடிவ ஒபபுமையைக காட்டிலும ஒரு மொழியில வழஙகப பெறும சொறகளின மிகுதியை அடிபபடையாகக கொணடு ஒரு முடிவுககு வருதலே மொழி வலலாா

[6] Dr Caldwell - A Comparative Grammar of the Dravidian Languages P. 11.

[7] Dr. S. K. Chatterji - Dravidian. P. 2.

கடமையாகும் இக காரணங்களால் Dr Caldwell குறிப்பிடு மாறு 'திராவிடம்' என்பதைப பொதுக குறியீடடுச சொல்லாகக கொண்டு, 'தமிழ்' என்பதைச் சிறபபாக — உயர் தனிச் சொலலாக ஏற்றுக கொளளுதல்தான் அறிவுடையோரககு உடன்பாடாம்

தமிழ மொழியை அயலநாட்டாரும் மற்றவரும் பலவாறு அழைகக, அமமொழி பற்றிய சொற்களில் நேருகின்ற மாற்றங களை ஒருவாறு கணடோம இனி, நம் நாட்டைச சார்ந்து அண் மையில வாழநத மககள் இம மொழியை அழைககின்ற தன் மையைக காணபோம தககாணதது முகமதியாகளும், தெலுங கர்களும, கன்னடர்களும இம் மொழியைத 'தமிழ்' என அழைக காமல 'அரவம' என்ற சொல்லால அழைததனர். இசசொல எநத வகையிலும பொருநதுவதாகக் காணோம. Dr Gundert என்பார் 'அரவம' என்ற சொலலினை 'அறவம' என்ற வழககால குறிபபிடுவா இசசொல் பொருள் பொதிநத ஒன்றுகஅமைகிறது. (Semantic Value) புததருகக 'அறவன்' என்ற பெயா வழஙகு வது நோகக, அறம மலிநத கொள்கையினரை ( தமிழரை ) 'அறவர்' என வழஙகுவதும பொருத்தமாக அமையும 'ற, ர' என்ற இவை இரண்டும ஒரெழுததாக மாறி வழஙகப் பெற்றி ருககுமோ என்பது ஐயததிறகுரியது ஆனால், தமிழ 'ற' தெலுங்கு, கனனட மொழிகளில் 'ர' ஆக மாறுவது இயல்பு சான்றாக, அறம (தமிழ) என்பது அரவு எனத தெலுங்கு, கன்னட மொழிகளில் வழஙகப பெறுகிறது

'அறவம்' என்ற சொல் வழககை 'அறிவு' என்ற சொல் வடிவாகப் பிறந்தது என்பர் ஒரு சாரார். 'அறி' என்ற வினை யடியாக (Verbal Root) அறிவு என்ற தொழிற்பெயரும் (Verbal noun), அறவம என்ற பெயரும தோன்றின எனக் கொள்ளுதல் அறிவுககுப பொருத்தமாக அமையும். இவ் வகையில் 'ற' சிறபபு எழுத்து இடையின ரகரமாக மாறுதல் ஒலி இயல்பு. (Phonetic tendency)

நம் மொழி பரவிவநத சூழ்நிலையில் செந்தமிழ், கொடுந் தமிழ் என்ற பாகுபாடுகள் அமையக கொடுந்தமிழ் வழங்கும் நிலப்பகுதிகளுள் அருவா நாடு என்பதும ஒன்று.

திராவிடா > திராவிடம் என ஆதல் போல அருவா > அரவம் என ஆதல் இயலபு.

தெலுங்கு மொழி வல்லார் அரவம் என்பதைத் திராவிடச் சொல்லன்று என்றும, வடசொல்லே என்றும கூறுவர்.

Sanskrit — அ + ரவ > அரவம்
↑
(ஒலியற்றது)

எனக் கொண்டு தமிழில் 'ஹ, போன்ற மூச்சொலிகள் இல்லா மையால் இப்பெயர் பெற்றது என்பர். ஆனால், இக்கருத்து ஏற்றுக் கொள்ளத் தக்கதாக இல்லை. அன்றியும், வடமொழியில 'ரவ' என்ற சொல்லுக்குரிய பொருள் 'பேரொலி' என்பதாம். தமிழில 'அரவம்' எனபதற்குரிய பொருள 'மெல்லொலி' என்ப தாம்.

Col. Yule என்பார் சோழ மண்டலக் கரையில் நெல்லூரை யடுத்து 'Arvani' (ஆர்வாணி) என்ற இனத்தார் வாழ்ந்தன ரெனக் கிரேக்க நில நூலாசிரியர் Ptolemy கூறியுள்ளதாக மொழிவர்.

இக்காரணங்கள் அரவம் என்ற சொல தமிழ் என்ற மொழியைப் பொருள் அளவில் குறிக்காது. மாறுகக் குறிக்கும் எனக் கொண்டால் அது பிழைபட்ட வழக்கே.

## (ii) மலையாளம் (Malayalam)

திராவிட மொழிகளின் பண்பட்ட வகையில தமிழிற்கு அடுத்த பெருமை பெற்று விளங்குவது மலையாள மொழியேயாம். பிற திராவிட மொழிகளைக் காட்டிலும தமிழோடு நெருங்கிய தொடர்புடையது இம்மொழி மொழியியல் துறையில் தமிழ மலையாளம (Proto-Tamil Malayalam group) இவை இரண்டும ஓரின மொழிகளாகப் போற்றப்பட்டு வருகின்றன. Dr. Caldwell தமிழின் இன்றியமையாத கிளைமொழி மலையாளமே என்பார். "Malayalam being a very ancient offshoot of Tamil, differing from it chiefly at present by its disuse of the personal terminations of the verbs and the larger amount of Sanskrit derivatives it has availed itself of, it might perhaps be regarded rather as a dialect of Tamil, than as a distinct member of the Dravidian family"[1] என்பர். கிரேக்க மொழியறிஞர்கள் மலையாள மொழியைப் பற்றித் தெரிந்திருப் பினும அதைப்பற்றி யாதொரு குறிப்பும குறிப்பிடாமலேயே இருந்தனர்.

---

[1] Dr. Caldwell - A Comparative Grammar of the Dravidian Languages. P. 18

மொழி வழங்கும் பரபபு :—

குடமலைகளுககு அப்பால் (Western ghauts) 'மலபார' என்னும பகுதியைச சாாநதுள்ள ஊாகளில் இமமொழி பேசப பட்டு வருகினறது மஙகளூா என்ற ஊர் தொடஙகித திருவனநதபுரம் வரையில இம்மொழி பேசபபடுகிறது. திருவாஙகூர், கொசசி, மலையாளம ஆகிய இடஙகள் இம மொழிப பேசபபடும பகுதிகளாம.

'மலையாளம்' என்பது 'மலையாழ்மா' (Malayālmā) என்றும 'மலையாயமா' (Malayāymā) என்றும கூறபபெறும. இமமூனறு சொறகளிலும முதறகண நிறகும மலை எனபது 'மலே' எனத திரியும அதுவே பின்னா 'மல' என நிறகும. இவ்வாறு இநதச் சொல 'மலையாளம' என அமைகிறது. கி பி. 545-ஆம ஆணடில் கிறிததுவ ஊா வரலாறு (Christian Topography) எனும் கிரேகக நூலில் ாழநாட்டைச சார்நது, "மிளகு வரு மலே" என்பது காணபபடுகிறது. இம'மலே' என்ற சொல 'மலை' என்ற தமிழச சொலலோடு நெருங்கிய தொடர்புடையதாகக காணபபடுகிறது.

மலை + ஆழம > மலையாழம் — மலைககு அணமையிலுள்ள ஆழமான பகுதி எனபது இதறகுரிய பொருள். இனி 'ஆள்' என்ற சொலலை அடிபபடையாகக கொண்டு அம்மலையில் ஏறககூடியவனை 'மலையாளி' எனச சொல்லுதல் நம தொன்மை வழககு 'மலை' என்ற கிலைமொழியின் ாற்று ஐகாரம் எகர மாகவும, பின அகரமாகவும மாறி வருதல ஒலியியல மாற்றமாம (Phonetic Change) எகரம நெடிலாக வருதலும (மலெ>மலே) நமககு உடனபாடே. இநத வகையில் நாம மலையாளி என்ற சொலலுககுத தகக காரணம கறபித்தால அம்மக்கள் பேசி வரும மொழி 'அம்' சாரியை பெறறு (மலையாளி + அம) மலை யாளம என நிறறலை ஏற்றுக கொளளலாம.

தமிழ-மலையாளம இவற்றிடையே காணபபடும நெருஙகிய தொடாபு:- (Closer affinity between Tamil and Malayalam) Periplus என்பாா மேற்குக கடறகரையில் 'நெல்குன்றம' (Nelkynda) என்ற துறைமுகம இருநததாகக கூறுகிறாா் தமிழ-மலையாளம இவை இணைநத உறவைக காட்டுஙகால நெல் குன்றம பாணடியா தலைநகராக விளஙகியது என்பதை Dr Caldwell சுட்டிக காட்டுகின்றாா் இதன் வாயிலாக மிகப பழஙகாலம தொட்டே நம நாட்டின் மேற்குப பகுதியில் தமிழர்

வாழ்ந்திருக்க வேண்டும் என்ற உண்மை பெறப்படுகிறது (Geographical evidence)

Dr Gundert என்பார், வடமொழியைக் காட்டிலும் தமிழையே பெரும்பாலும் மலையாளச் செய்யுள் ஒத்திருந்ததாகக் குறிப்பிடுவார் "The oldest Malayalam Poetry as I learn from Dr Gundert, imitated Tamil rather than Sanskrit"[2] என்று Dr Caldwell கூறுவார். இந்தப் பழமைச் சிறப்பும் தமிழ்-மலையாள ஒற்றுமையை வலியுறுத்தும் (Political evidence) மலையாள மொழியின் முதற் செய்யுள் இலக்கியமாகிய இராம சரிதத்தில (Rama Charitam) வடமொழிக் கலப்பு இல்லாமை அறிதற்பாலது.

தமிழ்ச் சொற்பொருளும் (Semantics), மலையாள வழக்கும், இவ்விரு மொழிகளின் பழமை உறவை மிகச் சிறப்பாக வலியுறுத்தும் தமிழக நிலநூலபடி, 'கீழ்' என்ற அடியாகப் பிறந்தது 'கிழக்கு' என்பதும், 'மேல்' அடியாகப் பிறந்தது 'மேற்கு' என்பதும் மிகத் தெளிவாகப் பயிற்சியில் இருக்கின்றன ஆழ்கடல பொருந்திய கீழப்பகுதியைக் 'கிழக்கு' என்பதும், உயர் மலைப்பகுதியை 'மேற்கு' என்பதும் நம தமிழரின் திசைபற்றிய அறிவை நன்குணர்த்தும் சொறகளாம் மலையாள மக்கள் உயர்ந்த மலைப் பகுதியைக் 'கிழக்கு' என்றும், ஆழ்ந்த கடற் பகுதியை 'மேற்கு' என்றும் வழங்கி வருகின்ற நிலையே அவர்களின் பழமைத் தொடர்பைத் தமிழரோடு இணைத்துக் காட்டத் துணை செய்யும். தமிழகச் சூழலை ஒட்டித் தமிழரிடத்துக் கொண்ட பேருறவால திசைக்குப் பெயரிடுகின்ற பொழுதும் காரணத்தை அறவே மறைத்துத் தமிழர் வழங்கியவாறே வழங்குகின்ற இந்நிலை வியப்பிற்குரியது. இப்பழமையான உறவு கற்பிக்கப்படாவிட்டால் இந்தச் சொல்லாற்றல் பயனளிக்காது Dr Gundert மலையாள மக்கள் மேற்கு என்ற சொல்லினைக் கையாளுவதில்லை என்றும், அவர்கள் 'படிஞ்ஞாயிறு' என்றே வழங்கினர் என்றும் கூறுவர். இப்படிஞ்ஞாயிறு என்ற சொல்லும் முறையாகப் பகுக்கப்படின் 'படு+ஞாயிறு' எனப் பிரியும் (The setting sun). 'படு' என்ற வினையடி நின்று, எத்தகைய இடைச்சொற்களையும் (Particles) சேர்த்துக் கொள்ளாமல, 'ஞாயிறு' என்ற வருமொழியோடு புணருகின்ற மரபு 'வினைத்தொகை' என்ற தமிழ்ச் சொல்லிலக்கணத்திற்குத் தக்க

[2] Dr Caldwell — A Comparative Grammar of the Dravidian Languages ' P. 10.

சான்றும். இந்தச் சொல்லாட்சியும் தமிழர்-மலையாளர் தொடர்பை வற்புறுத்திக்காட்டும். 'படு+ஞாயிறு' என்ற சொல்லில் காணப் பெறும் வருமொழி இடை இகரம், நிலைமொழி ற்றுறு உகரத்தை இகரமாக்கியும் (assimilation), வருமொழி ஞகர ஒற்றுக்கு ஏற்ப நிலைமொழியைச் சார்ந்து அவ்வொற்று மிகுதலும், இவ்வாறு மெல்லினங்கள் மிகுந்து மலையாளத்தில் வழங்கி வருதலும் மொழி நூலுக்கு முடிந்த முடிபாம்.

**மலபார் :-**

மிகப் பழங்காலத்தில் தமிழ்-மலையாளம் இவை இரண்டும் தம்முள் வேறுபாடின்றி இருந்த தன்மையைத் தம் கருத்தில் கொண்டு போத்துக்கீசியர்கள் 'மலபார்' என்ற சொல்லால் தமிழைக் குறித்திருக்க வேண்டும். மேல்நாட்டு வணிகப் பெருமக்கள் கடல் வாணிகம் குறித்துத் தமிழகம் போந்த காலத்தில் இம்மலையாளம் வழங்கும் தேயத்தில் முதற்கண் தங்கியிருத்தல் வேண்டும்.

Malabār }
Malayālam } இவ்விரு சொற்களிலும் முதலில் 'மல' (Mala) என்ற

பகுதியே காணப்படுகிறது. விகுதி மட்டும் வேறுபடுதல் காண்க. பிற்காலக் கிரேக்கர்கள் 'malē' (மலே) என வழங்கினர். Col. Yule என்பார் அரேபியக் கப்பலோட்டிகள் 'மலே' (malē) என்ற சொல்லால் – bār என்ற விகுதி (suffix) இன்றி – வழங்கி வந்ததாகக் குறிப்பிடுவர். கி. பி. 851-இல் 'குலம்மலே' (Kulam-malai) என்ற சொல் வழக்கில் இருந்தது. கி. பி. 1150-இல் Malī (மலீ) Malīah (மலீய) என்ற இரு சொற்கள் காணப்படுகின்றன. இவ்வாறு பலவேறுபட்ட சொற்களைக் காணுகின்ற காலத்து இச் சொல்லைப் பற்றிய சில நிலைகள் அறியத்தக்கனவாக அமைகின்றன.

'மலே' என்ற தமிழ்ச் சொல் 'மலெ' என அமைதலும், அதுவே பின்னர் 'மல' என அமைதலும் ஒலி நூலுக்கு உடன்பட்டதாகத் தோன்றும். 'குலம்மலே' என்ற சொல்லில் காணப்படும் 'குலம்' என்பது கொல்லம் (Quilon) என்ற ஊரினைக் குறிப்பிடல் வேண்டும். இக்காலத்தில்தான் -'bār' என்ற விகுதி தோன்றியிருக்கக் கூடும் என்பர் மொழி நூல் குறிப்புப்படி 1150-இல்தான் முதன் முதலாக -bār என்ற விகுதி வழக்கில் தோன்றியிருத்தல் கூடும்.

**Col Yule** என்பார் அராபிய வடிவங்களிலிருந்து இவ் விகுதி தோன்றியிருத்தல் வேண்டும் என்றும், போர்த்துக்கீசிய வடிவங்களில் இருந்து இவ்விகுதி தோன்றியிருக்கலாமென்றும் குறிப்பிடுவர். ஆனால் **Lassen** என்பார் **-vāra** என்ற வட சொல்லின் திரிபே -'**bār**' என்ற விகுதி என்பர். இவ் வட சொல்லுக்கு உரிய பொருள் பகுதி (**region**) என்பதாம். **Malaya+vāra>Malabār -(The region of mountains)** என இவ்வாறு பொருள் கொள்வர். ஆனால் இவ்வட சொல் வழக்குப் பொருத்தமாக அமைவதன்று. வடநாட்டுப் பெயர்கள் தாரவார், கத்தியவார் எனக் காணப்படுகின்றன. அம்மொழியில் –bār என்பது வாஃட் (**vāxt**) என எழுதப்படுகிறது. இந்தச் சொல்நிலை மாற்றத்தால் வடசொல்லைக் கொண்டு இவ்விகுதியைக் காணுதல் பொருத்தமுடையதாகத் தோன்றாது. அன்றியும் அரபுநாட்டு மக்களே இச்சொல்லை முதன் முதலாகக் கையாளுவதாலும், -bār என்ற போர்த்துக்கீசிய சொல்லுக்கு நாடு (அல்லது) கண்டம் என அவர்கள் பொருள் கொள்ளுவதாலும் இச் சொல்லைப் போர்த்துக்கீசிய சொல்லின் வழிச் சொல்லாகக் கொள்ளுதல் மொழி நூலார்க்கு ஒத்த முடிவாம். எனவே, 'மலையாள நாடு' எனப் பொருள் தந்து 'மலபார்' என்ற சொல் சிறப்புறுதல் நம்மவர்க்கும் உடன்பாடே.

## (iii) தெலுங்கு (Telugu):-

திராவிட மொழிக் குடும்பத்தில் தமிழ் மொழியைப் போன்று தொன்மைச் சிறப்பாலும், சொல் வளத்தாலும் மிகச் சிறப்புற்று விளங்குவது இத் தெலுங்கு எனலாம். **"In respect of antiquity of culture and glossarial copiousness, Telugu is generally considered as ranking next to Tamil in the list of Dravidian idioms, whilst in point of euphonic sweetness it justly claims to occupy the first place"** என்று **Dr. Caldwell** குறிப்பிடுவர். பிற்காலத்துப் பாரதியாரும் இத்தெலுங்கின் இனிமையைச் சுவைத்துத் தமமுடைய பாடலில், "சுந்தரத் தெலுங்கினில் பாட்டிசைத்து" எனக் கூறுதலும் ஈண்டு நோக்கத் தக்கது.

மேலைநாட்டு ஐரோப்பியர்கள் '**Gentoo**' என்ற சொல்லால் வழங்கினர். இப் போர்த்துக்கீசிய சொல்லுக்குரிய பொருள்

'புறச்சமய மக்கள்' (heathens or gentiles denoting all Hindus or natives) என்பதாம். ஆனால் இவ்வழக்கு மொழியோடு இயையாது காலப்போக்கில் வழக்கொழிந்து நின்றுவிட்டது. முகம்மதியர்கள் தெலுங்கு மொழி பேசப்பட்டு வந்த நிலப்பகுதியைத் 'தெலிங்காணம்' என்று அழைத்தனர்.

தமிழர், தெலுங்கர் இவர்களிடையே காணப்பட்ட உறவு முறையில் சில உண்மைகள் வெளிப்படுகின்றன. தொன்மைக் காலத்தில் தமிழர்க்கு வழிகாட்டியாய்க் கடல் வாணிகத் துறையிலும் மிக்க துணை புரிந்தவர்கள் இந்தத் தெலுங்கர்களே. ஆனால் யாதொரு முயற்சியும் மேற்கொள்ளாமல் வழிகாட்டியாய் விளங்கினாலும் தமிழர்கள் வாணிகத்தில் சிறக்க இவர்களைப் பற்றிய செய்திகள் யாவையும் நாம் அறிய இயலவில்லை. கீழைக் கடலில் வணிகம் மேற்கொண்ட தமிழர்களை மலேயா நாட்டு மக்கள் 'கிலிங்' (Kling) என்ற சொல்லால் வழங்கினர். இந்தச் சொல்லே தமிழர், தெலுங்கர் உறவைச் சொற்பொருள் நிலையிலும் காட்டிற்று எனக் கொள்ளுதல் வேண்டும். 'Kling' என்ற சொல் 'Kalinga' என்ற சொல்லின் திரிபோ என ஐயுறுவர். தெலுங்கு மொழியில் 'Kalinga' என்பது நெய்தல் நிலத்தைக் குறிக்கவல்லது (The seaboard of the Telugu country). 'Kalinga' என்ற சொல்லில் முதற்கண் காணப்படும் மெய்யைச் சார்ந்த அகரம் (க+அ) நீக்கப்பட்டு 'Kling' எனப் பிற நாட்டாரால் வழங்கப்படுதல் அம்மக்களின் சொல் வழக்கையே காட்டும். ஆனாலும் தமிழர், தெலுங்கர் உறவே (வணிக உறவு) இந்தச் சொல்லாட்சி உருவாக அடிப்படையாய் இருந்திருக்க வேண்டும் என்பது மட்டும் உண்மை.

வடமொழிப் புலவர்களோ இத் தெலுங்கு மொழியை 'Āndhra' என்ற சொல்லால் வழங்கினர். வடமொழிவாணர்களுக்கு 'Kalinga' என்ற சொல்லைக் காட்டிலும் 'Andhra' என்ற சொல் வழக்கே மிகப் பரவலாக வழக்கில் அமைக்கத் துணை புரிந்திருக்கக் கூடும். இரிக்கு வேதத்தின் சார்புடைய ஐதரேய பிராமணத்தில் (Aitareya Brahmana of the Rig-Veda) ஆந்திரர்கள் நாகரிகமற்ற இனமாகக் (uncivilized race) குறிக்கப்படுகின்றனர். இவ்வடமொழி வாணர்கள் ஒரு கொள்கையை நிலைநாட்டும்பொழுது தங்கள் மொழியின் சான்றினையே பெரி

---

[1] Dr. Caldwell – A Comparative Grammar of the Dravidian Languages. P. 25.

தாகக காட்டி நிலை நாட்டினும், ஒப்பியன் மொழி இலக்கணத் தார் வேறு பல சான்றுகளை அடிப்படையாகக் கொண்டு அக் கருத்தை ஒதுக்குதலை நாம் காணலாம் Pliny என்பார் ஆந்திர மக்களைச் சிறப்பாகக் கூறுவதோடல்லாமல், ஆற்றல் வாய்ந்த வர்களாகவும் குறிப்பிடுகிறார் உரோம நாட்டு நிலப்படமாகிய 'Peutingar Tables' என்னும் அட்டவணையில் 'Ândra-Indi' என்பது இடம் பெறுகிறது கி பி 7-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த சீனவழிப்போக்கராம் Hieun-Tsang முதன் முதலில் இவ்வாந்திரர்களின் மொழியைப் பற்றிச் சில உண்மைகளை வெளியிடுகின்றார் ஆந்திரர் மொழி மத்திய இந்தியாவின் மொழி யினின்றும் மாறுபட்ட ஒன்று என்றும், ஆந்திரர் மொழியின் எழுத்து வடிவங்கள் மத்திய இந்திய மொழிகளின் எழுத்து வடிவங்களோடு நெருங்கிய தொடர்பைக் கொண்டிருக்கின்றன என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார். "Hieun Tsang, the Chinese pilgrim, states that the language of the Andhras differed from that of Central India, whilst the forms of the written characters were for the most part the same"[2] என்று Dr Caldwell இக்கருத்தினை எடுத்துக் காட்டியுள்ளார் இக் கருத்துக் கள் தெலுங்கு மொழியைப் பற்றிய தெளிவான முடிவிற்கு வரலாற்று வகையில் துணை செய்யும் Kumarila Batta தென்னக மொழிகளைக் குறிப்பிடுங்கால் 'Āndhra' - 'Drāviḍa' - 'Bhāshā' என்றே அழைப்பர் அவர் 'Kalinga' என்ற சொல்லாட்சி வழக்கில் இருந்திருக்க வேண்டும் என்றால் 'Kalinga - Drāviḍa - Bhāshā' என வழங்கத் தவறியிருக்க மாட்டார்

தெலுங்கு - சொல்லாட்சி :—

தெலுங்கு மக்கள் தம் மொழியினை Teluġu எனக் குறிப் பிடுகின்றனர். இச் சொல்லைத் தவிர 'Teluṅgu', 'Teliṅga', 'Tailiṅga', 'Tenugu', 'Tenungu' என்ற சொற்களும் பிற பெயர் களாக வழங்குகின்றன ஆனால் 'Tenugu' அல்லது 'Tenuṅgu' என்ற சொல்லே இம்மொழிக்குரிய சிறந்த பெயரென்று அம் மொழிப் புலவர்கள் குறிப்பிடுவர் இச்சொற்களுக்குரிய பொருள் 'இனிமை' என்பதும், 'தேன்' என்ற சொல்லிலிருந்து அது பெறப் பட்டது என்பதும் அவர்கள் காட்டும் காரணங்களாம் இத்தகைய

[2] Dr. Caldwell— A Comparative Grammar of the Dravidian Languages. P. 27

காரணத்தை நாம் மறுத்தாலும சொற்போக்கையும், மொழியினி மையையும் ஒன்றாக இணைத்து இடப்பெயரைப் பொருத்தமுடையதாகக் காட்டுவா (Melli-flous character of the Telugu Language). A D. Campbell என்பார், 'Trilinga' என்ற வடிவத்தின் மருஉச் சொல்லே 'Telungu' என்பார் Trilingam என்ற சொல்லின் பொருள் மூன்று கோவில்களை எல்லையாகக் கொண்ட நாட்டின் மொழி எனபதாம இக்கருத்தை C P Brown என்பார் அறவே மறுக்கின்றார் இக்கருத்து நமக்கேற்றாலும் நம்பப்படுத்தற்கில்லை. இருப்பினும 'இலிங்கம' என்ற சொல்லோடு இது தொடர்புடையதாக இருப்பதை மட்டும் நாம அறிதல வேண்டும. திபெத்து நாட்டு அறிஞராகிய தாரநாதா (Taranatha) என்பவா 'Trilinga' என்ற சொல்லினைக் கையாளுகின்றார். அவா 'கலிங்கம' என்ற நாட்டினைத் 'திரி இலிங்கம' என்ற நாட்டின ஒரு பகுதி என்றும, அதன தலைநகரம 'கலிங்கபுரம' என்றும குறிகதுள்ளார Ptolemy எனபார மிகப பழங்காலத்திலேயே இச்சொல்லைப பற்றிய வழக்கினைச் சுட்டிக் காட்டியுள்ளார். இவவாறு தனிப்பட்ட ஒரு நிலையில இச் சொல்லைப பற்றிய கருத்துக்கள நிலவியிருக்க, மற்றும சில மொழியியல பேராசிரியாகள வேறு வகையாக இதற்குப பொருள கூறுவர்.

Dr Kern என்பார் 'தெலுங்கு' என்ற சொல 'திரி இலிங்கம' என்ற சொல்லின மரூஉ அன்று என்றும, 'திரி இலிங்கம்' என்ற சொல்லின் மரூஉச் சொல்லே இச்சொல என்றும குறிப்பிடுவா. வராஹமிகிரரின் பிரகத்சமஹிதையின் மொழி பெயர்ப்பில Dr. Kern இவ்வழக்குப பற்றிய சொல் புராணத்தில் இருப்பதாகக் காட்டுகின்றார். Gen Cunningham என்பவா தம் 'Ancient Geography of India' என்ற நூலின் கண் பழைய கல வெட்டு ஒன்றில மன்னர் குடியைச் சார்ந்தோர தமமைத் 'திரி கலிங்க அரசர்' எனக் கூறிக கொண்டதாகக் கூறுவர். மகா பாரதத்தின் மூவேறு இடங்களில் வேறுபட்ட மூன்று குழுவினரைக் குறிக்கக் 'கலிங்கா' என்ற சொல கையாளப்படுவதையும நாம எணணுக் காணல் வேணடும. Pliny என்பார 'Kalingam' என்ற சொல்லோடு வேறு சிலவற்றையும் இணைத்துக் கூறுவா. அச்சொற்கள் Macco-Kalingas, Gangaridesa Kalingas என்பனவாம். Pliny என்பார Moda-Kalingam என்ற சொல லோடு 'Trilinga' என்ற சொல்லைப் பிணைத்து, இவை இடையேயுள்ள ஒற்றுமையைக் குறிப்பாகக் காட்டுவர். A. D Campbell என்பவா 'modaga' என்ற சொல்லின் பொருள் மூன்று எனப் பொருள் கொண்டு, அதுவே பழமையான தெலுங்குச் சொல்

என வலியுறுத்துவர். ஆனால் இன்றைய தெலுங்கில் 'மூன்று' என்ற எண்ணுப் பெயரைக் குறிக்க, அம்மொழியில் காணப் படுஞ் சொல் 'mūḍu' என்பதேயாம். தெலுங்கு மொழியின் உயர் இலக்கிய வழக்காகக் காணப்படும் சொல் 'mūḍugu' (Poetic form) என்பதேயாம் இவ்வாறு பழமைத் தெலுங்குச் சொல்லும், இன்றைய தெலுங்கு வழக்கும் மாறி வழங்கப் பெறு கின்ற நிலையில் நாம் தெளிவாக எதனையும் மேற்கொள்ள இயலவில்லை. C P Brown என்பார் Moda+Kalingam என்ற சொல்லைப் பிரித்து மூன்று கலிங்கம் எனப் பொருள் கொள்வர்

இவ்வாறு தெலுங்கு மொழியைப் பற்றி மொழி வல்லார் பல்வேறு கருத்துக்களைக் கொள்ளவும், நம் தமிழர் 'வடுகு' என்ற சொல்லால் அம்மொழியைக் குறிப்பர் நாயக்க வழியைச் சேர்ந்த தெலுங்கர்களைச் சிறப்பாக 'வடுகர்' என்று அழைப் பது மரபாக வந்து விட்டது இன்றும் 'வடுகன்' என்ற சொல் வழக்கு இருத்தலை நாம் அறிவோம். இந்தச் சொல்லின் முதன் மொழியாக வழங்குவது 'வட' என்ற தமிழ்ச் சொல்லாம். நமக்கு வடபாலுள்ள மக்களை நிலநூல் முறைப்படி 'வடுகர்' என அழைத்தலும், அவர்கள் மொழியை 'வடுகு' என அழைத்தலும் ஓரளவு பொருத்தமுடையனவாகத் தோன்றும்.

### (iv) கன்னடம் (Canarese)

திராவிடக்குழு மொழிகளுள் தெலுங்கையடுத்து இடம் பெறத் தக்கது கன்னடமொழியாம். இதனை 'Kannada' அல்லது 'Karnāṭaka' எனவும் அழைப்பர். தமிழ், மலையாளம் இவை யிரண்டும் ஒன்றுபட்டு இயைதலைப் போலத் தெலுங்கும், கன்னடமும் தொடர்புடைய நிலையில் ஓரினமாக வழங்கப் பெறும். மைசூர் மாநிலத்தின் பெரும்பகுதியில் இம்மொழி சிறப்பாக வழங்கி வருகிறது. 'கர்நாடகம்' என்னும் சொல் பழங்காலத்தில் தெலுங்கு, கன்னடம் ஆகிய இரு மொழிகளையும் குறிக்கத்தக்க பொதுச் சொல்லாக (common term) வழங்கப் பட்டது. பின்னர் தெலுங்கை நீக்கிக் கன்னடம் மட்டுமே அதனால் குறிக்கப் பெற்றது.

கன்னட மொழியுள் 'பழங்கன்னடம்' என்றும் 'புதுக் கன்னடம்' என்றும் இரு கிளைமொழிகள் நிலவுகின்றன. தமிழில் காணப்பெறும் செந்தமிழ், கொடுந்தமிழ் போன்ற பாகுபாடு

களைப்போல இவை அமையும். இவ்விரு வகைகளையும் முறையே 'Classical Canarese' 'Colloquial Canarese' என மொழிவாணர் குறிப்பிடுவர். பழங்கன்னட மொழிக்கும், புதுக்கன்னட மொழிக்கும் இடையே காணப்படும் வேறுபாடு சில உண்மைகளை உணர்த்தும் தெலுங்கு, மலையாளம் போன்று வடமொழிச் சொற்கலப்பினால் ஏற்பட்ட மாறுபாட்டை இவையிரண்டும் உணர்த்தா (By containing a larger infusion of Sanskrit derivatives). ஆனால் இவ்வேறுபாடு சொல்லாக்க முடிவுகளினால் ஏற்பட்டதொன்று என Dr Caldwell குறிப்பிடுவர் (By the use of different inflectional terminations) பழைய கன்னடம் என்ற மொழியும், பழைய கன்னடம் என்ற வரிவடிவமும் (written character) மாறுபட்டவை இசகாரணத்தால் இவையிரண்டையும் ஒன்று எனக் கொள்வதற்கு இல்லை. மராட்டிய நாட்டிலும், மைசூர் நாட்டிலும் காணப்படும் கல்வெட்டுக்கள் பழங்கன்னட வரிவடிவம் உடையவை. Hala-Kannada என்ற பழைய கன்னடக் கல்வெட்டுக்கள் வடமொழியில் காணப்படும் அந்தக் கல்வெட்டு கன்னட எழுத்தாகக் கருதப்படுவதற்கு இல்லை. "The dialect called Ancient Canarese is not to be confounded with the character denoted by the name which is found in many ancient inscriptions in the Maratha country, as well as in Mysore. The language of all really ancient inscriptions in the Hala Kannada or Ancient Canarese character, is Sanskrit not Canarese"[1] என்று Dr Caldwell குறிப்பிடுவர். இவ்வாறு ஒரே மொழியில் காணப்பெறும் இருவேறு கல்வெட்டுக்கள் வேறுபட்ட வரிவடிவங்களைக் கொண்டு விளங்குவது நமக்குப் புதிராகவே தோன்றும்.

நாம் மேலே கண்டவாறு 'கர்நாடம்' அல்லது 'கர்நாடகம்' என்ற சொல் பொதுச் சொல்லாக நின்று தெலுங்கையும், அதனோடு ஒத்த கன்னடத்தையும் குறிக்கப் பிற்காலத்தில் முன்னைய மொழி (Telugu) மறைக்கப் படுதலை நோக்குங்கால் இச்சொற் பொருள் நிலை குழப்பமாகவே தோன்றும். ஆனால் இன்றைய வழக்கில் கன்னடம் என்ற சிறப்பு 'ன'கரம் பெற்ற சொல் வழக்கில் வாழ்ந்து வருகிறது. வடமொழிவாணர் 'Karnataka' என்ற சொல்லை வடச்சொல்லாகக் கொள்வர்.

ஆனால் Dr. Gundert என்பார் (கார்+உ) 'கரு+நாடு+அகம்' எனப்பிரித்துத் திராவிட மூலச் சொல்லாகக் காட்டிய பொருள்

[1] Dr. Caldwell — A Comparative Grammar of the Dravidian Language P. 30.

கொள்வா 'கருநாடு' என்பது 'கருபபு நாடு' (Black cotton soil) ஆகும. கி. பி. 5-ஆம் நூற்றாண்டைச சாாநத வராஹமிகிரர் இநதச் சொல்லையே கையாள்வா. Taranatha என்பாரும 'கரு நாடகம்' எனக குறிபபிடுவா ஆனால் முகமமதியாகள இதனைத தெளிவாக உச்சரிககாமல 'Karnatak' (or) 'Carnatic' என வழஙகினா இறுதியாகக காணபபெறும இசசொலலே (Carnatic) ஆஙகிலேயாகளால ஏறறுக கொளளபபடடு, மேறகொணடு மறறொரு முறை தவறாக உசசரிககபபட்டு 'Canarese' என ஆடமபரமாக அழைககப பெறறது இமமொழி பேசும மககளாலேயே 'காநாடகம' என்ற சொல் பலவகை நிலைகளுககுத திரிதது வழஙகப படக காலபபோககில கன்னடம (Kannada) என ஆகிறது.

## (v) துளு (Tulu)

இமமொழிக குடுமபததில் அடுத்து இடம்பெறததககது 'துளுவம' என வழஙகபபடும 'துளு' மொழியேயாம இம மொழியை ஆராயவோா இதறகென ஒரு தனிபபடட வரிவடிவ மும, இலககியமும் இலலாமையால இதனைப பணபடட மொழிக குடுமபத்தில் சேர்ததுக கொளள ஐயுறுவா. ஆனால் Basle **missionary**-ஐச சாாநத குருமாாகள் இததுளு மொழியில் முதன் முதலாகச் சில நூல்களை அசசிட்டனா. அநநூலில் காணப்படும வரிவடிவத்தைக கன்னடமொழி வாயிலாக அசசிட்டமையால் இமமொழிககுரிய எழுதது 'கன்னடம' என்ற கொளகை நமபப் படுவதாயிற்று இலககியம் இலலையென்ற ஒரு குறை காரண மாக இதனைப பணபடுததபபெறா மொழி எனக கூறல் தகுமோ? இம்மொழி பேசுகின்ற மககளின் தொகையும் மிகமிகக குறை வாகக காணப்படுவதால இமமொழி அழிநதொழியும் என்ற நமபிககை வளாநதாலும் அதறகேறறவாறு இதனைப் பேசுகின்ற துளுவர்கள் அமையாமை காண்க. துளு என்ற சொலலுககு Brigel என்பாா பணிவு, அடககம் எனப பொருள் கொளவாா. "The name Tulu means, according to Mr. Brigel, mild, meek, humble, and is to be regarded therefore as properly denoting the people, not their language"[1] என்று Dr. Caldwell குறிப பிட்டுளளமையைக காண்க இச் சொலலும் அமமொழியைக குறிககாமல மொழிபேசும் மககளையே குறிககும். திரு. எல்லிஸ்

[1] Dr. Caldwell — A Comparative Grammar of the Dravidian Language. P. 32.

(Mr Ellis) பெருமகனார் இத்துளு மொழியை மலையாள மொழியின் கிளைமொழியாகக் கொள்வர் (A dialect of Malayālam). இதற்குக் காரணம் இம்மொழி பேசப்படும் பகுதிக்கு அண்மையில் மலையாளம் வழக்கிலிருப்பதும், துளுவ அந்தணர்கள் வடமொழியில் எழுத மலையாள எழுத்துக்களையே பெரும்பாலும் மேற்கொள்வதும் ஆம். துளு இலக்கணம் (Tulu Grammar) எழுதிய Brigel தம் நூலுள் இம்மொழி மலையாளத்தின் கிளை மொழி அன்று என மிகத் தெளிவாக வரையறுத்துக் காட்டுவர். தமிழ் — மலையாளம் என்ற இணைப்பில் காணப்படும் வேறுபாட்டைக் காட்டிலும் மிகுந்த வேறுபாடுகள் துளு–மலையாளம் இவற்றிற்கிடையே காணப்படுவதே இதற்குத் தக்க காரணமாம். ஆனால் கன்னட மொழிக்கும், துளு மொழிக்கும் இடையே அத்துணை வேறுபாடுகள் இல்லை. குடகு மொழியும், துளுவும் மிகக் குறைவான வேறுபாடுகளோடு விளங்குகின்றன. ஆனால் குடகு தமிழ் மொழியினின்றும் பெரிதும் வேறுபடுதலை மிகச் சிறப்பாக உணர்தல் வேண்டும். Ellis அவர்கள் சென்னைக்கு அண்மையில் வாழ்ந்த 'குறும்பர்கள்' என்ற நாடோடி இடையர்கள் (Nomadic shepherds) வேறு நிலங்களுக்குத் துரத்தப்பட்டு அவர்களுடைய நிலங்கள் துளுவ நாட்டு வேளாளர்களுக்குக் கொடுக்கப்பட்டதாகக் கூறுவர். இன்றும் துளுவ வேளாளர் என்ற ஒருவகை இனம் நம் தென்னகத்தில் வழங்கி வருதலை நாம் அறிந்த ஒன்றே. சென்னை மாநிலத்தில் காணப்படும் பேச்சு வழக்கில் துளுவ மொழிக் கலப்பு இன்மையால் இவர்களைப் பற்றி வழங்குகின்ற கதை ஏதோ ஒருவகைக் கொள்கையை வலியுறுத்துவது என்று மட்டும் கொள்ளலாம். அன்றியும் சென்னை நகரத் தமிழ் இம் மாநிலத் தமிழினின்றும் வேறுபட்டு விளங்குவதோடு துளு மொழிக் கலப்பு இல்லாமல் தெலுங்கு மொழிக் கலப்பினைக் கொண்டு அமைதல் நோக்குதற்குரியது.

### (vi) குடகு (அல்லது) கூர்க் (Kudagu or Coorg)

பண்பட்ட மொழிக் குடும்பத்தில் இறுதியாக இடம் பெறுவது குடகு அல்லது கூர்க மொழியாம். துளு மொழியோடு ஒப்பிட்டு நோக்குங்கால் இதனைப் பண்பட்ட மொழியெனச் சொல்வதற்கில்லை. Dr. Caldwell இம் மொழியைப் பற்றிய ஆய்வு முடியப் பெறாததாய் இருக்கின்றது என்றும், தனி மொழியாகக் கொள்ளாமல் கன்னட மொழியுள் அடக்கிக் கூறப்பட்டு வந்தது என்றும் குறிப்பிடுவர். குடகு மொழி என்

பதனை 'Kodagu' என வழங்கினா அதுவே 'Kudagu' என்றும அமைய, மேற்கு என்னும் பொருளைத தரும 'Kuda' என்ற சொல்லின் வழிவநததாகக காட்டுவா. Dr Mogling என்பாா (German missionary) 'Kudagu' என்ற மொழி கன்னடததை விடத தமிழ, மலையாளம எனற இவறறோடு நெருஙகிய தொடாபுடையதாக இருநததெனக காட்டுவா. ஆனால Dr Caldwell திராவிடக குழு மொழியுள் இமமொழி எதனுடனும நெருஙகிய தொடர்புடையதாக விளஙகவில்லை எனக குறிபபிடுகின்றா. ஆனால் அவரே இம்மொழியாய்வில மேற்பாஙகாக நோககின் பழஙகன்னடததிற்கும (Old Canarese), துளுவிறகும இடையே இம மொழி அமைதல கூடும எனபா Major Cole என்னும ஆய்வாளா குடகு மொழியைப பற்றிய இலககணம ஒன்றினையும, சில குடகுப பாடலகளையும தொகுத்துளளாா Burnell என்பார், தமமுடைய, "Specimens of South Indian Dialects"- எனும பகுதியில் இம மொழியைப பற்றிய ஓா உணமையை எடுததுக காட்டியுளளாா நீலகிரி மலையைச சாாநத தொன்மையான குடிமககளின் மொழியோடு இநதக குடகு மொழியும ஒன்றி நின்று தன் பழமைத தன்மை மாறாது விளஙகுகிறது என்னும கருதது இம் மொழியின் சிறபபைக காட்டும.

இவ்வாறு தமிழ, மலையாளம், தெலுஙகு, கன்னடம், துளு, குடகு ஆகிய ஆறு மொழிகளும தென்னகத்தில் மிகப் பழங் காலந் தொட்டு வழஙகி வநததோடலலாமல, தமமுள்ளே அடிப்படை ஒற்றுமைக கூறுகளைக் கொண்டு (fundamental affinities) விளங்கின எனத் துணியலாம. அன்றியும Dr Caldwell காட்டுமாறு இம்மொழிகள் வழங்கப்பெறறு வந்த நிலப் பரபபு மிகப பரவலாகவும, இடையீடின்றி அணமைச்சாயல் கொணடும இருந்ததையும அறியலாம். இலககிய வளமும, இலககணச்செறிவும் கொணடு மிளிரும் தமிழோடு பிறமொழிகள ஒன்றி நின்று மிகப் பழமையான மொழிக குடும்பத்தில் நலல பண்பட்ட மொழிகளாக விளங்கி நம்மவா சிறபபைக காககின்றன எனல சாலபபொருநதும்.

---

# 20. 'பண்படுத்தப் பெரு மொழிகள்.' The Uncultivated Dialects.

தமிழ முதலாகிய மொழிகளைப போல் அல்லாமல் பண் படுத்தப் பெரு மொழிகளாகக கருதபபடுவன பலவேறுபட்ட மாறறஙகளைக கொணடிருந்தாலும சில அடிபபடை ஒற்றுமை களால் திராவிடக குடுமபததில இணைககபபடுகின்றன. ஒபபியன் முறையில (Comparative method) நாம கொண்ட கருததுககள இமமொழிகளைப பற்றிய ஆயவிறகுப பெருநதுணை புரியும எண்ணுப பெயாகள (Numerals), இடபபெயாகள (Pronouns) முதலான இலககணக கூறுகள் இம மொழிகளை ஒன்ருகக கொளவதறகுத துணைசெய்யும Dr Caldwell பண்படுததப பெரு மொழி இனஙகளை எழுததும, இலககியமும இலலாமை கொணடு அவறறைத தனியாகக குறிபபிடுகின்ருர் துதம் (Tuda), கோதம (Kōta), கோண்டு (Gōnd), கநதம அல்லது கூ (Khand/Ku), ஒரோவன் (Oraon), இராஜ்மஹால் (Rajmahal-/Maler) எனும் ஆறு மொழிகளும இபபகுப்பில காணப் பெறும. இவறறைப பற்றிய மொழியியல குறிபபுககளை (Linguistics notes) நிரலே காணபோம

(1) துதம்:- (Tuda)

துதம் (Tuda) (அலலது) தொதம் (Toda) என்னும் மொழி இவ்வரிசையில முதறகண் அமையும் நீலகிரி மலையைச் சார்நத துதவா அல்லது தொதவர் இம்மொழியைப் பேசுகின்ற மககளாம் இம்மக்களிடையே அமைந்துள்ள சில பழககஙகளால இம மொழி யைப பேசுகின்ற மககள் தொகை நாளுககு நாள தேய்ந்து வருகின்றது. Rev. F Metz என்பாா இமமொழியைப் பற்றிய குறிபபுககளையும், இம்மொழி பேசும் மக்களின் பழககஙகளையும் நிரம்பக கூறுவா Col Marshall என்பாரும் இவாகளைப பறறிய செய்திகளை எடுத்துக கூறியுள்ளார். இவர்கள் பேசுகின்ற மொழியில இலககிய வழககு இலலாமல் இருநதாலும் ஒபபியன் மொழியிலககணத்திற்குப் பெருநதுணை புரிகின்ற அளவுக்கு இம்மொழி விளங்குகிறது Rev. Dr G. U Pope இமமொழிச சொல்லைப பற்றிய தம கருத்தைத் தெரிவிக்குஙகால தமிழொடு தொடர்புடையதாகக காட்டுவர். 'துத' அல்லது 'தொத' என்ற சொல தமிழத 'தோழன்' என்ற சொல்லோடு உறவுடையது எனக காட்டுகின்ருர். ஆனுல் அககருத்து ஒபபுக கொள்ளப்படுவதாக இல்லை.

(2) கோதம் (Kōta)

மேற்கண்ட தொதவாகளைப போல நீலகிரி மலையில் கோதாகள என்ற பிரிவினரும வாழந்து வருகின்றனா இவா களின் தொகையும மிகக குறைவாகவே காணபபடும. இவா கள மொழியாகிய 'கோதம' மிகப பழமையுடையதாய், கனன டததின் கொசசைக கிளைமொழியாக வழஙகபபடுகிறது (A very old and very rude dialect of Canarese) இவவிருவகை மொழிகளேயலலாமல நீலகிரி மலைசசாரலில இன்னும் சில மொழிகளும் வழஙகபபடுவதாகக கூறுவா வடகாகள (Vadagars) பேசும தனிபபட்ட மொழியும, இருளாகள பேசும தமிழ மொழிச சிதைவும (rude Tamil), குறுமபாகள பேசும கொசசைத தமிழுமாம.

(3) கோண்டு (Gond)

மததிய இநதியாவில உளள காடுகளிலும, குன்று களிலும வாழகின்ற கோணடாகள எனபாா ஒருவகைப பழஙகுடி மககளே. இவாகள் வாழநத பகுதியைக கோணட வனம் (Gondwana) என்று அழைபபா இக கோணடாகள தஙகளைத தாஙகளே அழைககும பொழுது 'கோயீதோ' (Koitor) எனக கூறுவா. இவாகளைப பற்றிய முழுமையான செய்திகள Col. Dalton-உடைய "Ethnology of Bengal" என்ற நூலில காணபபடும Rev J. G Driberge என்பாா 1849–இல இமமொழியைப பற்றிய இலககணததை வெளியிட்டுள்ளாா. Dowson என்பாா அணமைக காலததில இம் மொழியைப பறறிய இலககணம் ஒனறையும, சொற் றொகுதியையும் வெளியிட்டுள்ளாா் Dr. Grierson என்பாா இமமொழியைப பறறிக குறிப்பிடுஙகால், இககோண்டாகள ஆரிய மொழியைப பிறகாலததில பயின்று பேசசு வழககில கையாண்டனா எனறும், இததகைய மொழிக கலபபுக காரண மாக இநதக கோணடு மொழி திராவிட மொழிககும, ஆரிய மொழிககும இடைபபட்டதாக இருததல வேணடும எனறும குறிபபிடுவா ஆனால இமமொழிககு எழுதது வடிவமோ, இலககணமோ இலலை எனத துணிநது கூறலாம.

(4) கந்தம் அலலது கூ (Khond/Ku) :-

மேலைநாட்டு ஆஙகில அறிஞாகள் இமமொழி பேசும் மக்களைக 'கொநதா' (Khonds) என அழைபபா. அணமையிலுளள

ஒரிசா மககளின் தொடாபால இவாகள 'கநதா' (Kandhs) என அழைககபபடடனா இவவாறு இருவகை நிலைகளில இவாகள அழைக்கபபடவும, இநத மககள் மடடும தஙகளைக 'கூ' (Kus) என அழைததுக கொள்வா. இவாகள் கோணடவனததின் கிழககுப பகுதியிலும், ஒரிசாவின் குன்றுகளிலும வாழ்நததாகக கூறுவா 'கோணடா' என்ற பெயரும, 'கநதா' என்ற இவாகள பெயரும 'குன்று' என்ற தமிழச சொலலடியாகப பிறநதன எனபா 'குனறு' எனற தமிழச சொலலுககு நேரிடையான தெலுஙகுச சொல 'கொணட' (Konda) எனபதாம. இநதக கமிழச சொலலின பொருளை நோககுஙகால மலைவாழ மககளை அழைககினற இநநிலை நமகத ஒபபுமை உடையதாகத தோனறும. இச சொறபொருளை உணாநதும, இதறகு ஒவவாத முறையில இவாகளையடுதது வாழும தெலுஙகா 'கொநதா' என அழைபபதும், 'கோதா' என அழைபபதும வியபபாகவே தோனறும

## (5) இராஜ் மஹால் (Rajmahal/Maler)

வஙக நாடடிலுள்ள இராஜமஹால் என்னும மலையைச சாாநத மககளைப 'பாறையா' (Bāharias) என அழைபபா. இவாகள பேசிய மொழியே 'இராஜ் மஹால' என்பதாம். இம் மொழியின் சொறறொகுதியொனறு 'Asiatic Researches' எனும் பகுதியில் காணபபடுகின்றது Col Dalton என்பாா, 'Ethnology of Bengal' என்ற நூலில இககிளை மொழி திராவிட மொழியின் அடிபபடையில அமைந்துள்ளது எனக குறிபபிடுவா 'சந்தாளர்' (Santhals) என அழைககப பெறும மககளின் மொழியோடு இம மொழியைக கலததல் கூடாது என்றும, இம மொழியின் அமைபபுப் பற்றி மிகக குறைந்த அளவே சான்றுகள் காணப படுகின்றன என்றும மொழி நூலாா கூறுவா

## (6) ஒராவோன் (Oraon)

சூடிய நாகபுரியிலும் (Chota Nagpur), அதற்கண்மையி லுள்ள மாவட்டஙகளிலும இம் மொழியைப பேசுவோர் வாழநது வருகின்றனா Col. Dalton தமமுடைய நூலில், இம்மொழி பேசும் மககளைப் பறறிய சுவையான செய்திகளை வரலாற்றுக குறிப்போடு விளககியுள்ளார். திராவிட மொழியின் அடிபபடை அமைபபுககளோடு ஒன்றி இந்த மொழியும் தன் தொன்மையைக காதது வருகின்றது என்ற உண்மையை நாம் இதனின்றும் அறியலாம். Rev. F. Batsch என்பார், இம்மொழிககுரிய

இலக்கணச் சுருக்கமொன்று (An Epitome of the Grammar of Oraon) வெளியிட்டுள்ளார். பழங்காலச் சில வழக்கங்களும், மொழி ஒற்றுமைகளும் இப்பண்பட்ட மொழிகளைப் பேசுகின்ற மக்களின் தொடர்பை நமக்கு உணர்த்தும்.

Dr Caldwell தம்முடைய ஒப்பியன் மொழி இலக்கணத்தில் திராவிடப் பெருங்குழுவைச் சார்ந்த பண்பட்ட மொழியினங்களைத் தனியே எடுத்துக்காட்டி, அவற்றை நிரலே விளக்குகின்றார். துதம், கோதம், கோண்டு, கந்தம் ஆகிய மொழிகள் திருத்தமற்றவையாய்க் (rude dialects) கொச்சைக் கிளைமொழி நிலையில் அமைந்து விளங்கினாலும், தமிழ், கன்னடம், தெலுங்கு ஆகிய பண்பட்ட மொழிகளைப் போலத் தூயதிராவிடக் கிளை மொழிகள் (Essential Dravidian Dialects) என்பதில் ஐயமில்லை. Dr. Caldwell இராஜ்மஹால், ஒராவோன் ஆகிய இருமொழிகளையும் இவற்றிற்கு அடுத்த நிலையில் திராவிட மொழிகளாகக் கொள்ளலாம் என்பர். இதற்குக் காரணம் இவ்விரு மொழிகளிலும் காணப்பெறும் இடப்பெயர்கள் (Pronouns), முதல் நான்கு எண்ணுப் பெயர்கள் (the first four numerals) ஆகியவை போன்ற இன்றியமையா வேர்ச்சொற்களே திராவிட அடிச்சொற்களோடு (The Dravidian roots) ஒற்றுமையுடையனவாய் விளங்குகின்றன. பிற சொற்களோடு மற்ற குழுச் சொற்களும் கலந்துள்ள காரணத்தால் இவை திராவிடத் தோடு முழுத் தொடர்பு கொள்ள வழியில்லை எனக் கூறுவர். "I venture to classify Rajmahal and Oraon as in the main Dravidian, because the Dravidian roots they contain are roots of primary importance, including the pronouns and the first four numerals, from which it may fairly be inferred that these dialects belonged originally to the Dravidian family" [1] என்று Dr Caldwell குறிப்பிடுவர். இக்காரணத்தால் இவ்விரு மொழிகளும் திராவிட மொழிகளே என்றாலும், இக்குழுவைச் சார்ந்த பிற மொழிகளைப் போல அல்லாமல் தூய்மை குறைந்தவையே.

அண்மைக்கால மொழி ஆய்வில் திராவிட மொழிகளின் நிலைகள் பெரு வளர்ச்சி பெற்று வருதலையும் நாம் காணலாம். மேலை நாட்டு மொழி வல்லார் Dr. Caldwell காட்டுமாறு இரு வகைப் பாகுபாடுகளைக் கொள்ளாமல் மூன்றாகப் பகுப்பர். அவை முறையே தென் திராவிட மொழிகள் (The South Dravidian Languages), மத்திய திராவிட மொழிகள்

---

[1] Dr. Caldwell – A Comparative Grammar of the Dravidian Languages. P 36.

# "Genealogical Tree of the Language - Dravidian"

Proto Dravidian



(**The Central Dravidian Languages**), வட திராவிட மொழிகள் (**The North Dravidian Languages**) ஆகும். இவ்வாறு திராவிட மொழிகளின் நீாமைகளைக காடடும வழிமரபு ஒன்றினையும தனியே கோடிடடுக காட்டுதலை நாம உணரலாம்

நாம மேலே காடடிய பன்னிரு மொழிகளைப பறறிய அறிவோடு, இன்றைய ஆககக கருததுககளையும இணைதது ஒரு சேர ஆய்தலே நன்றும. தென் திராவிட மொழிகள் பேசபபடடு வநத மாநிலபபரபபினையும, அவற்றின் வரலாற்றையும சுருஙகக கணடோம் மததிய திராவிட மொழிகள் ஆநதிரா, ஒரிசா, மகாராட்டிரம், மததிய மாநிலம ஆகியவறறில பேசப படடு வருகினறன.

இவறறை இருவகைகளாகப பிரிபபா **Kolami, Naiki, Parji, Gadaba** ஆகிய நான்கு மொழிகளையும **Kolami–Parji** துணைபபகுபபில அடககுவா **Telugu, Gondi, Konda, Kui, Kuwi** இவறறைத தனியே **Telugu – Kui** துணைபபகுபபில கொள்வா. இவவொன்பது மொழிகளில் தெலுஙகு நீஙசலாக எஞசிய மொழிகள திணை, பால், எண் நிலைகளில் ஒனறிக காணபபடுகின்றன ஒலியனியல், சொலலுருபனியல ஆகிய இருதுறைகளிலும் இமமொழிகள பெற்றுள்ள ஒறறுமைக கூறுகளாலும், இவை வழஙகும நிலபபரபபினை அடியொறறியும தனியே எடுததுக காடடுவாா தமிழ, மலையாளம, தெலுஙகு, கன்னடம ஆகிய இலககணச் செறிவு மிகக மொழிகளில காணபபெறும திராவிடக கூறுகள் இமமொழிகளில உளள மையை நாம் ஒபபியல அறிவால உணர முடிகிறது.

**Sten Konow** என்பவரால் தொகுககப பெறற **Linguistic Survey of India** (*1906*) என்பது திராவிட மொழித்துறை ஆய்வில் ஒரு மைலகல்லாக அமைநதது. **Kolami, Naiki** என்னும இருமொழிகளை அஃது இபபகுபபுககளுள் கொணர்ந்த பெருமையைப பெற்றது **Brahui** மொழியைத திராவிட மொழியாகக் கருதும நிலை அபபொழுதுதான் அமைநதது **Jules Bloch** என்பவரும, **T Burrow** என்பவரும திராவிட மொழியாய்வில புதிய பகுப்பை உருவாகியுள்ளனா எனல் மிகையாகாது. இவ்வறிவு வளாசசியால **Dr Caldwell** அவாகள காட்டிய இருவகைப் பாகுபாடுகள் நீங்கி, மேலே காட்டிய வாறு மூன்றுவகைப் புதிய பாகுபாடுகள் எழ நேர்நதமையைக காணலாம ஆனாலும் மத்திய, வட திராவிட மொழிகளைப பற்றிய நிறைவான அறிவு தெளிவாகக கிடைககப் பெருமை

பேரிழப்பே எனினும் காலப் போக்கில் திராவிட மொழிகளைப் பற்றிய முழுமையான கருத்துக் கண்ணோட்டம் மலர்தல் உண்மையே. பேராசிரியர்கள் T. Burrow, M B Emaneau இவர்களின் அயரா உழைப்பால் உருவான 'A Dravidian Etymological Dictionary' திராவிட மொழிகளின் சீரிய வளர்ச்சியிலே அமைந்து வரும் ஒன்றிப்பு நிலைகளை நன்கு எடுத்துக் காட்டும். இப்பகுப்பில் அமைந்து வரும் பல்வேறு மொழிகளைப் பற்றிய ஆராய்ச்சி நூல்கள் அண்மைக் கால நாட்களில் வெளிவருதலை நாம் காணலாம். வட திராவிட மொழிகளைப் பற்றிய கருத்துக்களை நாம் மேலே ஒருவாறு சுருங்கக் கண்டோம். இவ்வாறு மொழியியல் துறையில் திராவிடப் பழமையின் சீரிய மாண்புக்கு அனைத்து மொழிகளும் ஆற்றியுள்ள பொதுமைக் கூறுகள் நம் அறிவுக்கு விருந்தாகவே ஒளிர்தலைக் காண்க.



# 21. 'திராவிட மொழிகள் இணைகின்ற வகை'.
# The Affiliation of Dravidian Languages.

உலக மொழிக் குடும்பங்களைத் தனிமொழி (Isolative) என்றும், ஒட்டு மொழி (Agglutinating) என்றும், உட்பிணைப்பு மொழி (Inflexional) என்றும் மூவகையாகப் பாகுபாடுத்துவர். இப் பாகுபாடுகளுள் திராவிட மொழியினம் ஒட்டு மொழி வகையைச் சார்ந்தது என்பதைத் தக்க காரணங்களால் மொழி நூலார் விளக்குவர். திணை, பால், எண், இடம், காலம் போன்ற இலக்கண நீர்மைகள் நம் திராவிட மொழிகளில் பெயர் (அல்லது) வினையடியைச் சார்ந்து பின்னடைகளாக (Post-Positional Suffixes) ஒட்டப்படுகின்றன. மேனாட்டு மொழி வல்லார் இம் மொழியினத்தைத் தனியாகக் கொள்ளாமல் இந்தோ-ஐரோப்பிய மொழியினத்தின் கிளைமொழி இனமாகக் கருதுவர். கடந்த நூற்றாண்டில் இக் கொள்கை மறுக்கப்பட்டு, திராவிட மொழிகள் வடமொழியினின்றும் தோன்றியவை என அறிஞர் Colebrooke, Wilkins, Carey ஆகியவர்களால் கூறப்பட்டது. இதற்குக் காரணம் மொழிப் புலமை மிக்க வடமொழியாளர் எல்லாச் சொற்களையும் வடமொழி மூலத்தினின்றும் வந்தவை என்று காட்டியமையே. இக் கருத்தைத் தலைமையாகக் கொண்டு மேலே கண்ட மொழியியல் ஆசிரியர்கள் தவறான கொள்கைக்கு இடந்தந்தனர். "The supposition of the derivation of the Dravidian Languages from Sanskrit, though entertained in the past generation by a Colebrooke, a Carey, and a Wilkins is now known to be entirely destitute of foundation"[1] என்பர் Dr Caldwell. ஒப்பியன் மொழியிலக்கணம் அமைப்போர், தனிப்பட்ட மொழிக் குடும்பத்தின் உயிர்நாடியான அடிப்படை வேர்ச் சொற்களையும் (fundamental roots), இலக்கண அமைப்பையும் (grammatical structure) ஒப்பு நோக்கி உண்மை நிலையை ஆராய்தல் வேண்டும். Dr· Caldwell இவ்வுண்மைக்கு இடந்தந்து, திராவிட மொழியினத்தைத் தனிக்குடும்பமாகக் காண்பதில் வெற்றி காண்கின்றார். அன்றியும், வட நூல் வாணர்கள் காட்டும் சில சொற்களை எடுத்துக்காட்டி, அவற்றின் அடிச்சொற்கள் வடமொழிப் பொருளை உணர்த்தா, என்றும், சொற்பொருள் சிறப்போடும் (semantic value), மொழியியல் வழக்கோடும் (occurences) அச்சொற்கள் திராவிடச் சொற்களே என்ற உண்மையை நிலைநாட்டுகின்றார்.

---

[1] Dr. Caldwell – A Comparative Grammar of the Drâvidian Languages P. 42.

(1) நம் மொழிகளில் "அடவி" என்ற சொல் "அட்" ($\sqrt{aṭ}$) என்ற வினையடியாகத் தோன்றி 'அடாத்தி'ப் (nearness) பொருளை உணர்த்தும் வடமொழியில் அவ்வடிச் சொல்லுக்குப் பொருள் 'அலைந்து திரிதல்' (to roam or to wander) என்பதாம். தமிழில் 'அடா' என்ற சொல் வழங்குவதோடு, 'கேள் + வி' > 'கேள்வி' என்றாதல் போல, 'அடவி' என்ற சொல்லும் ஆகியிருத்தல் வேண்டும் எனக் காட்டுவர். இச் சொற்பொருள் நிரமையால் 'அடவி' என்ற சொல் திராவிடச் சொல்லே.

(2) அடுத்து, 'அண்' ($\sqrt{aṇ}$) என்ற வினையடியைக் கொண்டு ஒலித்தல் (to sound) என்ற பொருளில் 'ஆணி' என்ற சொல் அமைந்ததாக வடநூலார் காட்டுவர். வண்டி உருளையில் பூட்டப்பட்ட ஆணி எக்காலத்தும் ஒலி எழுப்புதல் இல்லை. அன்றியும், 'அண்' என்ற வினையடியாக 'அணை', 'அணி', 'அணவு', 'அணு' என்பப் பொருள் பொதிந்த சொற்கள் நம் மொழிகளில் மிகுதியாகக் காணப்படுவதால், 'ஆணி' என்பது வடசொல் நீர்மையுடையது அன்று.

(3) 'குளம்' என்ற சொல்லைக் காட்டி வடமொழிவாணர்கள் 'குல்' என்ற வேர்ச்சொல் அடியாகப் பிறந்தது என்பர். அவ்வேர்ச் சொல்லுக்குரிய பொருள் 'மூடி மறைத்தல்' (to cover) என்பதாம். இச் சொற்பொருள் வழக்கில் அமைவது பெருவிந்தையே. 'குளி' என்ற ஏவல் வினையடியாகவோ (imperative verb), 'குளு' (kulu) என்ற பண்படியாகவோ (quality base) 'குளம்' என்ற சொல் உருவாகியிருத்தல் வேண்டுமென்பதே உண்மை. இச் சொற்பொருட் சிறப்போடு திராவிட மொழிகளில் இச் சொல் பெருவழக்காகக் காணப்படுகின்றது. தமிழ், மலையாளத்தில் 'குளம்' என்றும், தெலுங்கில் 'கொலனு' என்றும் இருத்தலை நோக்குக. இந்தோ–ஐரோப்பிய மொழியினங்களுள் வடமொழி நீங்கலாக எஞ்சியவற்றுள் 'குல்' என்ற சொல்லாட்சியே இல்லை. இக்காரணத்தால் 'குளம்' என்பதும் தமிழ்ச் சொல்லே.

(4) இனி, 'நீர்' என்ற சொல்லினை வடசொல்லாகக் காட்டுவர். அச்சொல் 'நீ' என்ற சொல்லடியாகப் பிறந்திருக்க வேண்டும். அதற்குரிய வடமொழிப் பொருளோ 'வழிப்படுத்து' (அல்லது) 'காட்டு' (to guide or to direct) என்பதாம். இவ்வாறு பொருள் கொண்டு வடமொழிவாணர் பழங்கால

மககளின் வாழவு நீரோட்டததினுல வழிப்படுததபபட்டது என்பர். இக கருதது பொருததமுடையதாகத் தோனறவிலலை. Dr Caldwell அவாகளும 'நோ' என்ற சொலலடியாகப் பிறநததே 'நீா' எனபா (to be straight or to be level) இககருததும நமமவா புலமையால மறுககபபடுகின்றது வட மொழியில் 'நீா' எனற சொலலை 'ஜலா' எனற சொலலாலும வழஙகுவா தமிழ மொழியுள 'நீா' என்ற சொலலோடு 'புனல' என்ற சொலலும வழககாறறில உள்ளது. தெலுஙகு மொழியில் 'நீரு' என்ற ஒருமை வடிவமும, பன்மையாக 'நீளு' அலலது 'நீள்ளு' என்ற வடிவமும காணபபடுகின்றன. மலையாளததில 'நீரு' என்ற வடிவம அலலாமல 'வெளளம' என்ற சொலலாட்சியும காணபபடுகின்றது கன்னடததில 'நீரு' எனபதும, பணபடுததப் பெரு Gond மொழியில 'ஈா' (ir) என்பதும, Brahui மொழியில 'தீா' (dir) என்பதும காணபபடுகின்றன. 'நீாமை' எனற பணபடியாக 'நீா' என்ற சொல தோனறியிருகக வேணடும எனக கொண்டு அது திராவிடச சொலலே எனத துணியலாம.

(5) 'மீன்' எனனும அழகு தமிழச சொல்லை வடமொழி வாணாகள மிக வேடிககையாகப பொருள கொளவா. 'மீ' என்ற வட மொழி வினையடிககுரிய பொருள 'துனபுறுதது' (to hurt) என்பதாம இதனை Dr Caldwell 'விநதையான அடிச சொல்' (fancied root) எனக காட்டுவா இசசொறபொருளோ அறிவுககுப பொருநதா வணணம ஒளியுளள கணகளை மறைககும தன் ஒளியால சிறபபுறும உயிா வகையை 'மீன்' என வழஙகியது நமமவா பழமை வழககு. 'மின்' (min) எனற திராவிட அடிச சொல் அடிபபடையாக 'மீன' என்ற சொல நிறைபொருளைத தரும. Rajmahal மொழியில் 'மீன்' எனவும், Gond மொழியில 'mint' எனவும வழஙகபபடுகின்றன இவையன்றியும, இச சொலலோடு இடையுறவு கொண்டு ஓரினத தொடாபாக (collateral formations) 'மினனல', 'மின்மினி' என்ற சொறகள வழககததிலிருககின்றன நீரில மீனின் ஒளியைக கணடு பழகியோா வானிலுளள மீனகளைக கணடு வேறு பெயரிடாமல 'விணமீன்', 'வான்மீன' எனறு வழஙகுதல காணக. இவவாறு அறிவோடு ஒனறிய நிலையில சொலலும பொருளும இணைநது நிறறல திராவிட மொழியினததுககுரிய தனிபபட்ட நிலையாம.

தொன்மை இலககணமும வடசொறகளை ஏற்கின்ற முறையை உணாததுகின்றன திராவிட மொழிகள்

ஒவ்வொன்றிலும் தமிழர்-வடவர் தொடர்பு காரணமாக ஒரள விற்கு வட மொழிச் சொற்கள் 'தற்பவமா'கவும், 'தற்சமமா'கவும் கலந்திருத்தல் உண்மையே ஆனால், அம்மொழிகளில் வட மொழிக்கலப்பில்லாத சொற்களும், மரபு மொழிகளும் பல இருந்தன என்பதையும், அவையே அம்மொழியின் சிறப்பியல் புகள் என்பதையும், அவற்றிலே தான் அவ்வம் மொழிகளின் தனிப்பட்ட உயிர்நிலை அமைந்து கிடந்தது என்பதையும் வட மொழி வாணர்களோ, அவரை நம்பிய மேனாட்டு மொழி ஆய்வாளர்களோ கண்டறிந்து கொள்ளாமை பேரிழப்பே இக்காரணத்தால் வடமொழியிலிருந்து திராவிடமொழிகள் பிறந்திருக்க வேண்டும் என்ற பழங்கொள்கை ஏற்றுக் கொள்ளாத தக்கதாக இல்லை. ஒப்பிலக்கணத்தின் உண்மைகளைத் தெரிந்த எவரும் திராவிட மொழிகளின் இலக்கண அமைதியையும், சொற்றொருத்தியையும் நன்கு தெரிந்து இத்தகைய முடிபிற்கு வாரார் என்பது உண்மை Dr Caldwell இத்தகைய சான்று களைக் காட்டிய பின்னர் தக்க காரணங்களை விதி மரபாக வைத்துத் திராவிட மொழிகள் வட மொழியினின்றும் வேறு னவை என்பதை உணர்த்துகின்றார்

(1) திராவிட மொழிகளில் வடமொழிச் சார்பில்லாத தனிப்பகுதி வடமொழிச் சார்புள்ள பகுதியினும் மிகமிக விரிந்தது ஒன்று (The non-Sanskritic portion of the Dravidian languages was very greatly excess of the Sanskrit)

(2) ஒரு மொழியின் உயிர் நிலைகள் (living spirit of a language) எனக் கருதப்படுகின்ற இடப் பெயர்கள் (pronouns), எண்ணுப் பெயர்கள் (numerals), வினைத் திரிபுகள், பெயர்த் திரிபுகள் (the verbal and nominal inflexions) என்பவற்றை நன்கு காணின் இருவகை மொழிக் குடும்பங்களுக்கு இடையே காணப்படும் வேறுபாடு நன்கு வெளிப்படும். இவையன்றி, திராவிட மொழியின் சொற்றொடரமைப்பு முறை (Syntactic arrangement) வட மொழியினின்றும் முற்றிலும் மாறுபட்ட தொன்று இவ்வமைப்பில் இரு குடும்பங்களின் இலக்கணக் கூறுகள் வேறுபட்டுள்ள தன்மையையும் நாம் அறிதல் வேண்டும்

(3) திராவிட மொழிகளில் வெளியிடப்பெற்ற சில அகராதிகள் வட மொழிச் சொற்களையும் கொண்டு விளங்கு கின்றன. ஆனால், இலக்கிய நிலையில் சொற்களை ஆராயுங்கால் வட சொற்கள் அல்லாத திராவிடச்சொற்களைக் கொண்ட அமைப்பில் அவ்வகராதிகள் தோன்றுமையே வேறுபட்ட

கொள்கைகளுக்கு இடந்தரலாயிற்று (True Dravidian words are placed by native grammarians)

(4) ஒப்பியன் மொழிப் படிப்பில் பிறமொழிச் சொற்களை அறவே தவிர்த்து ஆராய்கின்ற முறை Colebrooke முதலா னோரால் பின்பற்றப்படவில்லை. இச் சொற்கள் வடமொழி யினின்றும் மக்கள் கலப்புக் காரணமாகக் கடன் வாங்கப்பட்ட மையாதலாலும், அவ்வாறு அமைந்த பிறமொழிச் சொற்கள் தூய திராவிடச் சொற்களினின்றும் மாறுபட்டவையாதலாலும் இக் கருத்து மொழி நூலாராக்கு உண்மைக் கூற்றை மறைக்கத் துணை புரிந்தன

(5) திராவிட மொழிக் குடும்பத்திலேயே பண்படுத்தப் பெறு மொழியினங்களுள் வடமொழிச் சார்பில்லாத சில மொழிகள் அக்காலத்தில் இருந்தமையை மொழியாய்வாளர் அறிந்திலர். வடமொழிவாணர்களும், மேனாட்டாரும் இந்நிலையை ஆராயாமல் ஒரு முகமாக ஒத்துநின்றது மொழியியல் உண்மையை மறைத்து விட்டது

(6) நம் திராவிடக் குடும்பங்களுள் காணப்படும் சில நிலைகள் நமக்குத் தெளிந்த உண்மையை வலியுறுத்துவன பிற மொழிச் சொற்கள் தாமே வந்தவையல்ல. மொழி வழக்கில் ஏடுடுவோர் அவைகளை அறவே நீக்கி வழங்கவும் கூடும். தமிழ் நீங்கலாக அமைந்த பிற திராவிட மொழிகள் காலப் போக்கில் பல வேறுபட்ட கருத்துக்களுக்கு இடந்தந்து வளர்ந்த காரணத்தால் வடமொழிச் சொற்களை ஏற்றன. நன்கு ஊறிய சொற்களை அறவே விலக்கித் தம் மொழிகளை வழங்குதல் என்பது அம் மொழி மக்களுக்குப் பெருந்துன்பமாக அமையும். இப்பண்பட்ட மொழிகளும் சிறப்பான முயற்சியை மேற் கொண்டால் அப்போர்வையை நீக்கித் தனித்து உலவமுடியும் தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய இம் மொழிகள் இவ் வகையில் முழுமையான பயனைக் காணுதல் அரிது ஆனால், நம் செந்தமிழ் வடசொற்களை அறவே அகற்றித் தனித்தியங் கும் ஆற்றல் பெற்றதோடல்லாமல், வடமொழித் தொடர்பின்றித் தனித்து நின்று மிகவும் மேம்பட்டு விளங்குகின்ற ஆற்றல் வாய்ந்தது என்பதை Dr Caldwell, "Tamil, the most highly cultivated ab intra of all Dravidian idioms, can dispense with its Sanskrit altogether, if need be, and not only stand alone, but flourish without its aid"[2] என்று அழகுற

[2] Dr Caldwell -A Comparative Grammar of the Dravidian Languages P. 45.

உணர்த்துவர் இத்தமிழ் இலக்கியங்களின் பெரும்பாலான நூல்களுள் வடசொல்லாட்சி மிகமிகக் குறைவாகக் காணப்படுகின்ற தன்மை ஈண்டு எண்ணுதற்குரியது

(7) ஒரு நாட்டு மொழியின் உண்மையான சில வடிவங்கள் உள்நாட்டுச் சிற்றூர்களிலும், நாட்டுப் புறங்களிலும் வாழ்கின்ற மக்களின் சொற்களில் மிகுதியாகக் காணப்படும். நகரப்புற நாகரிகத்திற்கு அடிமையாகாமல் வாழ்கின்ற காரணத்தினாலே இன்றைய சிற்றூர்களில் 'சோறு', 'நீர்', 'பாடு' என்ற வடிவங்கள் அழகுறக் காணப்படுகின்றன இச்சொற்களே நகரப்புற நாகரிகத்தில் ஆடம்பர நிலை பெற்றுச் 'சாதம்', 'ஜலம்' 'பிரசவம்' என்று இருத்தல் நம்மவர் குறைபாடே. இக்காரணத்தால் ஒருமொழியின் தொன்மைச் சிறப்பு அம்மொழியின் தொன்மைச் செய்யுட்களிலும், பழமையில் ஊறி வாழும் மக்களின் பேச்சு வழக்கிலும் காணப்படும் என்ற உண்மையை நாம் போற்றுதல் நன்று "The ancient or classical Tamil language, called (செந்தமிழ்) 'Centamil', in which nearly all the literature has been written, contains exceedingly little Sanskrit; and differs from the colloquial dialect ..[3] என்பார் Dr Caldwell

(8) இருமொழிக் குடும்பங்களை நன்கு ஆராயக் கூடிய மொழிவல்லார் அவற்றிடையே காணப்பெறும் ஒற்றுமை, வேற்றுமைக் கூறுகளை அறிந்து கொள்ள அம்மொழிகளின் இலக்கண அமைப்பை (Grammatical Structure) நன்கு ஒப்பிட்டு ஆராய்தல் வேண்டும் இவ்வகையில் நம் திராவிட இலக்கணக் கூறு வட மொழியினின்றும் மிகமிக வேறுபட்டது என உணரலாம்.

Dr Caldwell தம்முடைய ஒப்பியன் மொழி நூலில் Colebrooke முதலான அறிஞர்களின் கூற்றை அறவே மறுத்துத் திராவிட மொழியினத்தைத் தனி இனமாகக்காட்டி உண்மையை வெளிப்படுத்துகின்றார் உலகப் பெருமொழியாம் ஆங்கிலம் இன்று இலத்தீன் மொழியின் துணையை விலக்கித் தனித்தியங்க இயலாது. மாறாக, நம் தமிழோ வடமொழித் தொடர்பின்றித் தனித்து நின்று மிளிர இயலும் என்றல் மிகையன்றே!



[3] ibid P 45

# 22. 'திராவிடமொழிகளும் வடமொழியும்'
# The Dravidian Languages and the Sanskrit.

ஒப்பியன் மொழி இலக்கணத்தில் உண்மைக் கூறுகளை வைத்துத் திராவிட மொழிகளையும் வடமொழியையும் இரு வேறுபட்ட குடும்பங்கள் என்பதனை Dr. Caldwell அழகுறக் காட்டினார். அக்காரணங்களுள் இறுதியாகச் சொல்லப் பெறும் இலக்கண அமைப்பு எனும் கூறு மொழிப் படிப்பின் உயிர்நாடியாக இயங்க வல்லது. உலக வழக்கைக் காட்டிலும் ஏட்டு வழக்கில் பண்பட்ட நிலைகளே அமைதல் இயற்கை. பிறமொழிக் கருத்துக்கள் இடம் பெற்றாலும் மொழிச்சொற்கள் தனித்தன்மையை (individuality) இழந்து விடுவதில்லை. ஆகவே Dr Caldwell காட்டும் இலக்கண வேற்றுமைக் கூறுகள் திராவிடப் பெருமொழியினை இன்றளவும் தனிக் குடும்பமாக விளக்கம் பெறச் செய்தன.

(1) இருதிணை, ஐம்பால் என்ற இலக்கணப் பகுதி நம் திராவிட மொழிகளில் காணப்பெறும் பண்பட்ட நிலையாம். உயிரற்ற பொருள்கள் மட்டுமன்றிப் பகுத்தறிவற்ற உயிர்களும் நம் மொழிகளில் அஃறிணையாகவே மதிக்கப்படுகின்றன. இத்தகைய உயர்ந்த பாகுபாட்டிற்கு அடிப்படை நம் பகுத்தறிவோடு ஒன்றிய நாகரிகமாம். அஃறிணை உயிர்களுள் விலங்கினங்களில் ஆண், பெண் பாகுபாடுகளைச் சொல்லளவில் காணலாம். 'கடுவன்-மந்தி' என்றும், 'எருது-பசு' என்றும், 'களிறு-பிடி' என்றும், 'சேவல் - பெடை' என்றும் அஃறிணை உயிர்களில் தனிப்பட்ட சொற்கள் ஆண் இனத்தையும், பெண் இனத்தையும் குறிக்கின்ற மரபைத் தமிழில் காணலாம். இச் சொற்களைச் சொல்லளவில் மட்டும் கொண்டு அஃறிணை வினைமுடிபையே (Neuter suffixes) வைத்து நாம் சொற்றொடரை அமைக்கின்றோம். தனித்த சொற்கள் இலலா நிலையில் ஆண், பெண் என்ற சொற்களைப் பொருளுக்கு முன்னடையாக (Prefixes) கூட்டி வழங்குகின்றோம். நாம் அஃறிணை நிலையில் ஆண்பால், பெண்பால் உணர்த்தும் விகுதிகளைச் சொற்களோடு சேர்ப்பதுமில்லை. ஆனால், இந்தோ-ஐரோப்பிய மொழிகளிலும், வடமொழியிலும் இத்தகைய பண்பட்ட அமைப்பைக் காண இயலாது. பகுத்தறிவற்ற பொருள்களையும், உயிரற்ற பொருள்களையும், நுண்பொருள்களையும் உயர்திணையாகக் கருதி ஆண்பால், பெண்பால் என்ற பாகுபாட்டினை மேற்கொண்டு மொழிவல்லார் தம் மொழிகளில் செய்வர். வடமொழியில் காணப்பெறும் பால

பாகுபாடு மிகச் செயற்கையாக அமைந்து கற்பனை உணர்வோடு விளங்குதல் ஒரு பெரு விந்தையே. வடமொழியில் 'danda' (stick) என்ற அஃறிணைப் பொருள் ஆண்பாலையுணர்த்தும். 'sila' (stone) என்பது பெண்பாலையும் 'khara' (hand) என்பது ஆண்பாலையும் உணர்த்தும் ஒரே விகுதிபெற்ற இச்சொற்கள் மூன்றும் நல்ல பாகுபாட்டில் இடம் பெறுமல் பெருங் குழப்பந் தருதலைக் காண்க. இதற்கு மேலாகப் பகுத்தறிவு சான்ற உயர் திணைப்பொருள் விந்தையான நிலையில் பாற்பாகுபாடு பெறுதலைக் கீழே காண்க. வடமொழியில் 'மனைவி' என்ற சொல்லைக் குறிக்க மூன்று சொற்கள் காணப்படுகின்றன 'Bharya' என்ற சொல் பெண்பாலிலும், 'Dhara' என்ற சொல் ஆண்பாலிலும், 'Ghalatra' என்ற சொல் அலிப்பாலிலும் வழங்குதல் மிகமிக விந்தையாம். இப்பாற்பாகுபாடு ஒன்றே வடமொழியை வேருகப் பிரித்துத் திராவிட மொழிகளின் சிறப்பை நனகு காட்டவல்ல சான்ருக அமையும் "This (Tamil) rule presents a marked contrast to the rules respecting gender which we find in the vivid and highly imaginative Sanskrit, and in the other Indo-European languages, but it accords with the usage of the languages of the Scythian group"[1] என்னும் Dr. Caldwell கருத்தினை நோக்குக.

பெயர் உரு வேற்றுமை

(2) திராவிட மொழிகளில் வேற்றுமையுருபுகள் (case terminations) தனிச் சொற்களாக நின்று பெயர்கள் வேற்றுமை ஏற்கும் பொழுது எளிதில் பிரிக்கக் கூடிய பின்னடைகளாக (post-positions) இணைக்கப்பெறும் அப்பெயர்கள் விகுதி யேற்று உரு மாறுவதில்லை. வேற்றுமையுருபுகளுள் ஆரும் வேற்றுமை நீங்கலாக, எஞ்சியவற்றுள் ஒருமை, பன்மை என்ற வேறுபாடுகள் இன்மையை அறிக பெயர் ஒருமையாக இருந்தால் நேரிடையாக உருபுகள் சேர்கின்றன பன்மை எனின் பெயரோடு பன்மை விகுதி புணர்ந்து பின் உருபுகளை ஏற்கும். [(i) Noun+case-sign; (ii) Noun+plural suffix+case sign.] ஆரும் வேற்றுமையில் வருஞ் சொல்லின் எண்களுக்கு ஏற்ப 'அது' என்ற ஒருமை வடிவமும், 'அ' என்ற பன்மை வடிவமும் உருபுகளாக விளங்குகின்றன இவ்வாறு உருபுகளில் ஒருமை, பன்மை என்ற வேறுபாடுகள் காணப்படாமலிருக்க, வடமொழி

[1] Dr Caldwell – A Comparative Grammar of the Dravidian Languages. P. 49.

யிலோ ஒருமை, பன்மை இரண்டிற்கும் வேறுவேறு உருபுகள் உள்ளன. இஃதன்றியும் அவ்வுருபுகள் பெயர்ச் சொற்களி னின்றும் பிரிக்க முடியாமல் பிணைந்து நிற்கின்றன.

(3) திராவிட மொழிகளில் அஃறிணைப் பெயர்களை வழங்குங்கால் ஒருமை, பன்மை என்ற இருநிலைகளை நாம் பெரும்பாலும் உணர்த்தாமலேயே வினை முடிபுகளை மட்டும் மாற்றி வழங்குகின்றோம். (The Dravidian neuter nouns are rarely pluralised). 'எருது ஓடிற்று', 'எருது ஓடின' என்றும், 'கண் திறந்தது', 'கண் திறந்தன' என்றும் வழங்கப்படுகின்ற பெயர்ச் சொற்கள் பன்மை விகுதியை ஏற்காமையைக் காண்க. இத்தகைய நிலைகளை இலக்கண நூலார் 'பால்பகா அஃறிணைப் பெயர்' எனும் பகுதியில் அடக்குவர்.

(4) திராவிட மொழிகள் பலவற்றிலும் நான்காம் வேற்றுமை உருபுகளாக இருப்பவை ku, ki, ge என்பன. இவ்வுருபுகள் ஐரோப்பியமொழிக் குடும்பத்தைச் சார்ந்த கிரேக்கம், இலத்தீன், பிரெஞ்சு, ஜெர்மன், சமஸ்கிருதம் ஆகிய மொழிகளில் காணப்படாத நிலை இலக்கண அமைப்பில் இரு மொழிக் குடும்பங்களுக்கிடையேயுள்ள வேற்றுமையை நன்கு உணர்த்தும்.

(5) இந்தோ-ஐரோப்பிய மொழியினங்களில் முன்னுருபுகளாக (prepositions) விளக்கம் பெறுபவை, திராவிட மொழிகளில் பின்னடைகளாக (post-positions) அமையும். "to him" என்ற ஆங்கிலச் சொல்லில் காணப்படும் முன்னடையானது சொல்லுக்குப் புறம்பே நின்று தனிப்பட்ட நிலையில் விளங்குகின்றது. ஆனால், 'அவனுக்கு' என்ற தமிழ்ச்சொல் வடிவத்தில் சுட்டுப் பெயர் நான்கனுருபைப் பின்னடையாக ஏற்று இலக்கணச் சிறப்போடு விளங்குதல் காண்க.

(6) இந்தோ-ஐரோப்பிய மொழிகளிலும், வடமொழியிலும் பெயரடைச் சொற்கள் (adjectives) பெயர்ச் சொற்களைப் போலவே பால், எண், இடம் இவற்றை உணர்த்தும் சொற்களை ஏற்கின்றன (The adjectives are declined like substantives and agree with the substantives to which they are conjoined in gender, number and case). ஆனால், திராவிட மொழிகளில் அவை பெயர்ச் சொற்களைப் போல எத்தகைய இடைச் சொற்களையும் ஏற்காமல் தனியே நின்று 'பெயரடை' என்ற தன்மையைச் சிறப்புறச் செய்யும். சான்றாக, 'அழகு முகம்' என்ற பெயரடைத் தொடரில் 'அழகு' என்ற சொல் உருபேற்காமல்

விளங்க, 'முகம்' என்ற சொல் முகத்தை என்று இரண்டனுருபு ஏற்றும், 'முகத்தன்' என்று பாலகாட்டும் விகுதி ஏற்றும் வழங்கப்படுதல் நம் மொழியின் தனிச் சிறப்பாம் (Adj. form+noun+suffixes) ஆனால், வடமொழியில் "evil desires" எனப் பொருள் தந்து "pāpas kāmas" என்ற சொற்றொடர் உருபேற்கும் நிலைதனைக் காணலாம் 'அம்' என்ற இரண்டனுருபை ('am'—II case-sign) ஏற்கின்ற பொழுது பெயரடையோடும், பெயரோடும் அவ்வுருபு புணர்ந்து 'pāpam kāmam (pāpa+am >a+a>a; kāma+am–a+a>a) என நிற்கும் இவ்வாறே பிற வேற்றுமையுருபுகளும் இவ்விருவகைச் சொற்களோடும் புணர்ந்து ஆங்குக் காணப் பெறுதல் அம்மொழியின் வழக்காம்

(7) (i) திராவிட மொழிகளில் பெயரடை (adjectives) என்ற பிரிவு உண்மையில் இல்லை இம்மொழிகள் பலவேறு வகைகளில் பெயரடை வடிவங்களை ஏற்று விளங்கும் முற்றின் எச்சம் பெயரெச்சம் என்ற நிலையில் அமைந்து பெயரைத் தழுவி நிற்றல் ஒருவகை வழக்கு

(எ-டு) 'உயர்ந்த மரம்'–(**Relative participle+Noun**)

(ii) வினையடியானது பெயருக்கு முன்னால் நின்று பெயரடையாக வழங்கப் பெறுதலும் ஒருவகை

(எ-டு.) ஊறுகாய் —(**Verbal root+Noun**)

(iii) பண்புப் பெயரின் அடிச்சொல் நின்று பெயரெச்ச விகுதி புணர்ந்து பெயரைத் தழுவி நிற்கும்.

(எ-டு.) நல்ல மகன்—(**Quality base+Relative participle suffix+Noun**)

(iv) பண்புப் பெயர்கள் பெயர் உரிச்சொல் விகுதியாகிய 'ஆன' என்பதனை ஏற்றுப் பெயரைத்தழுவி நிற்றலும் ஒரு வகை.

(எ-டு) சிவப்பான ஆடை–(**Quality noun+ஆன+Noun**).

(v) தொழிற்பெயர் நின்று 'ஆன' என்ற சொல் புணர்ந்து பெயரைத் தழுவி நிற்கும்

(எ.டு) உயர்வான மரம் (**Verbal noun+ஆன+Noun**) இத்தகைய பாகுபாடுகள் வடமொழியில் காணப்படுவதில்லை.

(8) திராவிட மொழிகளில் தன்மைப் பன்மையை நாம் இருவகை நிலைகளாகக் காண்கின்றோம். முன்னிலையை உடன்படுத்தியும், முன்னிலையை உடன்படுத்தாமலும் வழங்குகின்ற இருவகை வழக்குகள் தனிச்சிறப்புடையனவாய் விளங்குகின்றன. 'நாம் வந்தோம்' என்ற சொல்லாட்சியில் முன்னிலையை இணைத்துக் கூறும் நிலையைக் காணலாம். இதனை Dr. Caldwell, 'First person inclusive plural' என்பார். இனி, 'யாம் வந்தோம்' என்ற சொல்லாட்சியில் முன்னிலையை விடுத்துக் கூறுகின்ற நிலையைக் காணலாம். இதனை 'First person exclusive plural' எனலாம் ('நீ போ யாங்களும் நீள்நெறிப் படர்குதும்' — சிலப்பு) வடமொழியிலும், இந்தோ - ஐரோப்பிய மொழியிலும் இத்தகைய நிலையை நாம் காண இயலாது. வடமொழியில் ஒருமை, பன்மை என்ற வடிவம் நீங்கலாக இருமை (Dual) என்ற அமைப்பும் காணப்படுகின்றது. "The existence of two pronouns of the first person plural, one of which includes, the other excludes the partly addressed, is a peculiarity of the Dravidian dialects as of many of the Scythian languages; but is unknown to Sanskrit and the languages of the Indo-European family [2] என்பார் Dr. Caldwell.

(9) Dr Caldwell கருத்தின்படி திராவிட மொழிகளில் செயப்பாட்டு வினை என்ற அமைப்புக்குத் தனி வடிவம் இல்லை (The Dravidian languages are destitute of passive voice). ஆனால், தொன்மை இலக்கியங்களைக் காணுகின்ற பொழுது செயப்பாட்டு வினைக்கு எனத் தனி வடிவம் இல்லாவிட்டாலும் சில துணைவினைகள் வாயிலாகச் செயப்பாட்டுப் பொருளை உணர்த்தும் பான்மையைக் காணலாம். இத்துணை வினைகள் (auxiliary verbs) வினைப்பகுதியோடு இணைந்து கம நிலையால் செயப்பாட்டுப் பொருளை உணர்த்தும் தன்மையைப் பெறுகின்றன. 'படு', 'ஈறு', 'உண்' என்னும் துணைவினைகள் இப்பொருளைத் தருவனவாம் (எ. டு) 'திருக்குறள் திருவள்ளுவரால் இயற்றப் பெற்றது' 'வினைப்பயன் உண்ணுங்காலை' எனும் சிலம்பின் அடிகள் 'உண்ணப்படும்பொழுது' என்ற செயப்பாட்டுப் பொருளை ஈண்டு உணர்த்தும். Dr Caldwell, 'To suffer' என்ப் பொருள் கொண்ட துணைவினைகளை ஈண்டுக் காட்டுவார்.

(10) திராவிட மொழிகளில் ஐரோப்பிய மொழிகளைப் போல இணைப்பு இடைச்சொற்களை (conjunctions) நாம்

[2] Dr Caldwell – A Comparative Grammar of the Dravidian Languages P 50

பயன்படுத்துவதில்லை. ஆனால், 'செய்து' எனும் வாய்பாட்டில் அமைந்த வினையெச்சங்கள் (Verbal participles) தொடர்ந்து வந்து அப்பொருளைத் தரும். (எ. டு) 'அவன் வந்து சென்றான்'. இனி, திராவிட மொழிகளில் வினையெச்சங்கள் அடுக்கி வருதல் தனிப்பட்ட வழக்காகக் காணப்பெறுகிறது. இந்நிலை சித்தியக் கூறோடு தொடர்புடையதாயிருந்து திராவிட மொழியின் சீர்மையை விளக்குகின்றது. (Continuative participles for conjunctions.)

(11) இந்தோ-ஐரோப்பிய மொழிகளில் இணைப்பு இடப் பெயர் (Relative pronoun) காணப்படுகிறது. திராவிட மொழிகளில் அத்தகைய பிரிவு அமையாததோடன்றி இணைப்பு இடப் பெயரின் இடத்தில் பெயரெச்சமும் (Relative participle), வினையாலணையும் பெயரும் (Participial noun) உள்ளன. 'A man who came' என்ற ஆங்கிலச் சொற்றொடரை நம் மொழியில் வழங்குமிடத்து 'வந்த மனிதன்' என்று பெயரெச்சமாகவோ; 'வந்தவன்' என்று வினையாலணையும் பெயராகவோ நாம் வழங்குகின்றோம். இவ்வமைப்பில் காணப்பெறும் பெயரெச்சம் திராவிட மொழிகளுக்கேயுரிய தனித்த சிறப்பிணைப்பெற்று விளங்குகிறது. இவ்வாறு பொருட் சிறப்புக் குன்றாமல் சொல்லும் பொருளும் இயைந்து நிற்கும் இயல்பு நம் மொழியின் மாண்பாகும்.

(12) திராவிட வினை வடிவங்கள் (Verbal forms) பொருளமைப்புக்கு ஏற்றவாறு உடன்பாடு (Affirmative), எதிர்மறை (Negative) என்னும் இருநிலைகளைக் கொண்டு இயங்கும். இவ்விரு பாகுபாடுகள் இம்மொழியில் இருத்தல் திராவிட மொழிகட்கும் வடமொழிக்கும் இடையேயுள்ள தலையாய வேற்றுமையை உணர்த்தும். திராவிட மொழிகளின் எதிர்மறை வடிவங்கள் (Negative forms) இருநிலைகளைக் கொண்டு அப்பொருளையுணர்த்தும். தனிச் சொற்களைச் சேர்த்து உணர்த்துவது மட்டுமன்றி எதிர்மறைப் பொருளை உணர்த்தும் இடைநிலையைச் சொற்களின் இடையே இணைத்தும் பொருளைத் தரும். 'ஆ' என்ற எதிர்மறை இடைநிலை (Negative particle), வினையடிக்கும் (Verbal root), பால் காட்டும் விகுதிக்கும் (Pronominal suffix) இடையே நின்று 'வாரான்' (வா + ஆ + ஆன் ர - எழுத்துப்பேறு) என்பதைப் போன்ற வடிவங்களைப் பெறும். அடுத்து, 'இல்' என்ற சொல்லடியாகப் பிறந்த 'இல்லை' என்ற எதிர்மறைக் குறிப்பு வினைமுற்று உடன்பாட்டு வினையைச் சார்ந்து நின்று 'வருகின்றானில்லை' என்றோ, 'செய' எனும் வாய்பாட்டு வினையெச்சத்தோடு தொடர்ந்து நின்று

'விளங்கவில்லை' என்றோ எதிர்மறைப் பொருளை உணர்த்தும் இவ்வாறு வருகின்ற நிலைகள் திராவிட மொழிகளின் தனிச் சிறப்பாக அமையும்.

(13) மேலாக, ஒரு மொழியின் இலக்கண அமைப்பில் காணப்பெறும் சொற்றொடரமைதி (Syntax) அம் மொழிக் குடும்பத்தைப் பிற குடும்பங்களினின்றும் தனித்துக் காட்டும். திராவிட மொழிகளில் தழுவு தொடர்கள் தழுவப்படுந்தொடர்களுக்குப் பின்னதாகவே வருகின்றன. ஆனால், இந்தோ-ஐரோப்பிய மொழியினங்களில் அவை பொதுவாக முன் வருகின்றன.

(i) 'அழகு நிலா' என்ற சொல்லில் 'அழகு' எனும் பெயரடை தழுவப்படுந் தொடராக, 'நிலா' எனனும் பெயர் வடிவம் தழுவு தொடராக அமையும் (Adjective + Noun).

(ii) 'நனி நன்று' எனனும் உரிச் சொற்றொடரில் 'நனி' எனும் வினையடை (adverb) 'நன்று' எனும் குறிப்பு வினை முற்றைத் தழுவி நிற்கும் (Adverb + Verb)

(iii) 'பயின்ற நூல்' எனும் இறந்தகாலப் பெயரெச்சத் தொடரில் 'நூல்' என்னும் பெயர் தழுவு தொடராக அமைந்துள்ளது (Relative participle + Noun).

(iv) 'காணவில்லை' என்னும் 'செய' வெனனும் வாய்பாட்டு வினையெச்சத் தொடரில் 'இல்லை' என்ற குறிப்பு வினை முற்று தழுவு தொடராக அமைகிறது (Verbal Participle + Negative finite verb).

(v) 'எனது உயிர்' எனனும் ஆறும் வேற்றுமை விரித் தொடரில் உருபேற்ற வடிவமாகிய 'எனது' என்பது தழுவப்படுந் தொடராகவிருக்க 'உயிர்' என்பது தழுவு தொடராக விளங்குகிறது. இதுவே 'எனக்கு மகள்' என வருமொழி உயர்திணையாயின் 'அது' வென்னும் உருபுக்கு மாறாகக் 'கு' வவுருபு வந்து பொருந்தும். 'மனக்கு நோய்' எனும் தொடரில் 'கு' என்ற வேற்றுமையுருபு சொல்லுக்கு முன்னடையாக இல்லாமல் பின்னடையாகவே நின்று இரு சொற்களில் இணைந்த உறவைச் சிறப்புறக் காட்டும். இப்பின்னடைகளே திராவிட மொழியின் சிறப்பை நன்கு உணர்த்தவல்லன.

(vi) 'உயிர் கொடாது அங்குப் போகேன்' எனும் சொற்றொடரில் 'நான்' எனும் தன்மைப் பெயர் 'தோன்றா எழுவாயாக'

அமைந்திருக்கச் சொற்கள் பொருளமைதியோடு பொருந்தி நின்று இறுதியில் வினைமுற்றை ஏற்று முடியும்.

இவ்வாறு எழுவாய், பயனிலை (Subject–Predicate) அமைகின்ற அமைப்பு திராவிட மொழியின் சொற்றொடரமைதிக்குத் தக்க சான்றும் செய்யுளில் மட்டும் உணர்ச்சியின் வெளியீடாகச் சொற்கள் வருகின்ற பொழுதும், செயலுறுதியைத் திறம்படக் காட்டும்பொழுதும், வினை முற்றுக்கள் சொல் முதலில் வரும் (எ-டு) 'கண்டேன் கற்பினுக்கணியைக் கண்களால்' –கம்பர் ஈற்றில் வருகின்ற வினைமுற்றே தழுவு தொடராக அமைதல் திராவிட மொழியின் தனி மாண்பாம். இங்கிலையில் காணப்பெறும் சொற்றொடர் சீர்மைகள் வடமொழியில் காணப்படுவதில்லை.

**Dr Caldwell** தனிப்பட்ட கூறுகளை அடிப்படையாகக் கொண்டு சொல்லமைப்பு, சொற்றொடரமைதி முதலான முறைகளை வகையுறக் காட்டித் திராவிடப் பெருமொழிகள் வடமொழியினின்றும் இலக்கண அடிப்படையில் வேறுபட்டுச் சிறந்து அழகுற விளங்குகின்றன எனக் கூறுதல் மறுக்க வொண்ணு மொழியியல் உண்மையன்றோ?



# 23. 'திராவிட மொழிகளும் சித்திய இனக் கூறுகளும்'.

# The Dravidian Languages and the Scythian Elements.

உலகப் பெருமொழிகளைத் தனிமொழி (Isolative) என்றும், ஒட்டுமொழி (Agglutinating) என்றும், உட்பிணைப்பு மொழி (Inflectional) என்றும் மூவகையாகப் பாகுபடுத்தி அவற்றுள் திராவிட மொழிகளை ஒட்டுமொழி வகையில் இணைப்பார் Dr Caldwell திராவிட மொழிகளின் அகச் சான்றுகளைக் கொண்டு வடமொழியினின்றும் வேறுபடுத்திக் காட்டித் 'தனிக் குடும்பம்' என்பதனை நிலைநாட்டினார். அறிவுத் துறையில் அதன் வளர்ச்சிக்கு ஏற்ப, உண்மைகள் பெருகி வருவதால் அவர் மொழித் தொகுதியுள் சித்திய இனம் (Scythian group) என்ற ஒன்றைப் பின்பற்றி அதனுள் காணப்பெறும் சில இலக்கண முடிவுகளைத் திராவிட மொழியின் இலக்கணக் கூறுகளோடு ஒன்றுபடுத்துகிறார். பேராசிரியர் Rask (of Copenhagen) என்பார் மொழியியல் துறையில் 'சித்திய இனம்' என்ற ஒன்றை முதற்கண் அறிமுகப்படுத்திய அறிஞர் ஆவார். Dr Caldwell அவருடைய கொள்கைகளுக்கு இடம் கொடுத்துத் தம்முடைய ஒப்பியன் மொழி நூலில் சில உண்மைகளை எடுத்துக் காட்டுகின்றார்

திராவிடமொழிகள் சித்திய மொழியினத்தோடு சேர்தற்கு உரியனவேயன்றி, இந்தோ-ஐரோப்பிய மொழிகளோடோ, இந்தோ-ஆரிய மொழிகளோடோ சேர்தற்கு உரியன ஆகா என்பது பேராசிரியர் Rask என்பாரின் கோட்பாடாம். "I described the conclusion I arrived at as similar to Rask's, not the same, because I did not think it safe to place the Dravidian idioms unconditionally in the Scythian group, but preferred considering them more closely allied to the Scythian than to the Indo-European"[1] என்று Dr Caldwell தம் கொள்கையை நிலை நாட்டுவார் எனினும், திராவிட மொழிகள் சித்திய மொழியினத்தோடு தொடர்புடையனவேயன்றிச் சித்திய மொழியினத்திலிருந்து பெறப்பட்டவையல்ல என்பதனையே நாம்

---

[1] Dr Caldwell — A Comparative Grammar of the Dravidian Language. P 61

கருத்தில் கொள்ளல் வேண்டும். சித்திய மொழியினம் என்பதில் பின்னிஷ் மொழியும் (Finish), துருக்கிய மொழியும் (Turkish), மங்கோலிய மொழியும் (Mongolian), துங்கீசிய மொழியும் (Tunguisan) அடங்கும் ஒவ்வொரு மொழியும் சொற்களை உருவாக்கும்பொழுது முன் சொல்லப்பட்ட மூவகைப் பாகுபாடுகளுள் ஒன்றையே மிகுதியாகக் கொண்டு, அதுவே தன் சிறப்பியல்பாகப் பெற்று விளங்குவதால் அதனைக் கொண்டு மொழிகளை ஆராய்வர். 'ஒட்டுநிலைமொழி' என்ற அமைப்பில் (Agglutinative language) சித்திய இனமும் சேர்ந்திருத்தலின் அதனை அடியொற்றி எழுந்த ஆய்வே நமக்குத் தூண்டுதல் துணை செய்யும் பேராசிரியர் Rask அவர்கள், திராவிட மொழிகள் சித்தியச் சார்புடையவை எனக் கூறியவர்களுள் முதல்வர் ஆயினும், அதனைத் தெளிவுபடுத்தி விளக்கவல்ல யாதொரு முயற்சியையும் அவர் மேற்கொள்ளவில்லை. Dr Caldwell தம் பரந்துபட்ட அறிவால் இருமொழி இனங்களையும் நன்கு ஒப்பு நோக்கி இலக்கண அமைப்புக்களின் அடிப்படையில் இவற்றிடையே காணப்படும் ஒற்றுமைக் கூறுகளை அழகுறத் தொகுத்துள்ளார். திராவிட மொழிகள் வடமொழியினின்றும் வேறுபட்டவை என்பதற்கு அவர் காட்டிய காரணங்களையே, அவை சித்திய மொழி இனங்களோடு ஒன்றுபட்டவை என்பதற்குக் காட்டல் தகும் இவ்வாறு தம் ஆய்வில் இருமொழிகளுக்குமிடையே நேரிடை உறவைக் கற்பிக்கின்ற Dr Caldwell மற்றவர்களைப் போல அன்றி, வியத்தகு முடிவிற்கு வாராமல் தம் மொழியறிவு காரணமாகச் "சித்திய மொழியே திராவிட மொழிகளின் பிறப்பிடம்" எனக் கூற முன் வரவில்லை

Dr Caldwell காட்டும் காரணங்கள் மொழி நிலையில் நமக்குச் சில உண்மைகளை உணர்த்தும். சித்திய இனத்தைச் சார்ந்த அனைத்து மொழிகளும் ஒரே இனம் என்பதையும், அவற்றுள் ஒரு சில வேறுபாடுகள் இருப்பினும் அவைகளைக் கொண்டு ஒரு மொழிக் குடும்பத்தினை அதனோடு ஒப்புமையுடைய பிறமொழிக் குடும்பத்தினின்றும் அறவே விலக்க வேண்டியதில்லை என்பதையும் நாம் உணரலாம் திராவிட மொழிகளின் அமைப்புக்களை விளக்கச் சித்திய மொழியினத்தை ஒற்றுமைப்படுத்தி ஆராயும் அறிவு எவ்வளவோ பயன்படுகிறது என்ற ஒரு செய்தியே அவற்றுள் சித்தியத் தொடர்புள்ளது என்பதற்கு ஓர் அறிகுறியாம் (The Scythian theory adds colour to the greatness of the Dravidian family). Dr Caldwell தம்முடைய ஆய்வில் இந்த ஒரு நிலையை அடிப்படையாகக் கொண்டு, திராவிடத்தின் பெருமையைச் சிறப்பாகக் காக்கின்றார் எனத்துணிய

ஸாம. பிறமொழி அறிஞாகள தமது ஒப்புமை ஆய்வில குறை காணுவண்ணம, திராவிடததைத தனிககுடும்பமாகவே பாவிதது அதன அடிப்படைக கூறுகளும, சித்திய இனக கூறுகளும ஒன்றுபட்டவை என்ற ஓா அழகுடைய மொழிநீாமையை மட்டும இவண உணாத்துகின்றுா உலகில வழங்கும பலவேறு மொழிகளிலும இலககண நீர்மைகள காலததிறகேற்ற வணணம மாறுவதும, அதனுல அவை பெருமாறறம காண்பதும மொழியியலபு (The natural condition of the language is diversity and change) எனபதனை A H Sayce எனபாா வறபுறுததுவாா மொழிநீாமைகள காலச சூழலுகக இரையாகி மாறி வழங்கப பெறறுலும, மொழி ஆயவு காணுங்கால தொன்மை வழககையே நாம மேறகொளளல வேணடும இனி, இன்றைய சூழநிலையில் சித்திய மொழிககூறுகள் உயிருடன வாழவிலலை சித்திய மொழியினங்கள ஒன்றுக வழங்கிறுலும் இனறு அவை மாறி வழங்கி வருகினறன. அதனுல நாம பழமை வழககையும நனகு எணணிப பாாததுப புறககணிககாமல செயலபடுதல் வேணடும ஓரின மொழிகள (cognates) எனற ஓரமைப்பு நமககுப் பேரளவு துணை செயயும (Cognates are the best sources for the comparative study of the languages) அனறியும, அணமைச சாயலுடைய மொழிக கூறுகள (elements which have the nearness to affinity) மிகக தொடர்புடையனவாக விளங்குவதால அவையும் மொழியுலகில புததுணாவு பெறும. மொழியாககம என்ற ~~ஒன்று~~ ஒன்று காலப்போககில மாறுபட்டாலும, திராவிடமொழிக் குடும்பததுள் தமிழ நீங்கிய பிறமொழிகள் இன்று வடமொழிச சாயலால் தமநிலை மாறினுலும, தமிழ மட்டும தன தொன்மைத தனமையை அணைதது வாழதல மொழி ஆயவாளாகளுககு நலல விருநதாக அமைகிறது குறை காணமுடியா நிலையில தம ஆய்வை மேறகொணடு திராவிட மொழிகளின் உயிாத துடிப்பு தமிழிலதான் (The living spirit of the Dravidian group lies only in Tamil) இயங்குகிறது என்பதனை அழுததிக காட்டும வலலமை Dr Caldwell அவாகளையே சாரும. சித்திய இனததின் பழமையை வியநது அதன் இலககணக கூறுகள் தொனமைத திராவிட மொழிக குடும்பததோடு ஒனறியிருததலால இவவிரு பழங்குடும்பங்களின் பெருமையை Dr Caldwell விளககினுலும தம அறிவு விளங்கும வணணம திராவிட மொழியின் பெருமையையே அவர் அடிமனம போறறுகிறது.

Richard என்பார் தம்முடைய "ஆய்வில்" (Researches) திராவிட மொழிகளின் இலககண அமைப்பைச சான்றுகள்

காட்டி வெளியிட்டுள்ளார். கிளை மொழிகளின் ஒப்புமைப் படிப்பு (Careful inter-comparison of dialects) எக்காலத்தும் துணை புரியும். காரணம், இலக்கிய வழக்குள்ள மொழிகளைக் காட்டிலும் கிளைமொழிகளே சிறந்த உண்மையை உணர்த்த வல்லவை என்பதனை யாரும் மறுக்க இயலாது. எண்ணங்களின் பண்பட்ட வளர்ச்சிக்கேற்ப (cultivation of human thoughts) பழமை வடிவை நோக்கி மொழியாக்கத்தை நிலைநாட்டுதலும், ஒரு மொழி தன் தன்மையை இழக்க நேரிடின் அப்பொழுது மக்களின் மன வளர்ச்சி அதனைத் தடுத்து உண்மையை உணர்த்துதலும் இயல்பு என்ற கொள்கை Dr Caldwell அவர்களால் சிறப்பாகப் போற்றப்பெறுகிறது அவர் தம் ஒப்பியன் மொழி நூலில் தமக்குச் சித்திய மொழியறிவு மிகமிகக் குறைவு என்பதனை ஒத்துக் கொள்கின்றார். "The chief object I have in view is to contribute to a better knowledge of the Dravidian languages themselves ..... My knowledge of the Scythian languages is only second hand .. and I trust, therefore, it will be remembered that if I advocate any particular theory on this question of affiliation, I do so with considerable diffidence"[2] என்னும் அவரது கருத்தினை உன்னி உணர்க இக்குறைபாட்டால் நாம் சித்திய இனக் கூறுகளோடு திராவிட மொழிகளை ஒன்றுபடுத்தி ஒப்பீட்டுப் பேசி அதன் முடிவு என்னாகுமோ என அஞ்சி, சித்திய மொழிக் கல்வெட்டு ஒன்றினைத் துணையாகக்கொண்டு சான்றுகள் பல வற்றை ஒப்பிட்டுக் காட்டித் தமக்குப்பின் வருவோர் அவர் கருத்துக்களை ஓரளவேனும் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்ற நிலையில் பின்வரும் காரணங்களைக் கொண்டு தெளிவுபடுத்து கின்றார்.

இரானியப் பேரரசின் மேற்கு மாகாணத்தில் பெஹிஸ்தன் என்ற இடத்தில் கண்டெடுக்கப்பட்ட கல்வெட்டுக்கள் (B C. 816 —Behistun Tablets) பழம் பாரசீக மொழியிலும், பாபிலோனிய மொழியிலும், சித்திய மொழியிலும் எழுதப்பட்டிருக்கின்றன அதில் வரும் சித்திய மொழிப் பகுதியின் மொழி பெயர்ப்பு (The translation of the Scythian script) திராவிட மொழிகளுக்கும், சித்திய மொழிகளுக்கும் இடையில் நிலவும் உறவு முறையைக் குறித்த உண்மைகளை விளக்கி ஒரு புத்தொளியாய் மிளிர்

[2] Dr. Caldwell— A Comparative Grammar of the Dravidian Languages. P. 62-63.

கினறது இததகைய அரிய வாயபபு கி மு. 5-ஆம் நூற்ருணடி லேயே நோநதமை பெரு வியபபே. எனினும, அககலவெடடு மொழி பொதுவாகச சிததிய இனததைச சோநதது ஆயினும, திராவிடமொழிகளோடு பெருமளவில ஒறறுமை கொணடுளள சிததிய இனமாகிய உககிரேனிய, பினனிஷ மொழிகளைச சிறபபாக ஒததுளளன எனபது குறிப்பிடததகக அரிய உணமையாம அககலவெடடு மொழிகளும, திராவிட மொழிகளும இடையேயுளள ஒறறுமைக கூறுகளாவன :-

(1) சித்திய மொழிகளிலும, திராவிடமொழிகளிலும 'டட, ட, ண (tta, t, n) என்னும நா அடியணண ஒலிகள அலலது பின அணண ஒலிகள் (cerebrals) உளளன ஆரிய மொழிகளுள வடமொழியில மடடும இவையிருபபினும், திராவிட மொழிகளைப பினபறறி வடமொழியில ஏறபட்ட ஒலிகள எனபது Dr Caldwell கருதது (Sanskrit borrowed these sounds from the indigenous Dravidian languages) Mr. Norris எனபாரும Dr Caldwell கருததினை வலியுறுததிப பேசுவா

(2) திராவிட மொழிகளில் வலலெழுததுககள மொழி முதலிலும (initial), இரட்டிததவிடததும (duplication), வலலொலி (Surds) உடையனவாக விளஙகுகினறன ஆனல, மொழி இடையே உயிாகளின் நடுவில வரும பொழுது (intervocal -'aham') மென்மையொலி உடையனவாக (Sonants) ஒலிக கின்றன இநத வல்லொலி மெலலொலி மாறறம (Convertibility of surds and sonants) சித்திய மொழிகளிலும உள்ளது.

(3) இவ்வட்டவணை மொழியின் ஆரும வேறறுமை யுருபுகள (Genitive case-signs) ன (na), னின (nina), இன்ன (inna) எனபனவாம. திராவிட மொழிகளின் ஆறனுருபுகள னீ (ni) (Telugu), ன (na)(Gond), ன் (in) (Brahui), அ (Tamil) எனபனவாம இவறறில காணபபடும ஒருமிதத வடிவஙகள் (analogous forms) நம மொழிப படிபபிறகுப பெருநதுணை புரியும.

(4) ikki, ikka என்பன அடடவணையில 4-ஆம் வேற றுமை உருபுகளாகவுளளன (Dative Case-signs). திராவிட மொழிகளில ku, ki, ge எனபன நான்கன உருபுகளாம.

(5) அட்டவணைகளில இரணடன் உருபுகள் உன் (un) இன (in), ன் (n) எனபன திராவிட மொழிகளில னு (nu), னி (ni) (Telugu), அம் (am), அனனு (annu) (Kannada) என்பன காணபபடுகின்றன.

(6) 'ஒன்று' (one) என்னும பொருளில் அட்டவணையில வருமசொல் 'கிர' (kir) (Numeral 'one') என்பதாம திராவிட மொழிகளில காணபபெறும ஓர, ஒரு (ōr > oru) என்ற வடிவங்களோடு இதனை ஒபபு நோககினால இரு மொழிகளுகரு இடையே காணபபெறும ஒற்றுமை புலனுகும அட்டவணையில எண்ணுப பெயாகள பெயரடையாகும பொழுது (Numerical adjectives) 'இம' என்ற இடைசசொல (particle) வநதுள்ளது தமிழில 'ஆம' எனனும இடைசசொல காணபபடுவது இவவொற்றுமையை வலியுறுததும.

(எ.டு.) இரணடாம, மூன்றும.

(7) இருவகை மொழிகளும பொதுவாக நீ (nī) என்பதே முன்னிலைப பெயராக உள்ளது. (The pronoun of the second person) 'நின்' என்பதே உருபேறற வடிவம (Oblique form). ஆனால, கல்வெட்டு மொழியில் 'நீ' என்னும ஒருமை வடிவத்திறகேறற பன்மை வடிவம காணபபெறவில்லை

(8) திராவிட மொழிகளின் பெருஞ்சிறபபாகக கருதப பெற்று வருவது பெயரெசச அமைப்பேயாம (Formation of relative participle). இச்சிததியக கல்வெட்டு மொழிகளில் 'பெயரெசசம்' அமைகின்ற இடத்தில் 'இணைபபு இடப் பெயரும்' (Relative pronoun) காணபபெறுகின்றது பெயரெச்ச வடிவம திராவிட நீரமையைக காட்டிலும மாறுபட்டது எனறாலும பொருளும பயனும திராவிட வழககை ஒட்டியே அமைநதுள்ளன. (The position and force of this particle are in perfect harmony with the Dravidian usage)

(9) எதிர்மறை ஏவல விகுதியாக (The negative imperative) அட்டவணையிலுள்ள சொல் 'இன்னி' (inni) என்பதாம். Gond மொழியில் 'மின்னி' (minni) என்பது காணப்படுகிறது.

இவ்வொற்றுமைக கூறுகள் நீங்கலாகப் பிற வேற்றுமைத் திரிபுகள் இருப்பினும், அவ்வொறறுமைகள் இன்றியமையாச சிறப்புடையன. ஆதலின், திராவிட மொழிகளுககும், சித்திய

மொழிகளுக்கும் இடையே நிலவும் உறவு ஒரு சிறிதேயாயினும் அஃது அடிப்படையானது எனக் கொள்ளல் வேண்டும்.

சித்திய இன மொழிகளின் அடிப்படையான தொடக்க வியல் பண்புகள் ஒற்றுமைப் பட்டிருப்பினும் சொற்றொகுதியிலும், வேறு சில குறிப்புகளிலும் வேற்றுமைப் பட்டிருப்பதை மனங் கொளல் வேண்டும். நெடுநாள் பிரிக்கப்பட்ட சித்திய இனமொழிகளிடையே அதே இயல்புடைய இந்தோ-ஐரோப்பிய மொழிகளில் காணப்பெறும் நுணுக்கமான ஒற்றுமைகளை எதிர் பார்க்க முடியாது.

ஒரு தனி மொழிக்கு ஒரு மொழியினத்துடன் மூன்று வகையான உறவு முறைகள் இருத்தல் கூடும். (1) நேரான காலவழிமுறை (The relation of lineal descent) [Proto Dravidian>Tamil]; (2) உடனியங்கும் துணை வழி முறை (The relation of sisterhood) [Tamil>Malayalam]; (3) ஓரினத்துள் சாரும் சார்பு முறை (The wider relationship)- [Dravidian-Scythian] இவற்றுள் மூன்றும் உறவு முறையே திராவிட மொழிகள் சித்திய மொழியினத்துடன் ஒத்துள்ளதாகக் கொள்ளப்படும். சித்திய இனமே திராவிடக் குழுவோடு நெருங்கிய உயர்நிலையான தொடர்புடையது என்பது Dr. Caldwell கருத்தாம் ஒரே நாட்டில் திராவிட இனமும், ஆரிய இனமும் பலநூறு ஆண்டுகளாக அடுத்தடுத்து வாழ்ந்தமையால் திராவிட மொழி ஆரியச் சொற்களைப் பெருமளவு கடன் வாங்கியுள்ளது என்பர். அதே நிலையில் திராவிடத்திலிருந்து ஆரிய மொழியும் கடன் வாங்கத் தயங்கியதில்லை என்பதை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். இனி, திராவிடத்தில் காணப்பெறும் இந்தோ-ஐரோப்பிய இயல்புகள் சிலவற்றைக் காண்போம்

(1) திராவிட மொழியில், கிரேக்க மொழியைப் போல னகரம் (n̲) உடம்படு மெய்யாகப் (Prevention of hiatus) பயன் படுகிறது.

(2) படர்க்கை இடப் பெயர்களிலும், வினைகளிலும் பால் பாகுபாடு இருத்தல் (Existence of gender in III person). சிறப்பாகப் பொதுப்பால் (அல்லது) ஒன்றன்பால் எனவொன்று இருத்தல்

(3) படர்க்கை ஒருமை ஒன்றன்பால் பெயரின் விகுதி (Sign of the neuter gender in singular) 'த்' ஆகவிருத்தல்.

(4) இலத்திணைபபோல் பலவின்பால் விகுதி (Neuter plural) அகரமாயிருததல (சிரிததன >சிரி+க்+த்+அன + அ)

(5) சேய்மைச் சுட்டு அகரமாகவும, அண்மைச சுட்டு இகரமாகவும் இருததல்.

That — அது (Remote demonstrative -a-)
This — இது (Proximate ,, -i-)

(6) பாரசீகமொழி போன்று 'த்' என்ற இடைநிலையைப பயனபடுததி (Past tense-sign) இறநதகாலததை அறிவிததல.

(7) பகுதியின் ஒரு கூறறை இரட்டிதது இறநதகாலம உணாததுதல் (Duplication of the final consonant of the root )

புகு>புககு - புககான (புகு+ஆன >புககான)

(8) வினைபபகுதியின் முதலுயிா நீணடு தொழிற பெயராதல் (Lengthening of the vowel of the verbal root to form verbal nouns)

கெடு > கேடு; கொள > கோள (வினையடியோடு'தல' என்ற தொழிறபெயா விகுதி புணாநது தொழிற்பெயராக வழஙகுவதும் ஒருவகை அனறிக கெடு>கேடு என்பது போல, முதனிலை திரிநத தொழிறபெயராக வருதலும் ஒரு வகை.)

இவவெடுததுககாட்டுகளினின்றும இநதோ-ஐரோப்பிய திராவிடத தொடாபு ஒன்றுளது என்பது புலப்படும. திராவிட மொழிகளைச சித்தியக குடுமபததைச் சேர்நதன வாகச் சிறப்புறக கருதுவதே மொழி அறிஞர்களின் தெளிநத முடிபு.

இககருத்து ஏறறுககொள்ளபபடுமாயின், இந்தோ-ஐரோபபிய மொழிககூறுகளில உளள ஒறறுமை நோககி அமமொழிகளும், சிததியமொழிகளும, திராவிடமொழிகளும் ஒருமைபபாடுடையன எனக கூறவும முறபடுவா திராவிட மொழிச சொற்களில சிறபபாகத தமிழச சொறகளில செமிததிய (Cemetic) ஒற்றுமைகள காணபபடுகின்றமை வியககதத தககதே இவவொருமைபபாடுகள் திராவிட இனததின் தோறறம, வரலாறறுக காலததிறகு முறபட்ட அதன இயல்பு, நிலை போனற அரிய உணமைகளைக காட்டவலல சான்றுகளாம. அவற்றைககொண்டு அவ்விரு இனததாரையும உறவுடையவ ராகக கருதி விடுதல் கூடாது ஆனால, அவை தறசெயலால ஏறபட்டவை எனக கொள்ளுதல வேண்டும். (The Dravidian

and the Cemetic group will not be brought together in closer affinity; but they are accidental) மொழியாராய்வாளர் நடுநிலையில் நின்று ஆய்வுக்கெட்டிய சில உண்மைகளை மட்டுமே குறித்து அறிவுக்குப் பொருந்தாத கற்பனைகளை விடுத்தல் நன்று இருவகை மொழிகட்கிடையே ஒற்றுமை காணப்படின் அஃது இயற்கையாக அமைந்திருத்தல் வேண்டும் மக்கள் வரலாற்றோடு தொடர்புடைய தக்க சான்றுகள் இருப்பின், அவற்றைக்கொண்டு ஒரு மொழி வரலாற்றை மக்கள் வரலாற்றோடு ஒன்றுபடுத்தலாம் "I may add that, to my own mind, the light which is thrown on the structure of the Dravidian languages by the study of the Scythian group has always seemed a stong confirmation of the theory of the existence in them of a Scythian element"[3] எனும் Dr Caldwell அவர்களின் கோட்பாடு திராவிட மொழியின் அறப் பழமைக்குப் புத்தொளி ஊட்டும் அறிவுத்துணையாக ஒளிர்தலைக் காண்க



---

[3] Dr Caldwell - A Comparative Grammar of the Dravidian Languages P 65

# 24. 'ஒலியியல்'.
# Phonetics.

நம செவிபபுலனைச சிலவகை அசைவுகள தாககும்பொழுது உணரபபடுவதே ஒலியாகும. பேசசு மொழி என்பது மககளின குரலில பிறநது செவியால உணரபபடும் ஒரு வகை ஒலியே எனபபடும் ஒலி அலைகள் மககளின் செவிபபுலனைத் தாகக, அவ்வொலிகள் உணரபபடுமாயின் அவையே மொழியென அழைககபபெறும் இவவகை ஒலி பேசுவோர் கேடபோர ஆகிய இரு திறததாருககும இடையே நிகழநது ஒருவருடைய எணணஙகளைப பிறாககு உணாததப பயனபடுகிறது. பேசுவோரும, கேடபோரும அறிநது விளஙகுவதறகு ஏறபப பொதுவான தனமைகளைப பெறறு மொழி வெளிபபடுகின்றது. இவவாறு ஒலியே மொழியாக மாறுகிறது நன்னூலார, "மொழி முதற காரணமாம அணுததிரள ஒலி எழுதது" எனக கூறும கருதது ஈணடு நமககுச செவ்வனே விளககம தருதலை உணரலாம. இவ்வொலியினைப பறறிக கூறுவதே ஒலியியல் (Phonetics) ஆகும. பேசசொலிகளின் பிறபபு, அவை உருவாகின்ற முறை, அவற்றின் பாகுபாடு, புணாச்சி நிலை, அப புணாசசி வழி நிகழும மாறறம ஆகிய இவற்றினை நாம இவ வொலியியலில் அறிதல கூடும. "Phonetics is the science which deals with gymnastics of the organs of speech both in theory and practice"[1] என்று Noel Armfield எனபார் கூறுகிறா. இவவொலியியலில் பேசசொலிகளைப பறறித தெரிநது கொள்வதற்கு முன்னா அவவொலிகள் பிறத்தற்குக் காரணமாகிய கருவிகளின் தன்மை பற்றியும், அவற்றின் அமைபபு முறை பற்றியும் அறிந்து கொள்ள வேணடும. "The study of articulatory phonetics is therefore, based first of all on a detailed enumeration and classification of the organs of the body used in making speech-sounds, the so-called organs of speech."-[2] என்னும Robert. A Hall அவர்களின் கருததினை ஈணடு நோககுக

இன்றைய அறிவியல் உலகில பெருமபான்மையான மககள தஙகள தாயமொழிகளோடு இரணடாவதாகப பிறிதொரு மொழியைப் பயிலவதில ஆாவஙகாட்டி வருவதால் ஒலியியல

[1] G Noel Armfield — Generel Phonetics.

[2] Robert A. Hall. Introductory Linguistics P 37

படிப்பு இன்று உயரிய இடம் பெற்று வருதலை நாம் உணரலாம். மொழியியலும் ஒலியியலும் ஒன்றிற்கொன்று உற வுடைய நிலையில் வளர்ந்து வருகின்றன. இவற்றை விளக்க முற்பட்ட R. K. Bansal என்பவர் "Linguistics is concened with the study of the language system, of which each particular utterance is a concrete manifestation. Phonetics is concened with the study of the aural medium, that is, the production, transmission and reception of the sounds of human speech Phonetic studies have gained importance in recent times because of the large number of people learning to speak second language." [3] எனக் கூறுவர்

நம் தமிழ் இலக்கண நூலார் ஒலிகளின் பிறப்பியல (articulation) பற்றி மிகத் தெளிவாக எடுத்து மொழிந் துள்ளனர் உள்ளிருந்து வெளிவரும் மூச்சே ஒலியாக மாறு கிறது அவ்வாறு உந்தியினின்றும் எழும் மூச்சானது நெஞ்சு, கழுத்து, தலை ஆகிய மூன்று இடங்களிலும் நிறைந்து, பல், இதழ், நா, மூக்கு, அண்ணம் ஆகிய இக்கருவிகளின் முயற்சி யால் பேச்சொலியாகப் பிறக்கின்றது. இவ்வாறு இவ்வுறுப்புக் கள் பலவேறு நிலைகளில் நின்றும் இயங்கியும் பலவகை ஒலிகளை எழுப்புகின்றன

"உந்தி முதலா முந்துவளி தோன்றித்
தலையினும் மிடற்றினும் நெஞ்சினும் நிலைஇப்
பல்லும் இதழும் நாவும் மூக்கும்
அண்ணமும் உளப்பட எண்முறை நிலையான்
உறுப்புற் றமைய நெறிப்பட நாடி
எல்லா எழுத்தும் சொல்லுங் காலைப்
பிறப்பின் ஆக்கம் வேறுவே றியல"

(தொல். எழுத்து 83)

என்று தொல்காப்பியர் பிறப்பியல் பற்றி மிகத் தெளிவாகக் கூறியுள்ளார் மக்கள் தங்களிடம் அமைந்துள்ள பயிற்சிக் கேற்ப ஒவ்வொரு மொழியின் ஒலிகளையும் ஒலிக்கின்றனர் ஒரு மொழியைப் பேசும் மக்கள் பிற மொழியைப் பேச இடர்ப்படு வதற்குக் காரணம் பயிற்சி இன்மையே. குழந்தைப் பருவத்தில் நாம் பழக்கத்தைத மேற்கொண்டால், எந்த மொழிகளின் ஒலிகளும் நமக்குப் பழக்கமாகி விடும். ஒலியியலை ஆராய்வோர் எல்லா

[3] R. K. Bansal - An Outline of General Phonetics. P 2

# 'Organs of Speech'.




1. இதழ்கள் (Lips)
2. பற்கள் (Teeth)
3. அண்பல் (Alveolar ridge)
4. அண்ணம் (Hard Palate)
5. பின்னண்ணம் (Soft Palate or Velum)
6. உள்நா (Uvula)
7. நாவிளிம்பு (Blade of the tongue)
8. அடிநா (Front of the tongue)
9. கடைநா (Back of the tongue or dorsum)
10. குரல்வளை மேற்பகுதி (Pharynx)
11. மேல்நா (Epiglottis)
12. குரல்வளை நாக்கள் (Vocal Chords)
13. நுனிநா (Tip of the tongue)

மொழிகட்கும பொதுவாக அமைநதுள்ள அடிப்படை ஒலி முறையை ஆராய்நதும, தனிததனியே ஒரு சில மொழிகளின சிறபபியலபுகளை ஆராயநதும தஙகள் கருத்துககளை வெளிப படுததுதல் இனறியமையாததாம குரல ஒலியோடு அவ்வொலியின பிறபபு நிகழநதிருந்தால் மககள பறவைகளினின்றும வேறுபடடிருகக முடியாது. இனி, மககள் தஙகள முயறசியால பலவகை ஒலிகளையும எழுபபலாம. ஆனால அவவாறு எழுபபுவதால், இவாகள தஙகள மனவுணாசசிகளைக காடடலாமே ஒழிய, எணணஙகளை வெளிபபடுததுதல் இயலாத ஒனறும நாம இயறகையின படைபபுச சிறபபால நம உளளககிடககையைப பிறருககு வெளிபபடுததமுடிகின்றது

ஒலி உறுப்புக்கள்:- (Organs of Speech)

நம உடலின பாகஙகளில மிகச சிலவே ஒலிகளை எழுப்ப வலல ஆறறல பெறறவை பேசும பேசசுககளின் போது இதழ, நாககு, தாடை ஆகியவையே அசைவைப பெறுகினறன. இனறியமையாப பிற அசைவுகள உளளே நிகழகின்றன வாய இடம் (oral cavity), மூககு இடம (nasal cavity), தொண்டை (pharynx), நுரையீரல (lungs) ஆகியவை இப்பகுதியில இடம பெறுவதை நாம அறியலாம் இதனைப பேசசொலி நிகழுமிடம (Speech tract) எனலாம நம உடறபகுதியானது இவ்வாறு ஒலிகளை எழுபபவலல அளவுககு அமைநதுளள நிலையினை இணைததுளள படததினால உணாததலாம.

ஒலிககும உறுபபுககளின் நிலைகளை நாம் விளககுஙகால் அவறறை இரு பிரிவுகளாக அடககுவா ஒலிபபுகள் (articulators) என்றும், பிறககுமிடஙகள (points of articulation) என்றும் அவை கூறபபெறும முன்னவை அசையும் தன்மை பெற்றவை; பின்னவை நிலையானவை. கீழிதழ், நாநுனி, நாவிளிமபு, முன் நாக்கு, பின் நாககு என்பவை அசைநது கொடுககும தன்மை பெற்று ஒலிகளை எழுபபும. மேலிதழ, மேற்பல, அண்ணம, பின்னணணம் என்பவை நிலைத்து அசைவினறி இருநது, ஆங்குப பிற உறுபபுககள் இணையும் பொழுதோ, தொடும பொழுதோ ஒலிகள எழத துணை செயயும் இவ்வாறு ஒலிககும உறுபபுககள செம்மையாக அமைநது நம எண்ணஙகள மண்ணிடையே உலவி வாழத துணை புரிதலைக காணகின்றோம

நம் கழுத்தில் குரல் வளை என்ற ஒன்று அமைந்திருககின்றது. அதனுளளே குறுககாக இரு மெல்லிய நாண்கள் உளளன.

# 25. 'ஒலியனும் மாற்றொலியனும்'.
## Phoneme and Allophone.

ஒவ்வொரு மொழியின் உயிர் வரிசையிலும், மெய் வரிசையிலும் பல்வேறு ஒலிகள் உள்ளன. அவ்வொலிகள் தாம் உள்ள இடங்கட்கு ஏற்ப அமைந்து ஒலித்தன்மையைப் பெற்று வருதல் இயற்கையே. (The phonetic quality of a sound segment varies according to the context in which it occurs.) பல்வேறு ஒலிகள் ஒரு மொழியில் இருப்பினும், அடிப்படையானவையே எழுத்தொலியாகக் கொள்ளப்பெறும். இவ்வடிப்படை ஒலிகளை 'எழுத்தொலிகள்' அல்லது 'ஒலியன்கள்' (Phonemes) என்று அழைப்பர். ஒலி + அன் > ஒலியன் (அன் - சொல்லாக்க விகுதி — Formative suffix). பல்வேறு வடிவங்களைக் கொண்ட ஒலிகட்கு இடையில் மாறாத தன்மை பெற்றும், அடிப்படையால் அமைப்படைக் கொண்டும் நிலவுகின்ற ஒலிகளே ஒலியன்களாம். பொருளின் விளக்கவுணர்ச்சிக்கு அடிப்படையாக அமைந்து இரு ஒலிகள் உறழ்ந்து வருமாயின் அவற்றை 'ஒலியன்கள்' என்று உரைப்பர். "A phoneme is a class of phonetically similar sounds, contrasting and mutually exclusive with all similar classes in the language"[1] என்று Bernard Bloch, George L Trager ஆசிரியோர் கூறுவர்.

ஒரு மொழியில் எல்லா ஒலிகளும் இன்றியமையாத செயல் ஒன்றினை மேற்கொண்டு வருதலை நாம் அறிவோம்.

| | | | |
|---|---|---|---|
| (i) | 'அடு' | (ii) | 'வாள்' |
| | 'ஆடு' | | 'வாழ்' |

இவற்றை முறையாகக் காணுங்கால் முதலிரு சொற்களில் உள்ள அகர உயிரும், ஆகார உயிரும் மாற்றக் காணப்படுவதால், அவற்றை ஒலிக்கும் பொழுது அடிப்படையான ஒலிகளின் மாற்றத்தால் பொருளை வேறுபடுத்தலை நாம் உணர்கின்றோம். அதுபோலவே இரண்டாம் சொற்களின் நிலையில் ளகர ழகர ஒற்றுக்கள் மாறுபடுவதால் சொற்பொருளும் மாறுபடுதலைக் காண்க. இவ்வாறு இரு பேச்சொலிகளை வேறுபடுத்தும் தன்மையே ஒலியின் செயலாக விளங்குதலை மொழிநூலார்

[1] Bernard Bloch & George L Trager, 'Outline of Linguistic Analysis' P. 40.

ஒலியியலில் உணர்த்துவர். "Throughout the study of phonology, it must be remembered that sounds and differences between them have one and only one function in language; to keep utterances apart"[2] என்று Hockett கூறுவர். அவர் மேலும் ஒலியன்களைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது "The phonemes of a language are the elements which stand in contrast with each other in the phonological system of a language"[3] என்பர். பேச்சு மொழியில் வழங்கும் தெளிவான ஒலியின் சிறு அளவாய் அமைந்து, பொருளை மாற்றி உணரத்தக்க அளவுக்குத் தனியொலியாக வழங்கப் படுவதே ஒலியன் (Phoneme) என்று பிற மொழியியல் அறிஞர்களும் குறிப்பிடுவர். Gleason என்பார் "We may define a phoneme as a minimum feature of the expression system of a spoken language by which one thing that may be said is distinguished from any other thing which might have been said"[4] என்று மொழிவர். Bloomfield என்பார், "A minimum unit of distinctive sound-feature is a phoneme"[5] என்று கூறுவர். இவ்வாறு ஒலியன்கள் ஒரு மொழியின் அடிப்படையான ஒலித்தன்மையை ஏற்றுப் பொருள் மாறுபாட்டிற்குத் துணை நிற்றலை நாம் எல்லா மொழிகளிலும் காணலாம்.

ஆங்கிலத்தில் உள்ள சில சொற்களை நோக்குக.

(i) /cat/ (ii) /pin/ (iii) /put/
/mat/ /sin/ /but/

நம் தமிழ் மொழியிலுள்ள கீழ்வரும் சொற்களை உற்று நோக்கினால் ஓர் உண்மை புலனாகும்.

(i) /அடு/ (ii) /இடு/ (iii) /உடு/ (iv) /எடு/ (v) /ஒடு/
/ஆடு/ /ஈடு/ /ஊடு/ /ஏடு/ /ஓடு/

இவற்றை இரண்டிரண்டாகப் பகுத்து உச்சரிக்கும் பொழுது, அடிப்படையான உயிர்கள் பத்தும் தனித்த ஒலியன்களாக

---

[2] Charles F Hockett –A Course in Modern Linguistics. P 15

[3] ibid P 26

[4] H A Gleason –An Introduction to Descriptive Linguistics P. 9.

[5] Leonard Bloomfield –Language P 79.

(distinct phonemes) விளங்குதலைக் காணலாம். குறைந்த அசைகளை உடைய தனித்த சொற்களைக் கொண்டு அவை பெரும்பான்மையும் ஒத்திருந்து ஓர் ஒலியால் வேறுபடுதலை நாம் ஈண்டுக் காண்கின்றோம் இவற்றை உறழ்வு இணைகள் (Minimal contrasting pairs) என்று கூறலாம். மேலைச் சான்றுகளைக் கொண்டு ஆராயின், தமிழ் மொழியில் உயிர்க்குறிலும், உயிர் நெடிலும் தனித்த ஒலியன்களாக விளங்குதலைக் காணலாம் இவை போன்றே மெய்யொலிகளும் தனித்த ஒலியன்களாக விளங்கும்.

| | | |
|---|---|---|
| (i) | /கணை/ | /க/ |
| | /பணை/ | /ப/ |
| (ii) | /கழல்/ | /க/ |
| | /தழல்/ | /த/ |
| (iii) | /தாங்கு/ | /த/ |
| | /பாங்கு/ | /ப/ |
| (iv) | /தண்மை/ | /ண/ |
| | /தன்மை/ | /ன/ |
| (v) | /பலம்/ | /ப/ |
| | /வலம்/ | /வ/ |
| (vi) | /குளம்/ | /ள/ |
| | /குலம்/ | /ல/ |
| (vii) | /செல்வம்/ | /ம/ |
| | /செல்வன்/ | /ன/ |
| (viii) | /உரு/ | /ர/ |
| | /உறு/ | /ற/ |
| (iv) | /காற்று/ | /ற/ |
| | /கான்று/ | /ன/ |
| (x) | /தாழ்/ | /ழ/ |
| | /தாள்/ | /ள/ |

இவ்வாறு 'ஒலியன்' (Phoneme) என்ற அமைப்பு செவ்வனே அமைந்துள்ளமையை நன்கு உணர்ந்து ஒலியியல் மாட்சியை நாம் பேணி வருகின்றோம் உயிராகவோ, மெய்யாகவோ அல்லாமல், தனி அசையிலும், அசைத் தொடர்களிலும் இவை வரும் என்பார் அறிஞர் "Phonemes are either segmental what is traditionally called vowels and consonants — or suprasegmental or prosodemes, whose function is to distinguish sequences of phonemes (syllables, syllabic groups, periods, etc.,)"[6] என்று Bertil Malmberg கூறுவர்

[6] Bertil Malmberg – Manual of Phonetics P 6.

அ[illegible] (Allophone) என்பது பற்றி [illegible] ஆங்கில மொழியில் 'put', 'but' என்று கூறும் போது p, b இரண்டும் தனித்த ஒலியன்களாகவே அமைந்துள்ளன. ஆனால் தமிழில் அவ்வாறு இல்லை. இதனை [illegible] அவற்றால் உண்டாகும் பொருள் மாறுபாடு (contrast) [illegible] [7] [illegible] [illegible] மொழி முதலிலும், இடையிலும், [illegible] இரட்டிக்கும் இடத்திலும், [illegible] மெல்லினத்தைச் சார்ந்து [illegible] வரும் [illegible] வெவ்வேறு [illegible] பெறுகின்றன வரும்.

| | | | |
|---|---|---|---|
| [illegible] கண் | kan | — | [k] |
| பக்கம் | pakkam | — | [kk] |
| அகம் | aham | — | [h] |
| சங்கம் | cangam | — | [g] |

[illegible] ஒலிகள் வழங்கும் பொழுது இடம் மாறவேண்டியதுபோல [illegible] மாறுகின்றன [illegible] [illegible] காண்கின்றோம். இவை இவ்வாறு ஒலி வடிவில் மட்டும் வெவ்வேறான ஒலிகளாய்ப் பெற்று வருவதால், இவற்றை /k/ அல்லது /க/ என்பதன் மாற்றொலிகளாகக் கொள்கின்றோம்.

/k/ > [g] [k] [h]

இவ்வாறே /p/, /b/, /t/, /d/, /c/, /j/ என்பனவும் வரு நிலைக்குத் தக்க ஏற்றவாறு கண்டுகொள்க. தமிழின் இரண்டாவது ஒற்றாகிய 'ஙகரம்' ஒலியன்றாகாது என்றும், அது ககரத்தின் மாற்றொலியே என்றும் கூறுவர். பல மாற்றொலிகளைக் கொண்டுள்ள ஒலியனின் இயல்பு இவ்வாறு உள்ளது என்று அறிஞர் கருதுவர்.

ஒரு மொழியில் மாற்றொலியன்கள் இடத்திற்கு ஏற்றவாறு ஒலித்தல் தன்மை பெற்று மாறி ஒலித்தலை நாம் காணலாம். ஒலி ஒப்புமையும் (phonetic similarity), இடத்திற்கு ஏற்றவாறு ஒலி மாறும் பாங்கில் அமையும் தன்மையும் (complementary distribution) பொருந்தி இருத்தலையே ஓர் ஒலியனின் மாற

---

[7] Dr. ரா சீனிவாசன் மொழியியல். பக 48.

# 26. 'திராவிட உயிரமைப்பு முறை'.
## The Dravidian Vowel System.

உலக மொழிகளில் காணபபெறும ஒலியியல மரபு (Phono-ogy) பொதுமை நீரமை படைததாகவே அமைநதிருததலைக காணலாம ஒலிகளை எழுபபவலல பிறபபு உறுபபுககள தம நிலையில தனிபபட்ட மெயயெழுததுககளைத தொடாநதோ, தனிபபட்ட உயிரெழுததுகசளைத தொடாநதோ ஒலிததல இயலாது ஆஙகில மொழியிலும a, e, i, o, u என்ற ஐநது குறிலகள அமைநது சொல நிலையை அழகுபடுததுகின்றன. 'School' 'Strength' என்ற சொறகளை உச்சரிககுஙகால மூன்று அலலது மூன்றுககு மேறபட்ட மெயயெழுததுககள தொடாநது வநகின்றபொழுது மொழியிடையில தோன்றும உயிரெழுததுக கள அமைநது எளிமையைப புகுததுகின்றன [CCCVVC or CC-CVCCC]. அன்றியும் மொழிமுதலில மெயமமயககஙகளை (Consonant clusters) உசசரிததல எளிமையாக அமைவதில்லை. 'know' என்ற ஆஙகிலசசொலலை உசசரிககுஙகால மொழிமுதல மெய யும், ஈறறு மெயயும வெளிபபடையாக உசசரிககபபடாமை கணடு நோககுதறகுரியது ஆதலின தொடாசசியாகப பேசும பொழுது ஒலிககும உறுபபுககள, சிறபபாக நாககு தடை படாது ஒலிகக உயிரெழுததுககளின் தோறறம இன்றியமையாத தாயிருககிறது Dr Caldwell தமிழின் ஒலி நீரமையை அழகுற உணாததுவா "Tamil grammarians designate vowels by a beautiful metaphor as உயிா or the life of a word; consonants as மெய or the body; and the junction of a vowel and consonant as உயிர்மெய் or an animated body." [1]

ஒரு மொழியில முதன்முதலில உயிரெழுததுககள் மூன்றே இருநதன என்பா. அவை அகர, இகர, உகரஙகளாகிய சுட்டெழுத்துககளேயாம. இமமூன்று உயிரொலிகளும் பிறககும நாவின் நிலைகள ஆராய்ந்து பாாததால ஓா உணமை புலனுகும நாப படிநதிருககும பொழுது அகரம பிறததலும, முன் அணணம நோககி மேலெழுஙகால இகரம பிறததலும, உளநாககை நோககி எழுஙகால உகரம் பிறததலும அறியபபடும். இவை மூன்றும

---

[1] Dr. Caldwell —A Comparative Grammar of the Dravidian Languages. P. 132.

தோன்றுகின்ற நிலையை ஒரு முககோணத்தின் மூலைகளுக்கு ஒப்பிடலாம் இதனை 'உயிர முககோணம்' (Vowel Triangle) [2]

இனி, தொலகாப்பியா இகரததோடு எகரததையும், உகரத தோடு ஒகரததையும் சோதது உயிரெழுதது ககளின பிறப்பைக கூறுகின்ரா அகர, இசரஙகளுககிடையே எகரமும், அகர, உகரஙகளுககிடையே ஒகரமும பிறததல பறறி ஒலி நூலில அ. இ, உ எனற மூனறு உயிரெழுததுககளுககுப பின்னா எ, ஒ ஆகியவறறை வைததனா அநத உயிா முககோ ணததில எகர, ஒகரஙகள பிறககுமிடஙகளை முறையே அகர, இகரஙகளுககு இடையிலும, அகர, உகரஙகளுககு இடையிலும சுட்டிக காட்டுவா (Place and manner of articulation)

நம இலககண நூலாா இவறறின் பிறப்பைப பற்றிப பிறப் பியலில மிகத தெளிவாகக குறிப்பிட்டுளளனா. எலலா மொழி களிலும அகரமே முதலில ஒலிககபபடுகிறது நம்முடைய குழநதை மொழியும (Child's language-sucking stage) இவ்வகரத தோறறததினை நாபபடிநத நிலையிலேயே எடுததுணாததும முயறசி எளிமையோடு அநநா இயல்பாகச சற்று மேலெழுநது ஒலிககுங்கால இகரம தோன்ற, மீணடும இதழ குவிநது நா உளநாககு நிலையில படிநது வநகின்றபொழுது உகரம தோன்று கிறது. இவ்வாறு இயலபாகக குவிநத நிலை மலருங்கால் முயற்சி எளிமையோடு எகரம ஒலிககபபடுகின்றது அ, இ, உ, எ — என்ற நான்கு உயிாகளும இநநிரலில் அமைய, ஒகரக குறில மட்டும 'ந' எனற மெய்யோடு சோநது 'நொ' (துன்பபபடு) எனற தனிச் சொலலாய நின்று பொருள் தருதலால ஈற்றில அமைநதுளளது இநநிலைகள இலக்கண நூலார்ககே அன்றி, ஒலி நூலாருக்கும உடன்பாடு ஆதலால், இலககணம காட்டும (articulation) பிறப்பியலும, மொழி நூலாா காட்டும் ஒலியியலும (phonology) ஒப்புமை உடையனவாக அமைகின்றன உயிா நிரலில இவ்வைந்து உயிரொலிகளும் குறிலாக நின்று, நீண்டு ஒலிககின்ற இயலபு காரணமாக அவவந்நெடில்களைத் தததமககு இனமாகப பெற்று நின்றன ஏனைய ஐகார, ஔகாரங்கள் நம் மொழிககண் நிற்கின்ற இயலபை நாம் ஆய்தல் வேண்டும தொல்காப்பியர் நூன்மரபில உயிாகளின் பிறப்புப பறறிப் பேசுங்கால கீழவரும நூறபாககள் வாயிலாக அககருததை உணாததுவர்.

[2] Dr. மு. வரதராசனா —மொழிநூல. பக. 12.

(1) "அவற்றுள்
அ ஆ ஆயிரண்டு அங்காந்து இயலும்"
(தொல் எழுத்து 85)

(2) "இ ஈ எ ஏ ஐ என இசைக்கும்
அப்பால் ஐந்தும் அவற்றோ ரன்ன
அவைதாம்
அண்பல் முதல்நா விளிம்புறல் உடைய"
(தொல் எழுத்து 86)

(3) "உ ஊ ஒ ஓ ஔ என இசைக்கும்
அப்பால் ஐந்தும் இதழ்குவிந் தியலும்" (தொல் எழுத்து 87)

இந் நூற்பாக்களின் கருத்தும், ஒலி இயலார் கருத்தும் உடன்பட்டு நிற்றலை இருவகைகளால் கீழே காண்போம். இலக்கண ஒலியியல் பாகுபாட்டில் உயிரொலிகளை மூவகைகளாகப் பிரிக்கலாம். அவை வருமாறு –

(1) அ ஆ – மிடற்றுயிர்கள் (gutterals)

(2) இ, ஈ, எ, ஏ, ஐ – அண்ண உயிர்கள் (palatals)

(3) உ, ஊ, ஒ, ஓ, ஔ – இதழுயிர்கள் (labials)

ஆங்கில ஒலியியலார் இருநிலைகளை உயிர்களின் தோற்றத் திறக்குக் காட்டுவர். அவை முறையே 'Jone's Method' என்றும், 'Palmer's Method' என்றும் கூறப்படும். அந்நிலைகளைக் கீழ் வரும் படத்தில் விளக்கிக் காட்டலாம்.

"Jone's Method"




Fig. I

"Palmer's Method"




Fig II

இவவிரணடு முறைகளிலும சிறு வேறுபாடு இருததலை நாம காணலாம மேலே கணட உயிர முககோண அமைபபு இவறறின வளாசசியால அமைநத ஒனறாகும.

Vowel Triangle – உயிர முககோணம




Fig III

இம் முறையை விளககுஙகால நம தமிழக மொழியறிஞர்கள் இககுறிலகளுககு இடையே நெடிலகள தோன்றுவதை அவவவ்வறறிறகு அண்மையில காடடுவா உயிர முககோணததில அகர, இகர, உகரஙகளே முதறகண இடம பெற, எஞசிய எகர, ஒகரஙகள பிறககும இடஙகளை விளககுஙகால வணண நீாமைகளின கலபபினைக காடடி அழகுறக காட்டுவா சிவபபும, மஞசளும கலககினற இடததில ஆரஞசு வணணமும. சிவபபும, நீலமும கலககினற இடததில ஊதா வணணமும தோனறுவதைப போன்று, அகர, இகரஙகளுககு இடையே எகரமும, அகர, உகரஙகளுககு இடையே ஒகரமும பிறததலைக குறிபபிடுவா.




Fig IV

தொல்காப்பியர் உயிரெழுத்துக்களின் பிறப்பினைப் பற்றித் தெளிவாகக் கூறியுள்ளமையை அடிப்படையாகக் கொண்டு ஒலிநூலார் இந்நாளில் தம் கருத்துக்களை வலியுறுத்தி வருகின்றனர். இவ்வைந்து உயிரொலிகளும் குறுகி ஒலித்தலால் 'குறில்' என்றும், நீண்டு ஒலிக்குங்கால் 'நெடில்' என்றும் பெயர் பெற்றன. இவ்வாறு இவை ஐந்தும் நிற்க, அவற்றின் இனமாம் நெட்டெழுத்துக்கள் பின்னின்று உயிர் பத்தாக அமைந்தன. இவையேயன்றி ஐ, ஔ என்னும் ஈருயிர்களை இலக்கண நூலார் 'கூட்டெழுத்து' (dipthong) எனக் கூறுவர். அவை இரண்டும் பிறப்பிடம் பற்றியும், முயற்சி பற்றியும் பகுக்கப் பெற்றவை. ஓர் உயிரை ஒலித்தபின், மற்றோர் உயிரை ஒலிக்குங்கால் நாப் போன்ற பிறப்புறுப்புக்கள் தம் நிலையில் சிறிது மாற்றம் பெறுகின்றன. தொல்காப்பியர் மொழி மரபில்,

> "அகர இகரம் ஐகாரமாகும்" (54) என்றும்,
> "அகர உகரம் ஔகாரமாகும்" (55) என்றும்

கூறியுள்ள காரணத்தால், முயற்சிப் பிறப்பின் எளிமை கொண்டு உயிர் நிரலில் ஏகாரத்திற்குப் பின்னர் ஐகாரமும், ஓகாரத்திற்குப் பின்னர் ஔகாரமும் ஒலித்தலை நாம் அறிவோம்.

**உயிரொலிகளின் பாகுபாடு - (Classification of Vowels)**

ஒலிநூல் ஆய்வின்படி உள்ளிருந்து எழும் மூச்சு மிடற்றின் முயற்சியால் வாய் வழியாகத் தடையின்றி வெளிப்படும் போது உயிரொலிகள் எழும். "A vowel is defined a voiced sound in which the air has a free passage through the mouth and does not produce any audible friction All other sounds are called consonants in normal speech" [3] என்பார் Daniel

Jones ஒலிகளை எழுப்புங்கால் அசையும் தன்மையுடைய உறுப்புக்களை 'articulators' என்றும், அவற்றிற்கு மேலுள்ள பகுதிகளை "place of articulation" என்றும், ஒலிகள் பிறக்கும் முறைகளை 'manner of articulation' என்றும் மொழியியலார் பகுப்பர் C. F Hockett என்பார் இவ்வுயிர்த் தோற்றத்தில் மூன்று நிலைகளை வற்புறுத்துவர் (i) Tongue Height-நாவின் உயரம், (ii) Tongue advancement – நாவின் எழுச்சி, (iii) Lip position –இதழ் முயற்சி என்ற அடிப்படையில் அவற்றைக் காட்டுவர் இவற்றுள் உயர்வு, இடை, கீழ் (High, Mid, Low) ஆகிய மூன்று நிலைகளும் நாவின் உயரத்தில் அடங்கும் முன், நடு, பின் (Front, Central, Back) என்பன நாவின் எழுச்சியில் அடங்கும் இதழமைப்பில் குவிதல், குவியாமை (Rounded, Unrounded) என இரண்டும் அடங்கும் மொழி நூலார் இந்நுண்ணிய வேறுபாடுகளைச் சிறப்பாகக் கொண்டு வகுக்கின்ற முறையை நாம் கீழ் வரும் அட்டவணையில் அழகுற அமைக்கலாம்.

| | Front Unrounded | Central | Back Rounded |
|---|---|---|---|
| High | i இ | | u உ |
| Mid | e எ | | o ஒ |
| Low | | a அ | |

குரல் நாண்களுக்கு இடையேயுள்ள வெளி அகன்றிருந்தால் உள்ளிருந்து வெளிவரும் காற்று நெகிழ்வாய் எளிதில் வெளி வரும். இவ்வாறு பிறக்கும் ஒலிகளை <u>நெகிழுயிர்</u> (Lax vowels) எனக் குறிப்பிடுவர் குரல் நாண்களுக்கு இடையேயுள்ள வெளி சுருங்கியிருந்தால் உள்ளிருந்து வெளிவரும் காற்று மிகுதியாகத் தடைப்படுவதால் வலிவாக வரும் இவ்வாறு பிறக்கும் ஒலி களை <u>ஆற்றல் உயிர்</u> (அல்லது) <u>வலியுயிர்</u> (Tense vowels) எனக் குறிப்பிடுவர் நெடில் நெகிழுயிராகவும், குறில் வலியுயிரா கவும் பகுக்கப்படும் குறிலுக்கும், நெடிலுக்கும் உள்ள வேறு பாடு பிறப்பிடத்தால் (position of articulation) அமையவில்லை. மாறாக ஒலிக்கும் நேரத்தில் தான் (difference in duration only) உள்ளது எனக் கருதுதல் நேரிது

---

[3] Daniel Jones —An Outline of English Phonetics P 11.

# 27. 'உயிரொலியின் சிறப்பு நீர்மைகள்'.

# The Peculiar Qualities of Vowels.

திராவிட ஒலி உயிாகளின நிலையை இலககண வழியி லும, ஒலியியல வழியிலும ஆயாநத பினனா அவவுயிாகள தாம் நிறகும நிலையில அடைகின்ற சிறபபியலபுகளையும, மாற்றஙகளையும இனிக காண்போம.

(1) உயிா ஒலிகளில அகரம் நாப படிநத நிலையில பிறப பதால அநநிலையிலேயே அதனை ஒலிததல மிகவும அருமையாகும இவ்வருமை காரணமாக அது பல இடஙகளில மாற்றம பெறுகிறது. ண, ன, ர, ல, ழ ஆகிய ஒறறுககளைக கொணடு முடிகினற சொறகளில இவறறின முன்னுளள அகரம சிலவிடஙகளில் எகரமாகத திரிகினறது.

அவா > அவொ } a- > -e-
-அ- > -எ- }

(2) வடமொழிச சொறகள தறபவமாகவோ, தற்சம மாகவோ தமிழின்கண வழஙகும பொழுது, சொலலின் முதல அகரம எகரமாக மாறும

ஜப > செபம் } a- > e
அ- > எ- }

(3) நெடில ஆகாரததை யாகவுடைய வடசொல் ஐகாரமாக மாறுகிறது

கஙகா > கஙகை } -a > -ai
-ஆ > -ஐ }

(4) நெடில் ஆ–தமிழில நீணடு ஒலிபபதிலலை. தனியாக வரும பொழுது (ஆ–பசு) நீணடு ஒலிககும. ஆனால இறுதியில உயிா பெற்றே ஒலிததல் நம இலககண நூலாருககு உடன பாடாக அமைகிறது

நா > நாவு
-ஆ > -உ

$-\bar{a} > -\bar{a}vu$ (Euphonic vowel)
(ஒலிததுணை உகரம)

(5) குறிலை அடுத்து வரும் நெடில் குறுகி ஒலிப்பதோடு உகரமும் பெறுகின்றது.

நிலா > நில > நிலவு }
இரா > இர > இரவு } Vā > Va > -avu

(6) ன, ள, ர, ய - ஆகிய ஒற்றுக்களைக் கொண்டு முடிகின்ற பெயர், வினைச் சொற்களில் ஈற்றயல் ஆகாரம் ஓகாரமாக மாறும்.

வில்லான் > வில்லோன் }
-ஆ- > -ஓ- } -ā- > ō

(7) மலையாளத்தில் குறில் அகரம், ஒகரமாக மாறும்.

குடம் > குடொம் }
-அ- > -ஒ- } -a- > -o- (Malayalam)

(8) தமிழ் இலக்கியத்துள் செய்யுட்கண் பெரும்பாலும் நெடில் ஆகாரம் ஓகாரமாக மாறும்.

"ஆ வோ ஆகலும் செய்யுளுள் உரித்தே" - என்பது தமிழ் இலக்கணம்

வந்தாம் > வந்தோம் }
-ஆ- > -ஓ- } -ā- > -ō-

(9) இகரத்தின் பின் ட, ண, ர, ற, ல, ள, ழ ஆகிய ஒற்றுக்களோடு கூடிய அகரமும், ஐகாரமும் வரின் இகரம் எகரமாக மாறும்.

இடை > எடை }
> எணை
> எலை i- > -e-
இழை > எழை
இடம் > எடம் }

(10) குற்றியலிகரம்.-குற்றியலுகரம் யகர முதன் மொழியோடு புணருங்கால் குற்றியலிகரமாக ஒலிக்கும்.

நாகு + யாது > நாகியாது.
வரகு + யாது > வரகியாது. — u + y > iya —
(குற்றியலுகரம் + ய > குற்றியலிகரம்.)

கேண்மியா, சென்மியா முதலான வழக்கிறந்த சொற்களில் மகரம் ஊர்ந்து வரும் இகரம் குற்றியலிகரம் எனப்படும்.

(11) உ, ஊ இவையிரண்டும் ஓரினம். பெரும்பாலும் பேச்சு வழக்கில் உகரம் ஒகரமாக ஒலிக்கும்.

உலகம் > ஒலகம்
உடம்பு > ஒடம்பு   u- > o-
உரல் > ஒரல்

(12) குற்றியலுகரம்:— நம் மொழியுள் உயிராக் குறிலாகிய உகரம் வேறு; சார்பெழுத்தாகிய குற்றியலுகரம் வேறு. குற்றியலுகரத்தின் ஒலியளவு அரை மாத்திரை என்று இலக்கண நூலார் கூறுவர். தொல்காப்பியர் இதனைப் புள்ளியெழுத்து என்றே அழைப்பர். நச்சினார்க்கினியர் தம் உரையில் உகரத்தின் இதழ் குவிக்கும் முயற்சி இக்குற்றியலுகரத்திற்கு இல்லை என்ற வேறுபாட்டைக் காட்டி விளக்குதல் காண்க. தமிழில் வல்லின மெய்கள் ஈறாக வரும்போது குற்றியலுகரம் ஒலிக்கப்படும். (Occurence of short 'u' with grammatical significance) வல்லின மெய்யினை 'நாக்', 'பாக்' என மொழியிறுதியில் ஒலித்தல் அருமைப்பாடு உடைத்தலைக் காரணமாக எண்ணி நோக்குங்கால், உரையாசிரியர் காட்டும் வேறுபாடும், இலக்கண மரபும் முற்றிலும் பொருந்துவனவாகத் தோன்றும். நாக்கு, பாக்கு என்ற சொற்களில் குற்றியலுகரம் ஒலிக்கப்படுதல் காண்க. இக்காலத்தில் பேச்சு மொழிக்கண்ணும் இவ்வுகரம் நிற்றலைக் காணலாம். வல்லின ஈறே அல்லாமல், மெல்லின, இடையின ஒற்றுக்கள் ஈறாக வரும் சொற்களிலும் இக்குற்றியலுகரம் நிற்றலை நாம் காணலாம்.

மண் > மண்ணு
பல் > பல்லு
பால் > பாலு

இலக்கியத்திலும் 'சொல்லு' போன்ற சொற்கள் குற்றியலுகர இயைபு காட்டி வந்திருத்தலை அறிக. "Short 'u' is of vowels the weakest and lightest, and is largely used, especially at the end of words, for euphonic purposes, or as a help to enunciation."[1] என்று Dr Caldwell கருதுதல் அவரது ஒலியறிவைக் காட்டுவதாக அமையும்.

---

[1] Dr Caldwell –A Comparative Grammar of the Dravidian Languages. P. 134.

இவ்விறுதி உகரம ஐரோபபிய மொழிகளிலும் காணப் படாத ஒன்ருக விளங்குகிறது இநதோ–ஆரியக குடும்பத்தைச் சாாநத வடமொழி அமைபபினும் இவ்வுகரம காணப்படா மையை நோககுஙகால, இது தமிழுககே உரிய ஒன்று எனத துணியலாம் 'வாக' போன்ற வடமொழிச சொறகள

தமிழில வரும்பொழுது 'வாககு' (vākku) எனக குற்றியலுகர நீாமையாக வழஙகுதலை அறிதல நன்று மொழியிடையிலும, இருசொறகள புணருகினற தனமைககண இவ்வுகரம புகுதலை 'அதவைத > அததுவைதம' என்ற சொலலாடசியில காணலாம. நம திராவிட மொழிகளின் பல்வேறு வகைச சொல நிலைகளை நன்கு ஆராயுஙகால, இவவுகரம ஒலிநயம (euphonic purpose) பறறி வருவது எனபதைக காடடிலும முயறசி எளிமை காரணமாக (economy of effort) வருதலே சிறநதது எனக கொளளலாம. தெலுஙகு மொழியில எததகைய சொல்லும உயிரீருகவே முடிதல் வேணடும எனபது இலககணமாகப பின் பறறபபடுகிறது 'தெலுஙகு' என்ற சொல்லாடசியே அவவிலக கணததைப போற்றுகின்ற மரபைக காணக (In Telugu every word without exception must end in a vowel) இயலபாக உயிரீறு பெருத சொறகளின இறுதியில உகரம சோககப்படு தலை நாம் சிலவிடஙகளில காணலாம

கண > கன்னு
மண > மன்னு

புதுக் கன்னடததில (Modern Canarese) இவ்விதி உள்ளது.

சில > கெல > கெலவு
பல > பலவு

மலையாள மொழியில் இககுற்றியலுகரம நிற்றற்குரிய இடத்தில அசரவுயிா நிற்றலை Dr Caldwell, Dr Gundert முதலானோா கூறுவா. "Dr Gundert considers this a peculiarity of the Malayalam of Cochin and of the Syrian Christian"[2] என்று Dr. Caldwell குறிபபிடுவா. எனவே மலையாள மொழியில் இச சாாபெழுதது வகை அமைதல் சிறபபுடையதே சில சொறகளில இககுற்றியலுகரம அரை மாத்திரையும் பெருமல் வரும போலும.

[2] Dr. Caldwell –A Comparative Grammar of the Dravidian Languages. P. 134

அத்னை உகர வடிவினதாக எழுதாமல அதறகுரிய மெயயெழுத் தின் மேல ஒரு புளளியோ, சிறு வடடமோ வரையப பெறறு அதன நிலையைக காடடுவா இனி, தொலகாபபியா 'நுநதை' என்ற முன்னிலை முறைப பெயரின் மொழிமுதல உகரம குற்றிய லுகரம என்பா

(13) எ, ஏ, ஒ, ஓ – உயிாககுறில நிரலில எகரமும, ஒகரமும தமிழில சிறப்பெழுததுககளாக நின்று மாடசி பெறும. திராவிட மொழிகளில் இவ்வெகர, ஒகரஙகள (epsilon and omicron- Dr Caldwell) பெருவழககை உடையன அனறியும இவை திராவிட மொழிகளுககு மிகமிக வேணடற்பாலன திராவிட மொழிகளில எகர, ஒகரக குறிலகளுககும, அவறறின நெடிலகளுக்கும உளள வேறுபாடு ஒலிநயம பறறியோ, புணாசசி வேறுபாடு பறறியோ அமைநதது அனறு ஆனல, அடிசசொறகள் (Roots) எனபபடும பகுதிகளைப பிரிதது உணா தறகு இவ்வேறுபாடு இனறியமையாததாய விளஙகுகினறது

| | | |
|---|---|---|
| எடு – ஏடு | | |
| தெள – தேள | | /e/, /ē/ |
| கொல – கோல | | |
| தொல – தோல | | /o/, /ō/ |

என்ற சொறகளில குறில, நெடில வேறுபாடடால பொருள மாற்றம பெறுதலை அறிக (In Dravidian languages the short 'e' and 'o' are distinct phonemes and the length is also phonemic)

(14) ஐ, ஔ :- இவையிரணடும கூடடெழுததுககள எனத தமிழிலும், சநதியக்ஷரஙகள என வ. மொழியிலும, 'dipthongs' என ஆஙகிலததிலும வழஙகபபடும ஓா உயிரை ஒலிதத பினனா பிறிதோா உயிரினை ஒலிஙகுஙகால நா முதலிய பிறபபுறுபபுககள மாறும இடைக்காலதது மிடறறு முயறசி (voice) சததியககரமாக அமையும. இவவிரு உயிாகளும கூடடொலிகள ஆகா எனறும, தனி ஒலிகளே எனறும் கூறுவா

அ + இ ≥ ஐ
அ + உ > ஔ

தொலகாபபியனாரும, "அகரம இகரம ஐகாரமாகும" (தொல எழுதது 54) எனறும, "அகரம உகரம ஔகாரமாகும" (தொல. எழுதது. 55) எனறும கூறியுளளாா அனறியும அவா,

"அகரத்து இமபா யகரப புள்ளியும
ஐயென் நெடுஞ்சினை மெயபெறத தோன்றும"
(தொல எழுதது 56)

எனக கூறியிருபபது ஈணடு நோககததககது எனவே 'ஐ' என்பது அகரவுயிரும், யகரமெயயுமாகவே யாணடும கொள்ளத தககதாக இருககின்றது உரைநடையில, 'ஐயம—அய்யம' எனறும, 'கைவேல-சய்வேல' என்றும, பேசசு மொழியில 'தை-தய' என்றும வழஙகுவதனைக காணலாம. Dr Caldwell அவாகள அ+இ>ஐ என்ற கருததைதக கொளளாமல எ+இ>ஐ எனக கருதுவா ஆனால ஆவருடைய கொளகை ஈணடு மறுககபபடுகினறது

பேராசிரியா Dr தெ பொ மீனுடசிசுநதரனா அவாகள எழுதது வரலாறறைபபறறி ஆராயுஙகால ஐகாரம பறறிக குறிபபிடுவன ஈண்டு நோககததககன இவ்வைகார உயிா அகரம முன்னும இகரம பின்னுமாக ஒற்றிதது ஒலிககின்ற 'ஈருயிா ஓரொலி' எழுததாம். முறககூறு எடுதது ஒலிககப படுதலின் இது 'வீழிசைக கூட்டொலியாம'. இவ்வாறு வருதலை 'நலிநது வருதல்' எனவும அழைபபர். அளபெடைககண ஐகாரததிறகு அறிகுறியாக இகரக குறிலே வழஙகும. ஓரெழுதது ஒரு மொழியிலோ, மொழி முதலிலோ அன்றி, மற்றைய இடங களில 'அய்' எனக குறறெழுததாகவே இஃது ஒலிததலின அவ்விடஙகளில இதனை 'ஐகாரக குறுககம' என அழைபபா. மொழியின ஈற்றில வருஙகால யகர மெயயும, மிகப பழங காலததில இகரமாகவே வழஙகபபெறறது என்பதனை 'நாய> நாயி>நாஇ' என்ற வடிவத்தில காணலாம் 'போ+இ>போய' என்ற இறநதகால வினையெசச வடிவமும இவ்வுண்மைககுச சான்றாக அமையும். கி. பி 7 ஆம் நூற்றாணடில கூரம் செப பேட்டில் 'ஐந்தே' என்ற சொல் 'அயிநதே' என்று குறிககபபட் டுளளது நடை—நடெய—நடெ என்ற ஒலிநிலை மாற்றஙகளைச காரணமாகக கொண்டு Dr. Caldwell தமிழில வரும் ஐகாரம் எகரமும், இகரமபோல் ஒலிககும் யகரமும் இயைந்த "ஈருயிா ஓரொலி" எனபா. 'கை' என்ற தமிழச் சொல தெலுஙகில் 'செய்' என வருதலை ஈணடுக காணக 'தலை' என்பது பேசசுத் தமிழ வழககில 'தலெ' என்றும், தெலுஙகில் 'தல' என்றும் வருவதால் ஐகாரம 'எ' எனறும, 'அ' என்றும் மாறக காண் கின்றோம். (ஐ—எ—அ—free variation)

அகரத்தின் பின் வகரமெய ஒலித்தலால் ஒளகாரம் தோன்றுமென்று தொலகாபபியா கூறினாரிலலை. வகர மெய்யை

ஒலிக்க மேற்பல்லையும், கீழிதழையும் நாம் ஒருசேரப் பொருத்து கிறோம். ஆனால் 'ஔ' என்ற எழுத்திலுள்ள வகர ஒலிக்கு இதழ்கள் பொருந்தினால் போதும். Dr Caldwell அவர்கள் இந்த 'ஒலி' தமிழுக்கும் ஏனைய திராவிட மொழிகளுக்கும் உரியதோர் எழுத்து அன்று என்றும், வடமொழியைப் பின்பற்றி அமைக்கப்பெற்றதே என்றும் கருதுகின்றார் "This dipthong 'au' is not really a part of any of the Dravidian languages, and it has been placed in the alphabets solely in imitation of Sanskrit"[3] என்பார். ஆனால் தொல் காப்பியம்,

> "க த ந ப ம எனும் ஆ ஐந்தெழுத்தும்
> எல்லா உயிரொடும் செல்லுமார் முதலே"
>
> (எழுத்து 61)

எனக் கூறியுள்ள காரணத்தினால், ஔவுடன் சேர்ந்த எழுத்தை முதலாக உடைய சொற்கள் அக்காலத்தில் இருந்து வந்தன என்பது தெரியவருகின்றது ஆனால் ஔகாரம் வரும் தமிழ்ச் சொற்கள் பெரும்பாலும் அகரவுயிரும், வகரமெய்யுமாக எழுத இடம் பெறுகின்றன

ஔவை > அவ்வை

'அவ்வை' என்பது 'அம்மை' என்பதன் திரிபாதலால் 'ஔவை' என்பது காலத்தால் பிந்தியது எனக் கூறுவர். இதுகாறும் கூறியவற்றால் ஐ, ஔ என்ற ஈருயிர்களும் நம் மொழியில் பழங் கால முதலே வழக்கத்தில் இருந்து வந்தன என அறியலாம் பேராசிரியர் Dr தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்கள் ஒலி ஆய்வில் ஔகாரம் நெட்டெழுத்தாகக் கருதப்பெற்றாலும், 'அவ' எனக் குற்றெழுத்தைப் போல ஒலித்து ஔகாரக் குறுக்கம் எனப் பெயர் பெறும் என்று கூறுவர். அகரமும், உகரமும் சேர்ந்து ஔகாரமாக அமைந்தாலும், சிவஞான முனிவர் வகரக் கூறும் உண்டு என்று மொழிவர். பழங்கன்னடத்தில் 'ஔ' என்பது பெண்பாலைக் குறிப்பதாக, முன்னிலையில் பெண்பால் விகுதியாக வழக்கத்தில் இருந்தது என்பர். வட்டெழுத்தில் 'ஔ' என்பது வழங்காமையைக் காண்க.

சந்தியக்கரம் என்பது நெட்டெழுத்தைப் போல இரண்டு மாத்திரை ஒலியளவு உடையதாய் அமையும் கூட்டொலியா

[3] Dr Caldwell –A Comparative Grammar of the Dravidian Languages. P. 136

ரும ஆனுல் தமிழிலுள்ள ஐ, ஔ என்பவை தம்மைச சுட்டும் இடமும, அளபெடுக்கும் இடமும நீங்கலாகப பிற இடங்களில ஒன்றரை மாத்திரையளவே ஒலிக்கின்றன அய், அவ் என்னும வடிவ நீர்மையில அவை ஒலிக்கபபடுதலைக காணக எனவே ஐ, ஔ என்பன அய, அவ என்பனவற்றின வேறு அலல என்பதூஉம, சந்தியக்கரம அல்ல என்பதூஉம மொழி நூலார்க்கு உடன்பாடாம. மேலை நாட்டு மொழியியலார Armfield என்பவர "The term dipthong is applied to the emission of two vowel sounds in one and the same syllable with one and the same breath impulse, giving to the untrained ear the impression of single sound"[4] என்று கூறுதலைக காணக.



[4] G. Noel Armfield –General Phonetics P 35.

# 27. (a) 'உடம்படுமெய்'.
# Prevention of Hiatus.

அனைத்து மொழிகளிலும் இலக்கணமரபு எனவொன்று நிலவியிருக்க, ஈருயிர் இணைந்து வருகின்றபொழுது அவற்றை எளிமையாக உச்சரிக்க வேண்டி, அவ்விரண்டிற்குமிடையே ஓர் ஒற்றினை இட்டு வழங்குதல் மொழிமரபு இலத்தீன், சொமானிய மொழிகளில 'ன்' (n) என்பது உயிர்களிடையே நின்று இசைநயம் பயக்கச் செய்து விட்டிசையைப் போக்கும் நமநாட்டு மொழிகளில் இந் நிலை மிகுதியாகப் பயின்று வருகிறது நிலை வருமொழிகளுக்கிடையே ஒரு மெய் நின்று அவற்றை ஒன்றுக உடம்படுத்தல் காரணமாக 'உடம்படு மெய்' என அது வழங்கப் பெறும் வடமொழியிலும (Sanskrit), பாலி (Pali) மொழியிலும் அடிப்படை உயிர்களின் ஈற்றிலும, முதலிலும 'n' ஒற்று அமையும். திராவிட மொழிகளுள இவ்வுடம்படுமெய் வழங்கப் பெறும் பெற்றியை நிரலே காண்போம இதனை ஆங்கிலத்தில 'Prevention of hiatus' என்பர். (Hiatus—a slight pause between two vowels coming together in successive words or syllables)

தொல்காப்பியர் எழுத்ததிகாரப் புணரியலில இவ்வுடம்படுமெய் பற்றிக் குறிப்பிடுங் கருத்துக்கள் எண்ணத் தக்கவை.

> "எல்லா மொழிக்கும் உயிர்வரு வழியே
> உடம்படு மெய்யின் உருவுகொளல் வரையார்"
> (தொல். எழுத்து—புணரியல 140)

அஃதாவது உயிரீறும், உயிர் முதன் மொழியும் புணருங்கால நேரும மாற்றத்தை இந் நூற்பா வாயிலாகக் குறிப்பர் அவ்வுடம்படு மெய்களாவன யகர, வகரங்கள என முதல் நூல கருத்தினைத் தழுவி உரையாசிரியர் நச்சினார்க்கினியர் உரை விளக்கம் கூறுவர்.

> "உடம்படு மெய்யே யகர வகாரம்
> உயிர்முதன் மொழி வரூஉங் காலையான" — எனவும,

> "இறுதியும் முதலும உயிர்நிலை வரினே
> உறுமென மொழிப உடம்படு மெய்யே" — எனவும் உரை

மேற்கோள்கள் ஆங்குக் காட்டப் பெறுகின்றன. உயிர்களுள் இகர, ஈகார, ஐகார ஈறுகள் யகர உடம்படுமெய் பெறும் என்றும், ஏகாரம் யகர, வகரங்களைக் கொள்ளும் என்றும், பிறவுயிர்கள் வகர உடம்படுமெய் பெறும் என்றும் அவர் குறிப்பிடுவர்.

| | | | | |
|---|---|---|---|---|
| I | கிளியழகிது | | | |
| | குரீஇ யோப்புவாள் | -ய- | ī | + y [vowels] |
| | வரையர மகளிர் | | ai | |
| II | விளவழகிது | | | |
| | பலாவழகிது | | | |
| | பூவழகிது | - வ - | u | + v [vowels] |
| | கோவழகிது | | ō | |
| | கௌவடைந்தது | | au | |
| III | 'ஏஎ யிவளொருத்தி' | -ய-(or)-வ- | ē | + y/v [vowels] |
| | 'ஏவாடல் காணக' | | | |

உயிர் பன்னிரண்டனுள் ஒகர ஈறு 'நொ' என்ற நிலையில் 'துன்பப்படு' எனும் பொருளில் வருவதால் அஃது ஈற்றில் வரக் காணோம். எகர ஈறு அளபெடையில் மட்டுந்தான் வரும். உகர ஈறு வரும்பொழுது புணர்ச்சி நிலையே மாறும்.

(–o ... No occurence
–e Comes only in alapetai
–u ... Undergoes special change.)

மரவடி, ஆயிருதிணை என்ற சொற்களில் விகாரப்பட்ட மொழிக்கண் உடம்படுமெய் நிற்றலைக் காண்க. "கிளி அரிது மூங்கா இல்லை"— எனச் சிலவிடங்களில் உடம்படுமெய் இன்றி வருதலும், "வரையார்" என்ற நூற்பாச் சொல்லால் பெறப்படும் "விணவத்துக் கொட்கும்" எனச் சிலவிடங்களில் மெய்யீறும் உடம்படுமெய் பெறுதலை உரையாசிரியர் காட்டுவர்.

நன்னூலார் உயிரீற்றுப் புணரியலில் உயிர்முன் உயிர் புணருகின்ற பெற்றியைக் காட்டுங்கால்,

"இ ா ஐ வழி யவ்வு மேனை
உயிாவழி வவவும ஏமுனிவ விருமையும்
உயிர்வரின் உட மபடு மெய் யென்ருகும" (நன னூல 162)

எனக கூறுவா இவ்விதியால் தொல்காபபியரைக காட்டிலும உரைகாரா கருததினை ஏற்று யகர, வகரஙகள் எஙகெஙகு வரும என்பதனைப பின் வநத நன்னூலாா குறிபபிடுவா இந நூறபாவிறகு மாருக, ஆ + இடை > ஆயிடை என்றும, கோ + இல > கோயில என்றும தமிழ மொழிககண வழஙகுதலை நம மொழி உலகு ஏற்றுக கொள்ளும். ஒலிககும முயறசியை எளிதாகக வேணடியும், பகுதி, இடைநிலை முதலியவறறைத தெளிவாகக குறிபபிட வேண்டியும திராவிட மொழிகளில எலலா உயிரொலிகளும தனிததனியே ஒலிககப பெறுமாறு காபபாறறபபட்டு வந்துள்ளன. ஆனல், விட்டிசையானது (hiatus) ஒலிககும முயற்சியை அரிதாககுமாதலால அக குறை போககக விரும்பி, ஈருயிருகக இடையே உயிரோடு ஒதத இனமாகிய யகர, வகரங்களைச (Semi Vowls) சேர்தது ஒலிததல் மரபாக அமைககபபட்டுளளது. ஆஙகில ஒலி நூலாா இவவகர, யகரங்களை 'அரையுயிா' or 'Semi vowels' எனக குறிப்பிடுவதால அவை உயிாகளிடையே மெயயாதறகு உரிய தகுதியைப் பெறுகின்றன

வடமொழியில் பெருமபாலும நிலை, வருமொழிகளுககு இடையே ஈருயிாகள புணருஙகால, அவை ஒன்று சோநது ஓருயிராக ஒலிககும

மட + அதிபதி > மடாதிபதி (–a+a>ā)
இலககியத தமிழில் இலககண மரபுககு ஒடடிப் பரு+அரை> பராரை என வழஙகுதலையும காணக. (–u+a>ā)

Dr Gundert அவர்கள், அ+வ்+அன் > அவன் (Tamil) > வாணடு (Telugu) என்ற நிலையைககாட்டி வகர உடம்படுமெய பெறுகின்ற தொன்மைச சிறப்பை உணாத்துவா. கூ (ku) மொழியில் 'aalu' (she) என்ற சொல 'ā–v–ā lu' என விட்டிசையைப போககக, வகரமெய் பெறறு வருதலை நாம காணலாம தமிழில காணபபெறும வகரததிறகு மாருகத தெலுஙகு, துளு ஆகிய மொழிகளில் னகரம ஒலிககும. கன்னட மொழியில மகரம வகரத்திற்கு மாருக ஒலிககும.

guru—v—am > guru—m—am.

Dr Caldwell அவர்கள், தெலுங்கில் 'ன்' (n) உடம்படு மெய்யாக வழங்கப்படுதலைச் சுட்டிக் காட்டித் தமிழின்கண்ணும் அஃது இருத்தலை உணர்த்துவர். தமிழில் 'பொருளன', 'காட்டின' என்ற சொற்கள் 'பொருளவ' 'காட்டிய' என வரும் என்றும், யகர உகரங்களுக்கு மாறாக னகரம் காட்டப்படுவதால் அதுவும் உடம்படுமெய்யாக அமையும் என்பர். ஆனால் நம் இலக்கண வழக்குப்படி அன், இன் என்ற பால்காட்டும் விகுதிகளில் (அல்லது) சாரியைகளில் உள்ள னகரமே அஃது என்றும், அஃது உடம்படுமெய் ஆகாது என்றும் நாம் அறிதல் வேண்டும். தெலுங்கில் கன்னடத்தைப் போன்று மகரம் உடம்படுமெய்யாக வழங்குதல். ஆனால், அது வகரத்தின் திரிபாகக் கொள்ளப்படுவதோடன்றி வகரம், மகரமாதல் (v>m) ஒலி நூலார்க்கும் உடன்பாடு என்பதனை அறிக. நம் தமிழில் 'என்னமோ'> 'என்னவோ', 'அவ்வை' > 'அம்மை' என வந்தலைக் காண்க. Dr Caldwell கா+உம்>காரும் எனக்காட்டி, ரகரம் உடம்படுமெய் என்பர். தெலுங்கில் 'pota+illu'='pota-rillu' (இல்-வீடு) என ரகரம் வருதலைக் கொண்டு தமிழுக்கும் அதைப் பொருத்துவர். தெலுங்கு மொழியில் 'pata+ondu=pata kondu', அறுவர் > ஆறுகரு, அவர் > கார் எனக் ககர உடம்படுமெய் வருதலைக் காட்டுவர். இவ்வாறு உடம்படுமெய் திராவிட மொழிகளில் பலவாறு அமைந்து வருதலை அறிக. "The only analogy which may at first sight have appeared to exist between the Dravidian usage and Greek, in respect of the prevention of hiatus, consists in the use of 'v' or 'y' by the Dravidian languages as an euphonic copula "[1] என்று Dr Caldwell கிரேக்க மொழிக்கும் திராவிட மொழிக்கும் இடையே நிலவும் ஓர் ஒப்புமையாகத்தைச் சுட்டி, அரை உயிர்களாகிய வகர யகரங்கள் இணைப்பு ஒலித் துணையாக விளங்குதலை எடுத்து மொழிந்து சிறப்பித்துள்ளமையைக் காண்க

[1] Dr. Caldwell— A Comparative Grammar of the Dravidian Languages. P 175

## 27. (b) 'உயிர் இடம் பெயர்தல்'.
## Euphonic Displacement of Vowels.

திராவிட மொழியில் ஓர் உயிர் இடம் பெயர்ந்து நிற்றல் ஒரு புது முறையாக அமைந்துள்ளது. மூன்று உயிர்களைக் கொண்ட உயிர் முதன் மொழியாக வரும் தெலுங்குச் சொற்களில் உயிர் இடம் பெயர்ந்து நிற்றலைக் காணலாம்.

(1) அவன் > வாடு avaṉ > vaaṉ; vaaṉ > vāṉ > vāndu > vādu

(VCVC>CVVC  $V_1CV_2C>CV_1V_2C$ (Phonetic law))
Ta  Tel

(2) அவர் > அவரு >

அ+வ+அ+ரு > வ+அ+அ+ரு > வ+ஆ+ரு > வாரு

(3) இவர் > இவரு >

இ+வ+அ+ரு > வ+இ+அ+ரு > வ+ஈ+ரு > வீரு

அதி, இதி போன்ற சொற்களிலும் பிறிதோர் இடைச் சொல் சேர்ந்து உயிரொலி மூன்றாகும் போது உயிர் இடம் பெயர்தலைக் காணலாம்.

அதி + னி > அதினி > தானி
இதி + னி > இதினி > தீனி

இவையனைத்தும் சுட்டுப்பெயர்கள் ஆதலால், இவை நீங்க எஞ்சிய பிற பெயர்களிலும் இவ்விதி நிற்றலைக் காணலாம்.

உரல் > உரலு > ஒரலு > ரோலு
ural > ural-u > oral-u > roal-u > rōlu
(o+a>ō)
உகிர் > உகிரு > ஒகிரு > கோரு

இத்தகைய மாறுதல் நிகழுங்கால் இடையிலுள்ள ர, ல, வ என்ற இடையின மெய்களே பெரும்பாலும் மாற்றத்தைப் பெறுவதைக் காணலாம். இத்தகைய உயிர் இடம் பெயரும்

ஒலிமுறை தனி விதியாக நின்று மாறிய பின்னர், பல தெலுங்குச் சொற்கள் திரிந்து நிற்றலைக் காணலாம்.

ஆகாது > காது

Ta Tel

இலது > லேது ilatu > liatu > lētu

உள் > லோ uḷ > lu > lō

நம் திராவிட மொழியில் இவ்வாறு உயிர் இடம் பெயர்தலை ஒரு விதியாகவே (Phonetic law) கொள்வர். இவ்விதி தமிழுக்கும், தெலுங்குக்கும் இடையே நிலவி வருதலை நாம் காணலாம்.



# 27. (c) 'உயிரொலி இயைபு'.
# Harmonic Sequence of Vowels (or) Vowel Harmony.

உயிரொலிகள் ஆற்றல் மிக்க நிலைமையிலும், நலிந்த நிலைமையிலும் மாறுபட்டு வரக்கூடிய நிலையினை ஒலிநூலார் தனித்த ஒலிக் கூறாகக் காண்பர். தொடர்மொழிகளின் நிலைமொழிக்கண் உள்ள ஆற்றல் உயிரோ (heavy vowel), வருமொழிக்கண் உள்ள ஆற்றல் உயிரோ பிற உயிர்களை இயைபு நோக்கித் தன்னுடையதாக மாற்றிவிடும். இவ்வொலிக்கூறு 'உயிர் ஒலி இயைபு' அல்லது 'Vowel Harmony' என்று வழங்கப்படும். சித்திய இனக் கூறில் இவ்விதி காணப்படுதலை நோக்கி அதனோடு தொடர்பு உடைய திராவிட மொழிகளிலும் இஃது உள்ளதாகக் காட்டுவர் Dr Caldwell "In all the languages of the Scythian group, a law has been observed which may be called 'The law of harmonic sequence' The law is, that a given vowel occuring in one syllable of a word, or in the root, requires an analogous vowel, i e, a vowel belonging to the same set in the following syllables of the same word, or in the particles appended to it, which, therefore, alter their vowels accordingly "[1] என்று அவர் கூறியுள்ளார். Dr. Tucker என்பாரும், Dr Whitney என்பாரும் இது பற்றிய நிலைகளை எடுத்துக் கூறியுள்ளனர். துருக்கி மொழியில் (Turkish Language) 'yez' (write) என்ற சொல் 'muk' என்ற விகுதியோடு சேர்ந்து 'To write' என்ற பொருளைத் தருங்கால் நிலைமொழி இடையுயிர் வருமொழி இடையுயிராகிய 'u' என்பதனை 'e' ஆக மாற்றும்

(எ. டு.) yez+muk>yezmek (to write)
sev+muk>sevmek. (to love)

Dr Grierson என்பார் முண்டா மொழியில் இவ்விதி இருப்பதாகக் கூறுவர் Dr G U Pope திராவிட மொழிகளுள் தமிழ் மொழி இவ்விதியை ஏற்றுக் கொள்வதில்லை எனக் கூறுவர் Dr Caldwell அவர்கள் இவ்விதி தமிழில் இருப்பதாகக் கூறி, எத்தகைய சான்றையும் காட்டாமையால் தமிழுக்கு இஃது உகந்தது

[1] Dr. Caldwell –A Comparative Grammar of the Dravidian Languages P 181.

அன்று எனக்கொள்ள வேண்டும பிற்கால வடமொழி வாணா 'உபயின்று புறகை' எனற சொலலாடசியைக காடடி 'இனறி' எனற குறிபபு வினையெசசம இவ்விதி காரணததால் வநமொழி அடி உயிரைக கொணடு 'இனறு' என மாறியதாகக காடடுவா இககருதது மொழி நூலாரால அறவே மறுககபபடுகினறது

Dr Caldwell அவாகள இவவொலி இயைபு முறை தெலுஙகு மொழியில சிறபபாக வழஙகி வநதிருததலைத தகக சானறுகளால காடடுவா.

kalugu + ti + n̲i > kaligitin̲i

(to be able)

(Verbal root + Tense sign + Pronominal suffix)

இததெலுஙகில '**kalugu**' என்ற வோசசொலலோடு காலங காடடும இடைநிலையும, பால்காடடும விகுதியும புணருஙகால இவவொடடுமொழி அமைபபில இடைநிலைககண உளள இகர உயிரும, விகுதிககண உளள இகர உயிரும, வோசசொலலின கண காணப்படும உகரஙகளை உயிரொலி இயைபு நோககி இகரஙகளாக மாறறுகினறன இனி, இடைநிலையிலும, விகுதியிலும் **tu, n̲u** எனற வடிவஙகள காணபபடடால அபபொழுது வோசசொறகண எததகைய மாறறமும நிகழுவதில்லை தானி+கு > தானிகி' என வருவதும 'ஆவு+னி > ஆவுனு' என வருவதும தெலுஙகில காணபபடும மாறறும உயிராறறல பெறற வடிவங கள இவவிரு சொற்களில் முறையே இகர, உகரஙகள தமமொடு சாரும உகர இகரஙகளை அவ்வண்ணம நிற்சாமல இகர, உகரங களாக மாறறுகினறன பேசசுத தமிழில 'கததிககுப பிடியிலலை' எனற சொலலாடசியில நான்கன உருபாகிய 'கு' எனபது முயறசி எளிமை குறிததுப பேசசில படடும 'கததிககிப பிடி யிலலை' என ஒலிககபபடுகிறது. இஃது இலககிய வழககாகவும அமையாமல காணபபடுவதால், இதனைச சானறுககக காடடித தமிழுககும இவவிதி உணடு என வாதாடுதல் பொருததமறறதே ஒரு சொலலோடு சேரககபபடும இடைசசொலலின உயிா, சொலலின உயிரொலியை அவ்வாறு மாறறி அமைதததலும உணடு. சான்று :- 'கததி + லு > கததுலு' தெலுஙகு மொழியில 'கததி+கு > கததிகி' என்றே ஆகும ஆனால், 'கததி' எனற சொலலோடு 'லு' என்பதுவும, 'கு' என்பதுவும புணருங கால 'கததி+லு+கு > கததுலுகு' என ஓரின இயைபு பெறும

Dr Whitney என்பார் "சித்திய மொழித்தொடர்பை அடிப்படையாக வைத்துக் கொண்டு அடிச்சொல்லின் ஈற்றுயிர், விகுதிகளில் காணப்பெறும் உயிர்களைத் தன்னோடு ஒப்புமையாக அமைத்துக்கொள்ளும் (assimilation)" எனக் கூறுவர் ("In the Scythian languages it is the final vowel of the base which assimilates that of the following suffixes"— Dr. Whitney).

'தானிகி', 'ஆவுனு' என்ற வடிவங்களை இவ்விதிக்குத் துணையாகக் கொண்டு, சித்திய இனக்கூறும், தெலுங்கு மொழிக் கூறும் ஒத்து நிற்கின்றன எனக் கூறுவர். ஆனால் 'நீ', 'மீ' என்ற அடிச் சொற்களோடு 'வு', 'ரு' என்ற சொற்கள் சேருங்கால், 'நீவு', 'மீரு' எனவே ஆகின்றன. சித்திய இனக்கூறு தெலுங்கில் ஆற்றல் பெற்றிருந்தால் இச் சொற்கள் 'நீவீ' 'மீரீ' என்றல்லவோ ஆகியிருத்தல் வேண்டும்! இந்நிலை இங்கு மாறி வருவதால் தெலுங்கு மொழியில் காணப்பெறும் நீர்மை வேறுபட்ட ஒன்று எனத் துணியலாம். Bloomfield முதலான மொழி ஆய்வாளர் இவ்வுயிர் ஒலி இயைபை "Vowel Harmony is the result of advanced stage of progressive assimilation" எனக் கூறி, "ஒப்பாக்கல்" என்ற பகுதியில் அடக்குவர். "Vowels are often assimilated to vowels that precede or follow in the next syllable"[2] என்று அவர் கூறியுள்ளமையை நோக்குக. இவ்வொப்பாக்கல் முறை உலக மொழிகளுக்கும் உரித்து. ஆதலால் அந்த வகையில் இவ்வுயிர் ஒலி இயைபை நாம் அப்பெயரிட்டு வழங்குதல் மொழி மரபாக ஒளிரும்.



2. Leonard Bloomfield -Language. P. 381.

# 28. 'திராவிட மெய்யொலிகள்'.
## The Dravidian Consonants.

இலக்கண நூலார் பிறப்பியல் பாகுபாடு செய்யுங்கால மெய்யெழுத்துக்களை ஒட்டிய நிலையில யாதேனும ஓர் ஒற்றுமை கருதி வரையறை செய்துள்ளனா. "கசடதபற வல்லினம" என்றும், "ஙஞணநமன மெல்லினம்" என்றும், "யரலவழள இடையினம" என்றும பாகுபடுத்துவா தொலகாப்பியர் இப பிறப்பியல பெற்றியைக் கீழ வருமாறு வகைப்படுத்துவா

1, க, ங — முதல நா முதலண்ணம உறல்.

2 ச, ஞ — இடை நா இடையண்ணம உறல்.

3 ட, ண — நுனி நா நுனியண்ணம் உறல

4 த, ந — அணபல் அடியை நாநுனி பரந்து ஒற்றல

5 ப, ம — மேலிதழும, கீழிதழும ஒன்றுக இயைதல.

6 ய — நா அடி, அண்ண அடியைப பொருந்தல

7 வ — மேற்பல் கீழிதழுறப பிறத்தல்

8 ர, ழ — அண்ணத்தை நா நுனி வருடல்

9 ல, ள — (i) ல-நா விளிம்பு வீங்கி அணபல முதலை யொற்றுதல்.

(ii) ள-நாவிளிமபு வீங்கி அண்ணத்தை வருடல.

10 ற, ன — அண்ணத்தை நா நுனி ஒற்றப பிறத்தல.

தொல்காப்பிய நூற்பாக்கள மேலே காணும பிறப்பியல நீரமையைச செவ்வனே புலப்படுத்தும

(1) 'ககார ஙகாரம முதல் நா அண்ணம' (தொல எழுத்து. 89)

(2) 'சகார ஞகாரம் இடை நா அண்ணம'. ( " 90)

(3) 'டகார ணகாரம் நுனி நா அண்ணம' ( " 91)

(4) 'அண்ணம நண்ணிய பல்முதல மருங்கின்
நாநுனி பரந்து மெய்யுற ஒற்றத்
தாமினிது பிறக்கும் தகார நகாரம'. ( " 93)

(5) 'அணரி நுனிநா அண்ணம் ஒற்ற
றஃகான் னஃகான் ஆயிரணடும பிறக்கும'. ( " " 94)

(6) 'நுனிநா அணரி அண்ணம் வருட
ரகாரம் ழகாரம் ஆயிரண்டும் பிறக்கும்' (" " 95)

(7) 'நாவிளிம்பு வீங்கி அண்பல் முதலுற
ஆவயின் அண்ணம் ஒற்றவும் வருடவும்
லகார ளகாரம் ஆயிரண்டும் பிறக்கும்' (" " 96)

(8) 'இதழியைந்து பிறக்கும் பகார மகாரம்' (" " 97)

(9) 'பல்லிதழ் இயைய வகாரம் பிறக்கும்' (" " 98)

(10) 'அண்ணம் சேர்ந்த மிடற்றெழு வளியிசை
கண்ணுற் றடைய யகாரம் பிறக்கும்'. (" " 99)

மொழியியலார் பிறப்பியல் பாகுபாட்டில் இருநெறிகளைப் பின்பற்றுகின்றனர். பிறப்பிடத்து ஒற்றுமையாலும் (Place of articulation), பிறக்கின்ற முறையாலும் (Manner of articulation) மெய்யெழுத்துக்களைப் பாகுபாடு செய்வர். அந்நிலையைக் கீழ்வரும் அட்டவணையில் காண்க.

| (i) Place of articulation. | (ii) Manner of articulation. |
|---|---|
| Bilabial-இதழொலி | Stops-தடையொலி (அ) அடைப்பொலி |
| Labio-dental-பல் இதழொலி | Nasal-மூக்கொலி |
| Dental-பல்லொலி | Lateral-மருங்கொலி (அ) பிரிவளி ஒலி |
| Alveolar-அண்பல்லொலி | Flap-அடியொலி (அ) வருடொலி |
| Retroflex-நா மடியொலி | Trill-ஆடொலி (அ) உரப்பொலி |
| Palatal-அண்ண ஒலி<br>Velar-பின் அண்ண ஒலி | Semi-Vowel-அரையுயிர் |

வல்லினம் என்பவை மொழியியலார் அழைக்கும் அடைப்பொலிகளே (Stops) காற்றானது வாயின் பகுதியில் தடுக்கப்பட்டுப் பின் வெளிப்படுகின்றது. அப்பொழுது சிறு வெடிப்பொலி கேட்பதைக் கொண்டு 'வெடிப்பொலி' (Plosives) என்று அழைப்பர். இந்நிலைதான் இலக்கண நூலார் 'வல்லொலி' என்றனர். ஆனால், நன்னூலார் காலத்தில் இவை ஒலிப்பிலா வொலிகள் (Voiceless sounds) ஆகும் என அறிஞர் கருதுவர். அவ்வாறே றகரம் இன்று ஆடொலியாக (Trill) உச்சரிக்கப்

**Place of articulation**

| Manner of articulaton | Bilabial | Labio-Dental | Dental | Alveolar | Retroflex | Palatal | Velar |
|---|---|---|---|---|---|---|---|
| Stops | p (ப) | | t (த) | | t (ட) | c (ச) | k (க) |
| Nasals | m (ம) | | n (ந) | n̲ (ன) | ṇ (ண) | ñ (ஞ) | ṅ (ங) |
| Lateral | | | | l (ல) | ḻ (ழ)<br>ḷ (ள) | | |
| Flap | | | | r (ர) | | | |
| Trill | | | | ṟ (ற) | | | |
| Semi Vowel | | v (வ) | | | | y (ய) | |

பெறினும், இலக்கண ஆசிரியர்கள் காலத்தில் அடைப்பொலியாகவே (Alveolar Stops) இருந்திருக்க வேண்டுமென்று மொழியியல் மேதை Dr தெ பொ மீனாட்சிசுந்தரனார் அவர்கள் கருதுவர். மெல்லொலிகட்குக் காற்று மூக்கு வழியாக வருவதால் அவை மூக்கொலி (Nasals) என்றே வழங்கப்பெறும் தொல்காப்பியர் மெய்யெழுத்துகட்கு "மூக்கின் வளியிசை யாப்புறத் தோன்றும்"– எனக் கூறியுள்ளார். இவையனைத்தும் 'ஒலிப்புடை வொலிகள்' (Voiced sounds). இடையின வொலிகளை மொழி நூலார் நான்கு வகைகளாகப் பிரிப்பர். காற்று வரும் வழியே இடையிலோ, ஓரத்திலோ தடுக்கப்பெற்று இரு மருங்கிலோ ஒரு மருங்கிலோ அது செல்லும் பொழுது பிறக்கும் ஒலிகளை 'மருங்கொலி' (Lateral) என்பர். ல, ள, ழ ஆகிய மூன்றும் அவ்வகையைச் சார்ந்தவை. ரகரம் ஒலிக்கப்படும் பொழுது ஒலியுறுப்புகள் ஒரே ஒரு முறை மட்டும் தான் அசையும். அதனை 'அடியொலி' (Flap) (அல்லது) 'ஆடொலியுள் ஒருவகை' என்பர். யகரமும் வகரமும் 'அரையுயிர் (அல்லது) குறையுயிர்' (Semi vowels) என அழைப்பர். உரையாசிரியர் இவ்விடையினத்தை வல்லின, மெல்லினங்களின் இடைப்பட்ட ஒலிகள் என்பர் ஆனால், இன்றைய ஒலியியல் கருத்தையொட்டி அவ்விடையினத்தை உயிரொலிக்கும், மெய்யொலிக்கும் இடைப்பட்ட ஒலி எனக் கொள்ளுதலே பொருந்துமெனக் கொள்க

ஆங்கில ஒலிநூல் அறிஞர் Daniel Jones மெய்யொலிகளின் பிறப்பினைப் பற்றிக் கூறுதலை நோக்குக "Plosive consonants, formed by completely closing the air passage and suddenly removing the obstacle, so that the air escapes making an explosive sound Nasal consonants, formed by completely closing the mouth at some point, the soft palate remaining lowered so that the air is free to pass out through the nose . Lateral consonants, formed by an obstacle placed in the middle of the mouth, the air being free to escape at the sides Rolled consonants, formed by rapid succession of taps of some elastic organ Fricative consonants, formed by narrowing the air passage at some point so that the air escapes making a kind of hissing sound (f, z) Semi vowels, or vowels are used in the capacity of consonants"[1]

---

Daniel Jones –An Outline of English Phonetics. P. 14

# 29. 'மெய்யொலிகளின் சிறப்பியல்புகள்'.
# The Peculiarities of Consonants.

நம் திராவிட மொழிகளில் உயிரொலிகள் சீரிய அமைப்பும், பாங்கும் பெற்றுச் சிறந்து விளங்கிய நிலையை மேலே கண்டோம். அவ்வகையிலேயே மெய்யொலிகளும் பலவேறு நிலைகளில் சிறப்புக்கள் பெற்றும், மாற்றங்கள் பெற்றும் விளங்குகின்றன. அவற்றை மொழியியல் அறிவுக்கு எட்டிய வகையில், இருவகை வழக்கும், இலக்கண நெறியும் கொண்டு தனித்தனி ஆராய்தலே நன்றாம்.

## (a) 'மெய்யொலிகளின் கிளை மொழி

## The Dialectic Interchange of Consonants.

உயிரொலிகள் தம்நிலையில் மாறுதலைப் போல் மெய்யொலியும் மாறுதல் இயல்பு. Dr Caldwell அவர்கள் முன்னர் உயிரொலிகளின் மாற்றங்களை வரையறுத்துக் கூறியதைப் போல் ஈண்டு மெய்யொலிகளும் தம்முள் திரிகின்ற நிலைகளைக் காட்டுகின்ற பொழுது அவற்றைக் கிளைமொழி மாற்றங்களாக (Dialectic interchanges) எடுத்துக் கூறுகின்றார். அவற்றை நிரலே காண்போம்.

1 க் ங் :-

க>வ : நோகுதல்>நோவுதல் — k>v

'க' மறைந்து போதல்: பகுதி>பாதி — k>0

க>ழ : தொகுதி>தொழுதி — k>ḻ

க>ச : கிவி (Ka)>செவி (Ta); கின்ன (Ka.)>சின்ன (Ta) — k>c

2 ச் ஞ் :-

தமிழகத்தில் பெரும்பான்மையாகச் சகரம் (ch), சகரமாகவே (s) ஒலிக்கிறது. மொழியிடையில் இரட்டிக்கும் இடத்தில் மட்டும் வல்லோசை பெறும். தெலுங்கு மொழி மட்டும்

இப்பழைய ஒலியை இன்றும காதது வருகிறது ஞகரத்தைச சாாநது வரும் சகரம வடமொழி ஜகரமாய ஒலிககும

பஞசம > பஞ்ஜம ( ஞச > ஞஜ ) n c > n j

தமிழில யகரம சகரமாகத திரிதல இயலபு

பெயா > பெசா y > c

தமிழ, மலையாள மொழிகளில ஞ, ந, ய ஆகிய மூனறு ஒறறுககளும் தம்முள் திரிநதே வருதலைக காணக

நான் }
யான } >ஞான n - y - ñ (Free variation)

**Tamil Malayalam**

3 ட் ண்.— தமிழில இவையிரணடும மொழிமுதலில வாரா. இவவொலிகளை உடைய வடசொற்கள் தமிழில வருகினற பொழுது உயிரை மொழி முதலில பெற்று வரும.

டமபம்>இடமபம ṭ- >Vṭ

தமிழ ண, தெலுஙகில் னகரமாக ஒலிககும்.

மண > மன்னு
கண > கன்னு n > n̲

தமிழ ன, மலையாளததில் ணவாக ஒலிககும்

நினககு > நிணககு n̲ > n

**Ta Ma**

தமிழ ண, மலையாளததில் ம — ஆக ஒலிககும

எணபது > எமபது ṇ > m

**Ta. Ma.**

4 த் ந் :-

த் > ச் t > c

வைதத > வைசச

த > ர் t > r

விதை > விரை

5 ப் ம் :- தமிழ 'ப' (p) கனனடததில் 'ஹ' (h) ஆக ஒலிககும.

பதது > ஹதது
Ta. Ka
பாமபு>பாமு>ஹாவு
Ta Tel. Ka

p - (Ta) > h - (Ka)

ப > வ

பகுததான் > வகுததான —(p > v)

ம > ன

மரம > மரன் m – n (Free variation)

நிலம > நிலன

6 ர, ல, ழ, ள, ற, ன. .- இவை யாவும மொழி முதலில வாரா. ர, ல என்பவறறை முதலாகக கொணட பிறமொழிச சொறகள தமிழில அடிபபடை உயிரொலிகளைப பெறறே வரும.

ரஙகா > அரஙகா r > Vr

லக்ஷமி — இலககுமி
லஙகா > இலஙகை
லோகம>உலோகம

l > Vl

இவறறுள ழ, ற, ன இவை மூனறும தமிழுககுரிய சிறபபெழுத்துககளாம மாவடடக கிளைமொழிகளில இவை திரிந்து வருதலை நாம காணலாம்

திருவிழா > திருவிசா > திருவியா ḻ > c > y

ழ > ள > ட
Ta. Ka Te.

ஏழு > ஏளு > ஏடு ḻ > l > ṭ

7 யகரம சகரமாதல .-

வயிறு > வசிறு y > c

8 ர, ல :-

தெரி > தெலியு r > l
Ta. Tel

9. ல > ர :- வில > பிர (விர) l > r
Ta Tulu

10. வ > ப –

வாழ் > பாள் v > b
Ta Ka.

வ > க (g)

வார் > காரு v > g

11. ள > ண :–

கேள் > கேண ḷ > ṇ

ல > ன

கொல் > கொன் l > ṉ
Ta Tulu

12. ற > ட .–

மாற்றம் > மாட > மாடு ṟ > ṭ
Ta. Te Ka

பேச்சுத் தமிழில் 'பதற்றம் > பதட்டம்' என வருதல் காண்க.

இவ்வாறு மெய்யெழுத்துக்கள் உயிரொலிகளைப் போல ஒரு மொழியின் முதல், இடை, கடை நிலைகளில் தக்க திரிபுகளை மேற்கொண்டு வழங்கி வருதலைக் காண்கிறோம். இந்த அடிப்படை ஒலித் திரிபாலும் மாற்றங்களாலும் திராவிடமொழிகள் தம்முள் ஓர் ஒழுங்கு முறையைப் பின்பற்றி வருதல் இன்றியமையாச் சிறப்பியல்பாகக் கருதப்பெற்று வருதலையும் காண்க.



# 29. (b) 'மெய்யொலித் திரிபுகள்'.
## The Consonantal Changes.

உயிரொலிகளைப் போன்றே மெய்யொலிகளும் சிற்சில மாற்றங்கள் பெறுதலை முறையாகக் காண்போம். அவற்றுள் சில இவற்றின் சிறப்பியல்புகளாகவும் விளங்குகின்றன.

1 அண்ண மெய்யாதல்.- (Palatalisation.)

இ, ஈ, ஐ எனும் உயிரொலிகளை அடுத்து வரும் தகரம் பல்லைப் பொருந்தி நா நிற்கும் நிலையிலிருந்து, அவ்வுயிர் ஒலிகளுக்குரிய அண்ணத்தை நோக்கிப் பெயர்தலால் சகரமாகத் திரியும்

சிரித்த > சிரிச்ச
வைத்த > வைச்ச    t > c

2 பல்லின மெய்யாதல் .- (Dentalisation )

ற ண இவற்றை ஒலித்தல் அருமையாதலால் நாவினைப் பின் அண்ணத்திற்குக் கொண்டு செல்லாமல் பல்லொடு பொருத்தியே ஒலித்தலினால் இவை முறையே த, ந – ஆக மாறும். இவற்றிற்குக் காரணம் முயற்சிச் சுருக்கமே

பற்று > பத்து
விற்றான் > வித்தான்    } ṟ > t

மண்ணு > மந்நு
கண்ணு > கந்நு    } ṇ > n

3 ஒற்றளபெடை :- (Consonant cluster.)

மெய்யெழுத்துக்கள் தனித்து உயிருடன் கூடாது நிற்கும் போது அரை மாத்திரை பெறும். உயிருடன் கூடி ஒரு மாத்திரையளவே ஒலிக்கும் செய்யுளில் இசை நீட்டம் வேண்டப்படுகின்ற பொழுது ஒற்றளபெடை அமையும்.

"பிடியூட்டிப் பின் உண்ணுங்ங் களிறு"—கலித்தொகை.

ṅ ṅ
(CC)

4 அனுஸ்வாரம் - (Anuswāra)

இது வடமொழியிலுள்ள மூக்கொலியாகும் (nasal variety). தமிழில் மூக்கொலியாகிய மெய்கள் ஆறு உள்ளன. ஆயினும், வட மொழியிலுள்ள அனுஸ்வாரம் தமிழில் இல்லை தெலுங்கிற்கே சிறப்பாக உரியதும், மிக நுண்ணியதுமாகிய மூக்கொலி (nasal) 'அர்த்தாநுஸ்வாரம்' என்பது. இவ்விருவகை ஒலிக் கூறுகளும் தமிழில் காணப்படுவதில்லை

vāḍu > vā)du
(vāṇḍu)–Telugu

5. ஓரினமாதல் :- (Assimilation)

வேறுபட்ட மெய்கள் இரண்டும் அடுத்து அடுத்து வரும் போது ஒன்று மற்றொன்றாகவோ, அதன் இனமாகவோ திரிதல் உண்டு. (Change of one sound into another.) முயற்சி எளிமை காரணத்தால் இவ்வோரினமாதல் சொற்றொடரில் அமைகிறது.

வன்சினம் > வஞ்சினம் } nc > ñ c
நன்செய் > நஞ்செய் }

பருதி > பரிதி u > i

மொழியமைப்பில் அடுத்து வரும் ஒலி, ஆற்றல் மிக்கு இருப்பின், முன் நின்ற ஒலியைத் தன் நிலைக்கு மாற்றும் இதனை 'நிலை மொழியீற்றுத் திரிபு' (Regressive assimilation) என்பர்.

கள் + குடம் > கட்குடம்.

இனி, முதலிலுள்ள ஒலி, ஆற்றல் மிக்கு வருமொழி ஒலியை மாற்றுதலும் கூடும் இம்மாற்றம் 'வரு மொழி முதல் திரிபு' (Progressive assimilation) எனப்படும்

என் + தங்கை > என்றங்கை.

இவ்விருவகை ஒலிமாற்றங்களே அன்றி, ஈரிடத்தும் பொதுவான மாற்றங்கள் நிகழும். இதனை 'நின்ற ஒலியும் வந்த ஒலியும் இயைந்த இயைபு' (Reciprocal assimilation) என்பர்.[1]

கல் + தூண் > கற்றூண்.

---

[1] Dr மு. வரதராசனார் — மொழி நூல் பக். 60

6 மெய் இடம் பெயர்தல்:- (Metathesis)

ஒலிநயம் காரணமாகவும், விரைவு காரணமாகவும் மெய்யெழுத்துகள் ஒரு சொல்லில் இடம் பெயர்தல் உண்டு (Euphonic displacement of consonants)

தசை > சதை  t c > c t  (Interchange of phonemes)
விசிறி > சிவிறி  v c ṟ > c v ṟ
வைசாகி > வைகாசி  c k > k c
குதிரை > குருதை  t r > r t
கொப்புள் > பொக்குள் k p p l > p k k l
Ta  Ma

படர் > பரடு  t r > r t
Ta  Ka

7 அடிச்சொற்களில் மெய்கெடல் - (Rejection of radical consonants)

திராவிட மொழிகளில் அடிச் சொற்களின் மெய் கெடுதலைக் காணலாம். அவ்வாறு கெடுவன இடையின ஒலிகளே என்று கூறுவர்.

நெருப்பு > நிப்பு  r > Ø

உருண்டை > உண்டை (Colloquial dialect) }
நெருநல் > நென்னல் (Literary dialect) } Tamil

8. அசைகெடல் (அ) மரூஉ :- (Haplology.)

ஒரே ஒலி நீர்மையுடைய அசைகளில் ஓரசைச் சொற்கள் கெடுதலையே அசைகெடுதல் என்பர் இலக்கணத்துள் கூறப் பெறும் மரூஉ என்பதே இதுவாம்.

அருமருந்தன்ன > அருமந்த
தஞ்சாவூர் > தஞ்சை
சோழநாடு > சோணாடு.

9. உயிர்தோன்றல் :- (Anaptyxis)

அருமைப்பாடுடைய மெய்மெய்யொலிகளின் இடையே உயிர் தோன்றுதலும் உண்டு. வடசொற்கள் இணைந்து நின்று தமிழில் வருங்கால், உயிர் தோன்றி எளிமையாக உச்சரிக்கப்படுதலை நோக்குக.

சொல + கிறு + ஆன > சொல்லுகிருன்.
பதயம > பதுமம
வாகயம > வாககியம (Existence of medial vowels)
பகவம > பககுவம

10. உயிர் கெடல் :- (Syncope.)

உயிர தோனறுதலைப போல அன்றி, இடையே சில உயிர களா கெடுதலையும நாம காணலாம

போகும > போம
போலும > போன்ம (Loss of medial vowels)

11. மொழி முதல் துணை :- (Prothesis)

மொழி முதல வாரா மெயகள் உயிர பெறறே வழஙகப பெறும

ரஙகம > அரஙகம
(The vowel 'a' thus used is called prothetic vowel)

12 ஒப்புமையாக்கத் திரிபுகள் :- (Analogic changes)

ஒருவன > (ஒருவள) ஒருத்தி
ஒருத்தி > (ஒருததன) ஒருவன

இததிரிபுகள நிலையானவை அலல ஒழுஙகிலலாத நிலைக்கும, பொருததமிலலாத தனமைககும இவவொபபுமை ஆககமே காரணம எனபா. Gleason எனபார, "Analogic change is not regular It may, and frequently does, produce an increase in irregularity, but it may equally exert a regularizing effect"[2] எனறு கூறுவா இவவாறு மெயயொலிகளின் சிறபபியலபுகளை நாம கணடோம



[2] H A Gleason –An Introduction to Descriptive Linguistics P 290

# 29. (c) 'வளைநா ஒலிகள்'.
# The Cacuminals.

நம் நாட்டு மொழிக் குடும்பங்களுள் காணப்பெறும் ஒலி நிலைகளில் மொழிநூலார் ஒருவகை இனத் தொடர்பைக் காட்டுவர் மெய்யெழுத்துக்களின் வரிசையில் ட, ண, ள 't, n, l) என்ற மூன்றினையும் ஒரு நிரமையில் வைத்துக் காட்டுவர். இம் மூன்று ஒலிகளும் பிறப்பியலில் வாயின் உட்புறத்தே நா முனையை வளைத்து வன்மையாக ஒலிக்கப்பெறும் மெய்களாம். Dr Caldwell இவற்றை 'Linguals' or 'Cerebrals' எனப் பெயரிட்டு அழைப்பர். பிற்கால மொழி வல்லுநர் இக்குறியீட்டைப் பொருத்தமுடையதாகக் கொள்ளாமல், மூளையின் அடிப்பகுதியில் பிறக்கும் ஒலிகள் எனக் கருதும் கோட்பாடும் பிழை என மறுப்பர். இன்றைய ஒலி நூலார் இவற்றைக் குறிக்க 'Cacuminals' எனும் பெயரை இடுவர். "A class of tongue-tip consonants—produced with the tip of the tongue somewhat curled back so as to come in contact with that of part of the roof of the mouth which lies between the teeth-ridge and the point where the hard and soft palates meet"[1] என்பர் Noel Armfield.

நம் இந்தியாவில் உள்ள எல்லா மொழிகளிலும் இம்மூன்று ஒலிகள் காணப்பெறுகின்றன. திராவிட மொழிகளில் இவற்றின் வழக்குகள் மிகுதியாக அமைந்துள்ளன. ஆனால், எல்லா மொழிகட்கும் பொதுவாக உரிய ஒலிகள் என்று கூற இயலாது. இந்தி முதலான மொழிகள் வடமொழியினின்றும் இவற்றைப் பெற்றிருத்தல் வேண்டும். "Hindi, Bengali and the other vernaculars of Northern India have doubtless inherited the lingual consonants from Sanskrit, from the decomposition of which those languages have mainly arisen; but it is very difficult to suppose that they have been borrowed in this manner from Sanskrit by the Dravidian languages"[2] என்பர் Dr Caldwell.

இக் கொள்கையைத் துணையாகக் கொண்டு திராவிட மொழிகளும், சிறப்பாகத் தமிழும் வடமொழியிலிருந்தே இவற்றைப்

---

[1] G Noel Armfield—General Phonetics P 114

[2] Dr Caldwell—A Comparative Grammar of the Dravidian Languages P. 147

பெற்றிருக்கவேண்டும் எனக் கூறுதல் நம் இலக்கண அமைப்பிற் கும், மொழிநூற் புலமைக்கும் அத்துணைப் பொருத்தமாகத் தோன்றுது. திராவிட மொழிகளின் சாலப் பழமையை வலியுறுத் தும் Dr Caldwell அவர்கள் இவ்வொலிகளைத் திராவிட மொழி களினின்றும் வடமொழி பெற்று இருக்கவேண்டும் எனக் கூறித் தக்க காரணங்களைக் காட்டுகின்ருர். (They were borrowed from the Dravidian languages by Sanskrit).

(1) தொன்மையான திராவிடமொழிச் சொற்களில் அடிச் சொற்களாக உள்ள பலவற்றிற்கும் - சிறப்பாகத் தமிழ் அடிச் சொற்களுக்கு இவ்வனொ ஒலிகள் மிக இன்றியமையாதனவாய் வேண்டப்படுகின்றன ஆனுல், இவ்வொலிகள் வடமொழியில் பயிலுங்கால் ஒலிநயத்திற்காகக் கொள்ளப்படுகின்றன என்ற உண்மையை நாம் சிறப்பாகக் காணலாம் (The use of the cerebral is merely euphonic).

மங்களம்
மங்கலம் mere euphonic (1-1)

(2) வடமொழியோடு ஓரினமாகக் கருதப்படுகின்ற கிரேக்கம், இலத்தீன் போன்ற ஐரோப்பிய மொழிகளில் இவ் வொலிகள் காணப்படுவதில்லை. வடமொழியினின்றும் வேறு பட்ட இலக்கண அமைதியுடைய திராவிடமொழிகளில் (Dravidian–to have an origin independent of Sanskrit), மிகப் பெரும் பாலும் இவை வழக்கிலிருந்து வருகின்றன. திராவிடக் குடும்பத் தைச் சார்ந்த Brahui மொழியிலும் இவ்வொலிகள் காணப்படு கின்றன வடமொழியைக் (Sanskrit) காட்டிலும் தொன்மை சான்ற பிராகிருத மொழிகளில் இவ்வொலிகள் மிகுதியாக நின்று வழக்கத்தில் நிலவி வந்ததை நாம் அறியலாம். (The Prakrits, the earliest vernacular dialects of Sanskrit, make a larger use of linguals rather than Sanskrit)

(3) நம்முடைய தமிழ் மொழி வடமொழியினின்றும் தனக்குப் புதியதான ஒலிகளை ஏற்குங்கால், தமிழ் ஒலி முறைக் கேற்ப (in accordance with the Tamilian laws of sound) மாற் றியே கையாண்டு வருகின்றது. உரப்பியும் கனைத்தும் ஒலிக்கத் தக்க எல்லா ஒலிகளும் (aspirate and sibilant) தமிழ் முறைக் கேற்ப மாற்றப்பட்டிருந்ததை நம் இலக்கணத்துள் காம் காண லாம். வடமொழியின் /sh/ (lingual–sibilant) என்ற ஒலி தமிழ்ப் பிறப்பியல் கூற்றில் இடம் பெருமை ஈண்டு நோக்கத் தக்கது

(Even the **Sanskrit** lingual–sibilant /sh/ cannot be pronounced **by Tamil organs**). வடநூலார் கருத்துப்படி "ட, ண, ள" என்ற ஒலிகள தமிழுக்குப புதியவை எனின், அவை நம் ஒலிப்பகுதிக கேற்ப மாற்றப்படாமல் கொள்ளப்பட்டிருக்குமோ? அன்றியும், வடசொறகளிலே இலலாமல், தொன்மைத் திராவிடச் சொற களிலும் அவை அந நிலையில போறறப்பட்டிருததல் முடியாதன அன்றோ?

(4) திராவிட மொழிக குடுமபததில் தமிழைக காட்டிலும மிகுதியாக வடமொழிக கலபபைப பெறறது தெலுஙகு மொழி யேயாம. (Telugu has been more exposed to Sanskrit influences rather than Tamil) ஆனால், தமிழிலுளள அததுணை மிகுதியான ட, ண, ள ஒலிகள தெலுஙகில காணபபடாமையை அறிக எனவே, இவ்வொலிகளை வடமொழியினினறும வநதன வாககக கொளளுதல மொழிப புலமைககு ஏலாத ஒன்று

(5) இம மூன்று வளைநா ஒலிகளும் பிற மெய்களைக காட்டிலும் முற்றிலும வேறுபடடவைகளாக அமைநதுளளன அன்றியும, ஒலி-சொல்-பொருள் எனும் நீர்மையில் இவ்வேறு பாடடினை நாம புறககணிததால அடிபபடையான பல சொற்கள யாதொரு பொருள வேறுபாட்டையும் கற்பிககாமல் பயனறற நிலையில் மொழியும ஆற்றல் இழநது காணபபடும

(1) குதி – குடி, புதை – புடை } Plosive difference

(ii) என் – எண், மனை – மணை } Nasal dıfference.

(iii) கொல – கொள், மால – மாள — Lateral differsnce.

இததகைய காரணஙகளால ட, ண, ள எனும ஒலிகள் திராவிட ஒலிகளே எனத துணியலாம் ஒலிநயம பற்றி இவை கொளளப்பட்டன எனக கூறபபடினும, மொழிககு அடிபபடை யாக அமைந்து இன்றியமையாச சிறபபினைப பெறறு, இவ வொலி பெறற சொல வழககுகள ஆடசி பெற்றன எனக கூறின் நன்று Dr Caldwell அவாகள இததகைய நுண்ணிய ஒலி வேறுபாடடைச் சானறுகளால காடடித திராவிடததிறகு இவை உரியவை என மொழிநது, வடமொழியில இவ்வொலிகள் அமைநதுளள வடிவஙகளை ஒபபு நோககினால், வேறுபடட

நீர்மையில மொழியுண்மை என்ற ஒன்று தனியே நிற்றலை சிறப்புறக் காட்டுவா "It appears to me probable that instead of the Dravidian languages having borrowed the lingual consonants from Sanskrit, Sanskrit has borrowed them from the Dravidian languages. They evidently pertain, not to the phonetic development or euphonic refinement of the Tamil, but to its system of roots, meaning and laws of specialisation [3] என்பதில காணும கருததுச செறிவினை நோக்குக.



[3] Dr Caldwell –A Comparative Grammar of the Dravidian Languages. P. 149–150

## 29. (d) 'வல்லொலி மெல்லொலி மாற்றம்'. The Convertibility of Surds and Sonants.

நம திராவிட மொழிகளுள தொன்மையான தமிழில் க, ச, ட, த, ப என்ற ஐந்து வலலெழுத்துக்களுக்கும வட மொழியில காணப்படுமாறு போல இனப பகுதிகள (இன வாக்கங்கள– Rows of consonants) இலலை வரிவடியில் இவ் வெழுத்துக்கள எததகைய மாற்றமும் பெறுமல, அவை உசசரிக கபபடுகின்ற பொழுது மட்டும சூழலுக்கு ஏற்றவாறு மாறி ஒலிக்கப்படுகின்றன. Dr. Caldwell அவாகள தம மொழிக கொள்கையில இவவலலொலி மெல்லொலி மாற்றங்களைப பற்றிக குறிப்பிடுகின்ருர. மொழிக் கூற்றின் இவ்வியல்பு தமிழமொழிக்குப பண்டு தொட்டே இருந்து வந்தது என்பது அவரால வலியுறுத்தப்படுகின்றது. வடமொழியைப போன்று தமிழில ஓரினத்தில பல எழுத்துக்கள அமையாமையினுல, வலலொலியுடைய எழுத்துக்களே நின்று மெலலொலிகளையும் குறிக்கின்ற மாண்பு ஈண்டுச சிறப்புப பெறுகிறது. (In Tamil, there is no separate characters for surds and sonants). இரு வகை ஒலி மாற்றங்களையும ஒரே எழுத்துக்கள குறிப்பதோடு இம முறை தெளிவான ஓா ஒழுங்கின் அடிப்படையில் அமைந் துளளமையை நாம் காணலாம "This is the expression of a law of sound which is inherent in the language itself"[1] என்பா Dr Caldwell

(1) க, ச, ட, த, ப எனும் ஐந்து எழுத்துக்களும் மொழி முதல, மொழியிடையே இரட்டிக்குமிடம ஆகியவற்றில் வன்மை யாக ஒலிக்கும, ஏனைய இடங்களில மென்மையாக ஒலிக்கும என்று Dr Caldwell கருதுகின்ருா

kattu – கத்து
pakkam – பக்கம் } வல்லொலி–Surds (Initially and Homorganically)

aham – அகம
cangam–சங்கம } மெல்லொலி - Sonants - (Intervocal and after nasal)

(2) இவவிதி பிற மொழிச சொற்களைத் தமிழில் கடன் வாங்கும் பொழுது பெரிதும் போற்றப பெறுகின்றது

---

[1] Dr. Caldwell –A Comparative Grammar of the Dravidian Languages. P. 138.

| | | |
|---|---|---|
| danta $>$ tandam | | (Borrowings of foreign words or Tamilisation of Sanskrit words) |
| (Sanskrit) (Tamil) | | |
| mantapa$>$mandabam | | |

"A sonant cannot commence a word, neither is a surd admissible in the middle, cxcept when doubled"[2] என அவர் கூறுவதை நோக்குக.

(3) இருசொற்கள் கொடாநது ஒரு சொல்லாகின்ற போதும் இவ்வொழுங்கு முறையை நாம் கையாளுகின்றோம். தெலுங்கு, கன்னட மொழிகளில் அந்தந்த ஓசைக்குரிய மெய்யெழுத்துக்களால் எழுதுகின்றனர். வருமொழியின் முதலில் நின்ற வல்லொலி குறிக்கும் எழுத்து புணரும்போது இடையே வருவதால் மெல்லோசையைப் பெறும் (only in pronunciation)

anna+tammalu $>$ annadammalu
huli+togalu $>$ hulidogalu
} t $>$ d

(4) தமிழில் இரு சொற்கள் வேற்றுமையாகவோ, பெயருக்கு அடையாகவோ நின்றால், வருஞ்சொல்லின் முதல் எழுத்து இரட்டித்து வல்லொலியாகவே நிற்கும். வினைத்தொகையாக நின்றால் மெல்லொலி பெறும்.

காய்+கொம்பு $>$ காய்க்கொம்பு — வேற்றுமைத்தொகை
புலி+தோல் $>$ புலித்தோல் — புலி — பெயரடை.

காய் கொம்பு' என வினைத்தொகையாக நின்றால் மெல்லொலியே பெறுகிறது இதைப் போன்று ச – ch என்று வல்லொலி பெற்றும், நடுவே தனித்து வரும்போது ச – s என்ற ஒலி பெற்றும் முன் கூறிய ஒழுங்கு முறைக்கேற்ப ஒலிக்கின்றது. ஆனால், சொல்லின் முதலில் வல்லொலியாக ஒலிப்பதற்கு மாறாக மெல்லொலி பெறுகிறது வழக்குத் தமிழிலும், தெலுங்கு, மலையாள மொழிகளிலும் சொல்லின் முதலில் வல்லொலியாகவே ஒலிக்கிறார்கள் "When single, it is pronounced as a soft, weak sibilant This is changed in the middle of words When it is doubled it is pronounced exactly like 'chch' "[3] என்று Dr Caldwell குறிப்பிடுவர்.

---

[2] ibid P 138.
[3] ibid P. 139.

| | | | |
|---|---|---|---|
| அச்சம் — accham | Tamil | | -cch- |
| அசல் — acal (s) | | | -s- |
| செத்தான் — (s) cettran | | | -s- |
| cheppu — Telugu | | -ch- | |
| chettu — Malayalam | | | |

எனவே, பழைய காலத்தில் சொல்லின் முதலிலும் வல்லொலியாகவே இருந்திருக்கலாம் என்று கருதப்பெறுகின்றது.

Dr Caldwell கூறுகின்ற இந்த ஒழுங்கு முறை இக்கால மொழிக்குப் பொருந்துவதாகலாம். ஆனால் தொல்காப்பியர் காலத்திலும், அதனை ஒட்டிய காலத்திலும் இவ்வெழுத்துக்கட்கு ஈரொலித் தன்மையால் இவை சொற்களில் எவ்விடத்தும் ஒரே வகையாக-வன்மையாகவே-ஒலிக்கப்பட்டு வந்தன என்று கருத வேண்டியுள்ளது. ஏனெனில், தொல்காப்பியர் காலத்தில் ஒவ்வோர் எழுத்திற்கும் இருவேறு ஒலி இருந்திருப்பின், தமிழ் மொழிக்கு முதன்மை இலக்கணம் வகுத்த அவர் இந்நுண்ணிய ஒலிக்குறிப்பைக் கருத்தில் கொண்டு அதற்கும் ஒரு தனியிடத்தை வகுக்காமல் இருந்திருக்க மாட்டார். அன்றியும் குற்றியலிகரம், குற்றியலுகரம் போன்ற நுண்ணிய ஒலிகட்குச் சார்பெழுத்து வகையில் தனித்த ஒலிநீர்மையை வகுத்தவர், இம்மெல்லொலிக்குரிய தனி நிலையினை வகுக்காமல் இருந்திருப்பாரோ?

நம் மொழித் தன்மையில், மிகப் பழங் காலந்தொட்டே வல்லெழுத்துக்கள் (plosives) தாம் வழங்கப்படுகின்ற இடத்திற்கேற்ப வன்மை, மென்மையாக ஒலிக்கும் முறையைக் கொண்டிருத்தல் வேண்டும் என்பது தெளிவாக அறியப்படுகிறது. ஆனால், Dr. Caldwell காட்டும் இவ்வல்லொலி மெல்லொலி மாற்றம், பிற்காலத்தில் பிறமொழிக் கலப்புக் காரணமாகவும், மக்களின் மன நாகரிக வளர்ச்சி காரணமாகவும் அமைந்து விட்டது என்பதனை நாம் கருத்தில் கொள்ளலே மொழி முடிபுக்கு ஏற்றதொன்றாகும்.

"The Tamil alphabet was arranged in such a manner as to embody the peculiar Dravidian law of the convertibility of surds and sonants. It systematically adapted the surds alone considering one character as sufficient for the expression of both classes of sounds. This clearly proves that ab-initio the Dravidian phonetic system, as represented in Tamil, its most ancient exponent, differed essentially from that of Sanskrit."[4] என்னும் அவர் கருத்து வளனை உன்னி உணர்தல் நன்று.

---

[4] ibid P 139.

# 30. 'ஒலியசை முறை'.
# The Principles of Syllabation.

திராவிடமொழிகளுள் தமிழ் மொழியின் ஒலியசை முறை (அல்லது) அலகிடும் முறை மிகச் சிறப்பாக அமைந்துள்ளது. எல்லா மொழிகளிலும் சொற்களை ஒன்றாகச் சேர்ந்து உச்சரிக்கும் போது அவற்றை எளிமை கருதிச் சிற்சில அசைகளாகப் (Syllabes) பிரித்து உச்சரித்தல் இயல்பு. ஐரோப்பிய மொழிகளிலும் மெய்யெழுத்து தனியலகு பெறும்போது மிகவும் கடினமாக ஒலிக்கின்றது. சில மொழிகளில் இரண்டு (அல்லது) மூன்று மெய்கள் சேர்ந்து அலகு பெறுவதை நாம் காணலாம்.

(எ-டு) Strength

School

Sky

ஆங்கில மொழியில் ஒரு சொல்லின் ஈற்று மெய் அச்சொல்லின் ஈற்றயல் எழுத்தோடு ஓர் அங்கமாக இணைந்து தனியலகு பெறும். ஆங்கில மொழியின் அசைகள் அளவால் தமக்குள்ளே கொள்கையான தொடர்புகள் எவையும் இன்றி இருத்தலை நாம் காணலாம். "English syllables have not in natural speech any consistent relations to each other in quantity"[1] என்று David Abercrombie மொழிவார். பிரெஞ்சு மொழியில் சொல்லின் ஈற்றுமெய் வருமொழிச் சொல்லின் முதலுயிரோடு சேர்ந்து அலகு பெறுதலைக் காணலாம். வட மொழியில் அலகுபெறும் வரிவடிவங்கள் பெரும்பாலும் உயிரெழுத்திலேயே முடிகின்றன. நம் திராவிட மொழிகளில் மிக எளிமையான ஒலியசை முறையை (Syllabation) நாம் காணலாம். ஒலித்தற்கு அருமைப்பாடுடைய கூட்டொலியையும், ஒலியமைப்பிற்குக் கூடா ஒலியையும் திராவிட மொழிகள் ஒதுக்கி ஓர் மெய்யும், ஓர் உயிரும் (CV-) சேர்ந்து ஒலிக்கத் தக்க எளிய அசைகளையே ஈண்டுக் காணலாம். உயிர் மெய் எழுத்தின் முன் வேறொரு மெய் வந்தால் அதைத் தனியே எழுதுகின்றோம். யாப்பிலக்கணத்தில் (Tamil Prosody) இவ்வாறு அசை பிரிக்கும் இயல்புகள் மிகத் தெளிவாகக் காட்டப் பெறுகின்றன.

---

[1] David Abercrombie–Studies in Phonetics and Linguistics P. 26

| | | |
|---|---|---|
| குறில் | குறிலிணை | V VV (Prosaic feature found in the Tamil language) |
| நெடில் | குறிலிணை ஒற்று | $\bar{V}$ VVC V–Vowel (short) |
| குறில் ஒற்று | குறில் நெடில் | VC $\bar{V}$V $\bar{V}$– ,, (long) |
| நெடில் ஒற்று | குறில் நெடில் ஒற்று | VC $\bar{V}$VC C–Consonant |

இனி, தமிழ் மொழியில் உயிரெழுத்தே அலகு பெறும் எழுத்தாக அமைகிறது. மெய்யெழுத்துகள் அலகு பிரிக்கவே பயன்படுகின்றன. தொல்காப்பியர் நேர், நிரை என அசைகளைப் பிரித்தலும் இலக்கண மரபாக அமைகிறது. அன்றியும், தொல்காப்பியம், வீரசோழியம், நன்னூல் ஆகிய இலக்கண நூல்கள் ஒலியசை முறையில் எளிய முறைகளைக் கையாண்டு மொழிமுதல், இடை, கடை ஆகிய இடங்களில் வரக்கூடிய எழுத்துக்களை வரையறை செய்கின்றன. கீழ்க்காணும் இயல்புகள் ஒலியசை முறை பற்றிய விளக்கங்களை நன்கு எடுத்துக் காட்டும்.

(i) மொழிமுதலில் தனி உயிரோ, மெய்யோடு சார்ந்த உயிர்மெய்யோதான் வரும். ஆங்கில மொழியில் காணப்படுமாறு போல மூன்று மெய்கள் இணைந்து வரக் கூடிய சொற்கள் தமிழில் இல்லை (**Two or three consonants cannot occur concurrently**).

(ii) சொற்களின் இடையேயும் ஒலித்தற்கரிய எழுத்துக்கள் சேர்ந்து ஒலிக்கப் பெறுவதில்லை.

அக்ஞானம் > அஞ்ஞானம்

அத்வைதம் > அத்துவைதம்

இவ்விடத்தில் இடையே ஓர் உயிர் தோன்றி எளிமையாக ஒலிக்கப் பெறுதலைக் காண்க (**Reduplication of the consonants takes place**)

(iii) மெய்யெழுத்தை முதலாகக் கொண்ட வடமொழிச் சொற்கள் அவ்வாறே ஒலிக்கப் பெறாமல் ஒருயிருடன் கூடியே ஒலிக்கப் பெறும். (**Tamilisation of Sanskrit words.**)

த்யான > தியானம
த்ரிமூர்த்தி > திரிமூர்த்தி } ( A vowel is developed before the consonants )

(iv) சில மெய்கள் மொழிமுதலில் வாராதபோது ஓர் உயிர் பெற்றே வழங்கும்

ரங்கன் > அரங்கன்
லக்ஷ்மி > இலக்குமி } ( An initial vowel is adapted before the consonants l & r )

(v) ஈர் உயிர்கள் சேர்ந்து வருகின்றபோது உடம்படு மெய் என்னொன்று தோன்றி அவற்றை இணைத்துக் காட்டும்.

நிலா + அழகு > நிலா வழகு—(Prevention of hiatus )
(வ)

(vi) மொழி முதலிலும் ஈற்றிலும் இரண்டு மூன்று மெய்கள் சேர்ந்து ஒலிக்கப் பெறுவதில்லை

Strength (Double or treble con onants at the beginning of the syllables and also at the end are altogether inadmissible)

(vii) தமிழினக்கண் சொல்லுக்கு ஈற்றில் 'போனம்', 'மருணம்' என்று னகர மகர ஒற்றுக்கள் இணைந்து வரும் ஆனால் மகர ஒலி தன்னளவில் குறைந்தொலிக்கும் எனத் தொல்காப்பியர் கூறுவர்

"செய்யுள் இறுதிப் போலி மொழிவயின்
னகார மகாரம் ஈரொற் றாகும."

"னகாரை முன்னர் மகாரம் குறுகும்"
—தொல் எழுத்து 51, 52

(viii) சொற்களின் இடையே மெய்யெழுத்துக்கள் மயங்கி வருதலைப் பற்றி இலக்கணங்கள் தெளிவாகக் காட்டும். இலக்கண நூலார் வேற்றுநிலை மெய்ம்மயக்கம் என்றும், உடனிலை மெய்ம்மயக்கம் என்றும் கூறுகின்ற பகுதிகள் நன்கு போற்றத் தக்கவை ய, ர, ழ எனும் மூன்று மெய்களோ ஈரொற்று உடனிலையாக வரும் எனக் கூறுதல் சிறந்த தமிழிலக்கண மரபாகும்.

"யரழ என்னும் மூன்றும் ஒற்றக
கசதப ஙஞநம ஈரொற் றாகும"

(தொல் எழுத்து 48)

சான்று : வேயங்குழல
ஆரப்பு
வாழ்க்கை

(1x) மொழி ஈற்றில எகரவுயிர் அளபெடையில மட்டும ஈற்றில வரும எனக் கூறுவதும ஈண்டு நினைவுகூரத் தக்கது

(எ-டு) 'ஏஎ இவளொருத்தி'

ஆங்கில மொழியினரும ஒலித்தற்கரிய கூட்டொலியை ஒலிக்காமல விட்டு விடுதலை நாம காணலாம know, knife, knit, gnat, gnaw என்ற சொற்களை ஒலிக்கும பொழுது முதல மெய்யினை அவர்கள ஒலிப்பதில்லையே! "The combination 'kn' as initial, was somewhat difficult for men's organ to utter .. ....the corruption went on gaining in popularity, until it became the rule of our speech to silence before the nasal in all words"[2] என்பார Whitney "The chief peculiarity of Dravidian syllabation is its extreme simplicity and dislike of compound or concurrent consonants and this peculiarity characterises Tamil, the earliest cultivated member of the family, in a more marked degree than any other Dravidian languages"[3] என்று Dr Caldwell திராவிடத்தின ஒலியசை முறைகதப புகழமாலை சூட்டுகின்றார போலும!

இவ்வாறு மொழிகளில "ஒலியசை முறையில் ஒழுங்கு முறைகள" வரையறை செய்யப் பெற்றாலும் காலப்போக்கில சில மாற்றங்கள் நிகழ்தலை நாம தவிர்த்தல இயலாது. திராவிட மொழிகளுக்குப் பொருந்தாத ஒலி அமைப்புகள் பிறமொழிச சொற்களினின்று தமிழில புகும்பொழுது மெய்களுக்கு இடையே உயிர புகுந்தோ, மெய்களில ஒன்று மறைந்தோ திரிந்தோ ஒலித்தற்கு எளியனவாகுதல நம் தமிழ மொழியின் சிறப்பான இலக்கணக் கோட்பாடு அன்றோ!

---

[2] W. D Whitney - Language and the Study of Language P 12

[3] Dr Caldwell - A Comparative Grammar of the Dravidian Languages P. 182

# 31 'ஆய்தம்'
# The 'āytam'.

தமிழ் எழுத்து முறையில் ஆய்த ஒலி என ஒன்று தனியாக அமைந்துள்ளது. இவ்வாய்தம் தனிப்பட்ட ஒன்றாகவே அமைந்துள்ளது. இவ்வொலியைப் பற்றிய பல்வேறு கருத்துக்கள் மொழியுலகில் அமைந்து வருதலை நாம் காண்கிறோம். ஒரு மொழியைப் பற்றி அம்மொழி அறிந்தோர் கூறுவதே பொருத்தமுடையதாக இருக்கப் பிறமொழி வல்லுநர் பலர் தத்தம் நிலைக்கேற்பக் கருத்துக்களைக் கூறுதல் இடம் பெறுகின்ற பொழுது உண்மை நிலையும் மறைக்கப்படுகின்றது. தமிழ் ஒலிகளைப் பற்றிச் சிறப்பாக ஆராய்ச்சி முறையிட்ட திரு. பா. வே. மாணிக்க நாயக்கர் அவர்கள் ஆய்த ஒலியைப் பற்றித் தம் கருத்துக்களைக் குறிப்பிட்டுள்ளார். ஆங்கில ஒலியின் உச்சரிப்பாகத் தமிழ் ஆய்தத்தை அவர் குறிப்பிடுவர். 'effect' என்ற ஆங்கிலச் சொல்லைத் தமிழில் அந்த உச்சரிப்போடு எழுதுகின்ற பொழுது 'எஃபெக்ட்' என்று எழுதுகின்றோம். 'zebra' என்ற ஆங்கிலச் சொல்லையும் தமிழில் 'சீஃப்ரா' என எழுதுவர். இவ்வாறு ஒலி நூலில் fricative 'F' ஆகவோ, spirant 'S' ஆகவோ, இஃது ஒலிக்கப்படுதலை நாம் காணலாம் (a sort of mystic conception).

தொல்காப்பியர் தமிழ் எழுத்துக்களைப் பற்றிக் குறிப்பிடுங்கால் இவ்வாய்த எழுத்தினை உயிராகவோ மெய்யாகவோ கருதாமல் தனி ஒலியாகவே கருதுகின்றார். உயிரெழுத்துக்களுக்கும், மெய்யெழுத்துக்களுக்கும் இடையே இவ்வாய்த ஒலியை வைக்கவும் இல்லை. பன்னிருயிர்க்கும், பதினெண் மெய்க்கும் அடுத்து இவ்வாய்தம் சார்பெழுத்துக்களுள் ஒன்றாக வைக்கப்பட்டுள்ளமையே அவர் காட்டும் இலக்கண முடிபு. தொல்காப்பியர் எழுத்ததிகாரத் தொடக்கத்தில் தமிழ் எழுத்துக்களைப் பற்றி எழுதுங்கால்,

> "அகர முதல்
> னகர இறுவாய் முப்பஃது என்ப" (தொல் எழுத்து 1)

எனக் காட்டுகின்றார். அன்றியும் தம் நூலுள் இவ்வாய்த ஒலி ஒலிக்கப்பெறும் நிலையைக் குறிப்பிடுங்கால்,

> "தத்தம் சார்பிற் பிறப்பொடு சிவணி
> ஒத்த காட்சியின் தம்மியல்பு இயலும்" (தொல். எழுத்து. 101)

எனக் கூறுவதால் இவ்வாய்தம் தன்னைச் சார்ந்த எழுத்தின் ஒலியாகவே ஒலிக்கும் என்பது தெரிய வருகிறது (The aytam takes the sound of the consonant in whose company it appears) சான்றாக, 'கஃசு' என்ற இடத்தில் ஆய்தம் இடையண்ண ஒலிச் (palatal) சாயலைப் பெறுகிறது பின் அண்ண ஒலியைச் (gutteral) சார்ந்து வருங்கால் இவ்வாய்தம் அவ்வொலியையும் பெறும் தொல்காப்பியார் கருத்தினை நன்கு நோக்கின் இவ்வாய்தம் தனிப்பட்ட ஒலிப்பு முறையை (independent phonological value) உடையதன்று எனத் தெளியலாம் திருக்குறளில் 'அஃதிலார்' என்ற சொல்லாட்சியைக் கொண்டு அதன்கண் மொழியில் காணப்பெறும் ஆய்த ஒலிக்கு மாற்றாக ககர ஒற்றினை ஆண்டு அமைக்குங்கால் அப்பொழுது இவ்வாய்தம் பின் அண்ண ஒலியையே பெறும் (அஃதிலார் —அக்திலார்) சென்னைப் பல்கலைக் கழகத்துத் தமிழ்அகராதியைத் தொகுத்தோர் இவ்வாய்த ஒலி உயிராகவோ, மெய்யாகவோ ஒலிக்கப் பெறும் எனக் குறிப்பிட்டுள்ளமை சிந்தனைக்கு உரியதாகவே அமைந்துள்ளது தொல்காப்பியர் காட்டும் ஆய்த ஒலி பற்றிய நூற்பாவை ஓரளவு துணையாகக் கொண்டு இவ்வாய்தப் புள்ளி மெய்யாக ஒலிக்கப் பெறலாம் என்று கொள்வதற்காவது சிறிது இடமுண்டு. அதற்கு மேலைக் குறட்சான்றும் ஓரளவு துணை செய்யும்.

இடைக்கால இலக்கணமாகிய நேமிநாதம் இவ்வாய்த எழுத்தை முதன்மை ஒலியாகவே (primary sound) கருதுகின்றது நன்னூலும், வீரசோழியமும் இவ்வாய்த எழுத்திற்குப் பிறப்பிடம் காட்டுங்கால், "ஆய்தம் அங்காப்புடைய; இடந்தலையாகும்" எனக் கூறுகின்றன மொழியியல் அறிஞர் Dr. Caldwell அவர்களோ இவ்வாய்த எழுத்தை மிடற்றில் பிறந்த எழுத்தாகவே கருதுகின்றார். இவ்வாறு அவர் கருதுமாறு ஒற்றொலியாகவும், இடைக்கால இலக்கண நூலார் காட்டுமாறு உயிராகவும் இவ்வாய்தத்தைக் கொள்ளுதல் பெருவியப்பே

வடமொழிவாணர் தங்கள் மொழியில் 'ஹ' (aspirate sound) ஒலிக்கு நேராக இவ்வாய்தத்தைக் கொள்வர் ஆனால், அக்கருத்துப் பிழைபட்டதே வடமொழி 'ஹ' என்ற ஒலிக்கும் தமிழ் ஆய்த ஒலிக்கும் இடையே வேறுபாடு உள்ளது வடமொழி 'ஹ' என்ற ஒலி ஈரெழுத்துக்களுக்கு முன்னதாக வரும் (Sanskrit 'h' can come only before two letters 'k' and 'p') அதிலும் சிறப்பாக k, p என்ற எழுத்துக்களை வருமொழியில் கொள்ள நிலைமொழி ஈற்றில் 'h' என்பது வரும்.

சான்று

kah – karoti
Sanskrit.
kah – palati

ஆனால், தமிழ்மொழியில் ஆய்தம் தொல்காப்பியர் கருத்துப்படித் தனிக் குறிலைச் சார்ந்து மொழியிடையில் குற்றியலுகரத்திற்கு ஏற்றயல மொழியாக வரும்

"குறியதன் முன்னர் ஆய்தப் புள்ளி
உயிரொடு புணர்ந்த வல்லாறன் மிசைத்தே"
(தொல் எழுத்து 38)

என்பது தொல்காப்பிய இலக்கணம் இதனால் வலியேறிய உயிர் ஆறன் முன்னே ஆய்தம் வருதல் வெளிப்படை. எனவே, வடமொழி 'ஹ' என்பது வேறு. தமிழ்மொழி 'ஆய்தம்' வேறு

நம் மொழியில் 'அவ்+கடிய>அஃகடிய' என்பதில் ஆய்தம் மிடற்றுப் பிறந்த ஒலியாக அமைகிறது நம் இலக்கண விதிகளை ஆராயுங்கால் இவ்வாய்தம் மேலே காட்டியவாறு தொடர்மொழியில் வருங்கால் சில மாற்றங்களைப் பெறும் முள்+தீது>முஃடீது (அ) முட்டீது' எனவும், கல்+ தீது>கஃறீது (அ) கற்றீது எனவும் வருதலைக் காணுங்கால் சில உண்மைகள் தெரியவரும் இவ்விடங்களில் ஆய்தம் தன் சார்பொலியைச் சார்ந்து விளங்குகிறது Dr Caldwell கொள்கைப்படி ஆய்தம் மிடற்றில் பிறந்த ஒலியாகக் கருதப்படுமாயின், மேலைச் சான்றுகளில் காணுகின்ற வகையில் இடையண்ண ஒலியாகவோ (Palatal), பல்லின ஒலியாகவோ (Dental) கருதப்படுதற்கு இல்லை எஃகு, அஃகு என்ற இடங்களில் அவர் கொள்கை ஏற்றுக் கொள்ளப்படும். (If it is a gutteral sound as is believed by Dr Caldwell, it must be capable of being replaced by a gutteral ) ஆனால், அதே வகையில் 'முக்டீது,, 'கக்றீது' என அமைப்பதற்கு நம் இலக்கணமோ எத்துணையும் இடந்தரவில்லை ஆகவே, இவ்வாய்த ஒலியினைத் தனி ஒலியாகவும், தனிப் பிறப்பு உடையதாகவும் கொள்ளாமல் சார்பொலியாகக் கொண்டு அமைத்தலே தனிச் சிறப்பு உடையதாகும். (The aytam is not a phoneme).

பேராசிரியர் Dr தெ பொ. மீனுட்சிசுந்தரனுர் அவர்கள் இவ்வாய்தம் பற்றிக் குறிப்பிடும் கருத்துக்கள் நம்முடைய ஒலி யியல் கருத்துக்குப் பெருந்துணை செய்யும்[1] இதனைத் தனித்த ஓர் எழுத்தாக முற்காலத்தில் கருதாமல் சார்பெழுத்து என்றே தொல்காப்பியர் முதலானேர் கொண்டனர் சார்பெழுத்து என னும் பொதுவான பெயர் குற்றியலுகரம், குற்றியலிகரம், ஆய்தம் என்ற மூன்றற்கும் வழங்குவதால், ஆய்தம் என்பதற்குச் சிறப்புப் பொருள் இருத்தல் வேண்டும் என்பர். தொல். செய்யுளியலில் வல்லோசை மிகுந்து வரும் நயத்தை 'வல்லிசை வண்ணம்' (தொல் பொருள் 528) என்றும், மெல்லோசை மிகுந்து வரும் நயத்தை 'மெல்லிசை வண்ணம்' (தொல் பொருள் 529) என்றும் வழங் குதல் போல, ஆய்த எழுத்து மிக்கு வரும் பாட்டோசை வண்ணத்தை 'நலிபு வண்ணம்' (தொல். பொருள். 535) என வழங்குதல் மரபு தொல் சொல்லதிகாரம் 330–இல் "ஒய்தல் ஆய்தல் ..உள்ளதன நுணுக்கம்"—எனக் காணப்படுவதால், ஆய்தம் என்பதற்கு 'உள்ளது நுணுகி நலிதல்' எனப் பொருள் கொள்ளலாம்

"ஆய்தமு மொற்றெனப் பெற்றசை யாகுமென்
ருேதி ஞருள ராகவு மொண்டமிழ
நாத ராயவர் நாநலி போசையிற்
கேது வென்றெடுத் தோதினு ரென்பதுவே"

என்று யாப்பருங்கல விருத்தி சூத்திரம் 3–இன் உரையிற் கூறப்படுவதையும் நோக்குக. 'அக்கடிய > அஃகடிய;' 'கற்றீது > கஃறீது', 'முட்டீது > முஃடீது' என வருவன வற்றில் முன்னைய வடிவங்கள் வலித்த வடிவங்களாம். பின் னைய வடிவங்கள் நலிந்த வடிவங்களாக இருத்தல் ஆய்தம் உண்மையால் பெறப்படும். பிற சார்பெழுத்துக்கள் போல் இவ் வாய்தமும் தனிமொழி, தொடர்மொழி ஆகிய இவற்றில் வரும் எனத் தொல்காப்பியர் கூறுதலைத் துணையாகக் கொண்டும், ஆய்தம் பற்றிய அவர் கருத்துக்களைச் சிறப்பாகப் போற்றி யும் காணுங்கால் நமக்கு அக்கால நிலை நன்கு தெரிய வரும். நெட்டெழுத்து நீட்டியும், எடுத்தும் ஓதப் பெறுவதால், நெட் டெழுத்தின் பின் ஆய்தம் நின்று எத்தகைய மாற்றமும் பெற இயலுவதில்லை இதனுல் யாண்டும் குறிலின் பின்னரே ஆய்தம் வருதலைக் காணக் வல்லெழுத்தினையே உரசெழுத்தாக மாற்றி

---

[1] Dr. தெ. பொ. மீனுட்சிசுந்தரனுர்—கலைக்களஞ்சியம்—கட்டுரை—Vol. II P. 758–760.

வருதலின், ஆயதம என்றும வலலெழுததின முன்னரே வரக காணகின்றோம (தொல எழுதது. 38)

**வரிவடிவம் -** ஆயதம் அடுபபுககல போனறு [ஃ] மூனறு வடிவாக எழுதபபடுவது இனறைய வழககம "ஆயதம என்ற முபபாற புளளியும்" என்பது தொலகாபபியம 8-ஆம நூற்றாணடைச சாரநத நாதிவாமனது காசாககுடிச செப பேட்டில 'வெஃகா' எனற சொலலில வரும ஆயதததிறகு மேலும கீழும புளளியும, இடையே கோடும வடிவாக அமைந துளளன [÷] (S I A A Vol II No 73 Plate No. XV Line 115 opposite page 352) வரதுணமகாராசரின திருச செநதூர வடடெழுததுக கல்வெட்டிலும 'அ∴கம' எனற சொலலில வரும ஆயதம இவவாறு அமைநதுளளமையைக காணலாம [—] (**Epigraphia Indica Vol 21 Plate- Line 35 opposite p. 110**) எனவே கோல எழுததிலும, வடடெழுததிலும இதனை ஒரே வடிவமாகக காணகிறோம என்று Dr தெ பொ மீனாட்சிசுநதரனா அவாகள குறிபபிடுவா ஆயதததினைத தனி எழுததாக எழுதும வழககததினைத தொலகாபபியா மறுப பதால, அவவழககம அவா காலததிலேயே இருநததெனறு அறியலாம அதனை மெய எனக கொணடு, புளளி, ஒற்று எனறே தமிழர் வழஙகினா எனபதனை அறிக



# 32. 'மொழி முதல் இறுதி எழுத்துக்கள்'. The Initial and the Final Letters.

தொன்மைத் தொல்காப்பியம் தமிழ் மொழி நிலையைத் தழுவி எழுத்து, சொல், பொருள் நெறிகளை மேற்கொண்டு மொழியிலக்கணத்தை மிகச் செவ்வையாக வடித்துக் காட்டியுள்ளது. எழுத்து இலக்கணத்துள் மொழிமரபு என்வொன்று நிலைக்க வேண்டி மொழியின் முதலிலும், ஈற்றிலும் வரக்கூடிய எழுத்துக்களை நிரல்படக் காட்டியுள்ளது. அதன் முதல் உரைகாரராகிய இளம்பூரணர் தம் அறிவுக்கெட்டிய வகையில் உரை விளக்கம் கண்டு நூலை அழுத்தப்படுத்தியுள்ளார். தொல்காப்பியர் இலக்கணத்தையும், இளம்பூரணர் உரைநலத்தையும் சிறந்த துணையாகக் கொண்டு வழிநூலாம் நன்னூல் தோன்றியது. நன்னூலார் தம் காலத்து இலக்கண நெறிகளையும் இலக்கியங்களை வாயிலாகத் தெளிந்து அவற்றை இணைத்துக் கூறியுள்ளார். இவ்விரு நூல்களையும் தோன்றாத் துணையாகக் கொண்டு முகிழ்த்ததே மொழியியல் எனப்பெறும் இப் புதுமைத் துறையாம். இதில் எழுத்திலக்கணங்கள் மட்டுமல்லாமல் பேச்சொலிகளும் (Speech sounds) ஆராயப்படவே, ஒரு சில மாற்றங்கள் காணப்படுகின்றன. அவற்றை நிரலே காண்போம்.

## மொழி முதல் எழுத்துக்கள் - Initial sounds-letters

தொல்காப்பிய எழுத்ததிகார மொழி மரபில் "பன்னீருயிரும் மொழி முதலாகும்" (29), "உயிர் மெய்யல்லன மொழி முதலாகா" (60) என இரு நூற்பாக்களால் பொது விதியை வகுத்துப் பின் சிறப்பு விதிகளால் விளக்குகின்றார். நன்னூலார், "பன்னீருயிரும் மொழி முதலாகும்" (எழுத்தியல்–102) எனக் கூறுகின்றார்.

தொல் முதனிலை எழுத்துக்கள்:-

| | | |
|---|---|---|
| (1) | பன்னீருயிர் மொழி முதல் ... ... ... | 12 |
| (2) | கதநபம × பன்னீருயிர் (5×12) ... | 60 |
| (3) | சகரக்கிளவி × அஐ ஔ நீங்கலாக (1×9) | 9 |
| (4) | வகரம × உ ஊ ஒ ஓ நீங்கலாக 1×8) | 8 |
| (5) | ஞகரம × ஆ எ ஒ... ... ... ... ... ... ... (1×3) | 3 |
| (6) | யகரம × ஆ ... ... ... ... ... ... ... ... (1×1) | 1 |
| (7) | மொழி முதல் குற்றுகரம் 'நு' (நுந்தை) | 1 |
| | | 94 |

தொலகாபபிய நூறபாககள மேலேத தன்மையை நனி யுணாததும்

1. 'பன்னீ ருயிநம மொழிமுத லாகும' (எழுததது 59)

2 'கதந பமவெனும ஆவைந தெழுததும
எல்லா உயிரொடுஞ செலலுமாா முதலே'. ( 61)

3 'சகரக கிளவியும அவறறோ ரறறே
அஐஔ வெனும மூனறலங கடையே' ( ,, 62)

4 'உஊ ஒஓ எனனும நான்குயிா
வவென எழுததொடு வருதல இலலே' ( ,, 63)

5. 'ஆஎ
ஒவெனும மூவுயிா ஞகாரத துரிய' ( ,, 64)

6. 'ஆவோ டலலது யகர முதலாது' ( ,, 65)

7 'குறறிய லுகரம முறைபபெயா மருஙகின
ஒறறிய நகரமிசை நகரமொடு முதலும.' ( 67)

நன்னூலாா தங கால மாறறஙகடகு ஏறபச் சோததுக கூறியுளளாா

'பன்னீ ருயிங கசதந பமவய
ஞஙஎ ரைநதுயிா மெயயும மொழிமுதல' (102) என்றும்,

'சுட்டியா எகர வினாவழி அவவை
ஒட்டி ஙவ்வும்முதலா குமமே' (106)–என்றும

கூறுவா தொலகாபபியா கூறிய ஒன்பதினொடு ஙகரம சோநது பததும மொழி முதலாகும.

'ஆவோ டலலது யகர முதலாது' (65) எனத தொல்காப பியா விதிவகுகக, நன்னூலாா

'அஆ உஊ ஓஔ யமமுதல' (104) என்று கூறுவா எஞசியவற்றில் யாதொரு மாறறமும காணபபெறவிலலே

**மொழியிறுதி எழுத்துக்கள் :- Final sounds**

தொலகாபபியா உயிா பன்னிரணடனுள ஔகாரம நீஙகிய பதினொனறும் மொழியிறுதியாகும எனக கூறியுள்ளார். 'உயிா ஔ எஞசிய இறுதியாகும்' (69) இவறறுள சில ஒலிகள் ஒரு சில மெயகளுடன சோநது மொழிககு ஈறுகும் என்றும, சில ஈறுகமாட்டா என்றும் கட்டுபபாடு (restriction) செய்கின்றாா. அவறறை முறைப்படி காண்போம்.

| உயிர் | ✽ ந × | ப | ✽ ம × | ✽ ய × | ✽ ர × |
|---|---|---|---|---|---|
| அ ✽ × | ✽ × | ✽ × | ✽ × | ✽ × | ✽ × |
| ஆ ✽ × | ✽ × | ✽ × | ✽ × | ✽ × | ✽ × |
| இ ✽ × | ✽ × | ✽ × | ✽ × | ✽ × | ✽ × |
| ஈ ✽ × | ✽ × | ✽ × | ✽ × | ✽ × | ✽ × |
| உ ✽ × | | ✽ × | ✽ × | ✽ × | ✽ × |
| ஊ ✽ × | | ✽ × | ✽ × | ✽ × | ✽ × |
| எ ✽ × | | | | | |
| ஏ ✽ × | ✽ × | ✽ × | ✽ × | ✽ × | ✽ × |
| ஐ ✽ × | ✽ × | ✽ × | ✽ × | ✽ × | ✽ × |
| ஒ ✽ × | ✽ × | | | | |
| ஓ ✽ × | ✽ × | ✽ × | ✽ × | ✽ × | ✽ × |
| ஔ ✽ × | | | | | |
| 12 | 8+1 | 9 | 9+1 | 9+1 | 9+1 |
| | நனனூல | | | தொல். 172—ந | |

## ஜூரல்.

| ❀ ல × | ❀ ர × | ❀ ழ × | ❀ ள × | ற | ❀ ன × |
|---|---|---|---|---|---|
| ❀ × | ❀ × | ❀ × | ❀ × | ❀ × | ❀ × |
| ❀ × | ❀ × | ❀ × | ❀ × | ❀ × | × |
| ❀ × | ❀ × | ❀ × | ❀ × | ❀ × | ❀ × |
| ❀ × | ❀ × | ❀ × | ❀ × | ❀ × | ❀ × |
| ❀ × | | ❀ × | ❀ × | ❀ × | ❀ × |
| ❀ × | | ❀ × | ❀ × | ❀ × | ❀ × |
| | | | | | |
| ❀ × | ❀ × | ❀ × | ❀ × | ❀ × | ❀ × |
| ❀ × | ❀ × | ❀ × | ❀ × | ❀ × | ❀ × |
| | | | | | |
| ❀ × | ❀ × | ❀ × | ❀ × | ❀ × | ❀ × |
| | ❀ × | | | | |
| 9+1 | 8+1 | 9+1 | 9+1 | 9 | 9+1 |

ஈஜூரல 174

(1) உ ஊ இரண்டும் நகர, வகர மெய்களோடு ஈருகா

'உ ஊ கார நவவொடு நவிலா' – (தொல் எழுத்து 74)

(2) எகரம மெய்யுடன ஈருகாது

'எ என வருமுயிர் மெய்யீருகாது'– ( ” ” 71)

(3) ஏகார, ஒகாரங்கள ஞகரமெய்யுடன் ஈருகா

'ஏஓ என்னும உயிர ஞகாரத திலலை' ( ,, ,, 73)

(4) ஒகரம நகர மெய்யுடன் சேர்ந்து ஈருகும.

நொ-துன்பப்படு.

'ஒவவும அற்றே நவவலங கடையே' ( ” ” 72)

(5) ஒளகாரம ககர, வகரத்தோடு இயைந்தவழி ஈருகும்

'கவவோ டியையின் ஒளவு மாகும' ( ” ” 70)

இறுதியில வரும் என்ற உயிர்களுள மிகச்சுறைவாக வழங்குகின்ற ஈறுகளை (low frequency) எண்ணிக்கையால குறிப்பிட்டிருப்பது சாலச் சிறப்புடைத்தாம

(1) உசசகாரம் இருமொழிக குரித்து – உசு, முசு

'உசச காரம இருமொழிக குரித்தே' –(தொல் எழுத்து 75)

(2) உப்பகாரம ஒருமொழிக குரித்து – தபு

'உப்ப காரம் ஒன்றென மொழிப
இருவயின் நிலையும பொருட்டா குமமே' – (” ” 76)

அடுத்து, அவர் மெய்யீறு பற்றி விளக்குகின்ருர.

'ஞணநம னயரல வழள என்னும
அப்பதி னொன்றே புள்ளி யிறுதி.' (தொல் 78)

இவற்றுள சில ஒற்றுக்கள மொழிக்கு ஈருகும சிறப்பினை எண்ணிக்கையால மட்டும உணர்த்துகின்ருர அவையாவன.—

(1) மேலே கூறிய உப்பகாரம போன்று ஞகர வொற்று ஒரு மொழிக்குரித்து.– 'உரிஞ'

'உபப காரமொடு ஞகாரையும் அற்றே
அப்பொருள் இரட்டா திவணை யான' (80)

(2) மேலே கூறிய உச்சகாரம் போன்று நகர வொற்று இரு மொழிக்கீருகும்.– 'பொருந்', 'வெரிந'.

'உச்ச காரமொடு நகாரஞ் சிவணும்'. (79)

(3) வகரவொற்று நான்மொழி யீற்றது – 'அவ், இவ், உவ், தெவ்'.

'வகரக் கிளவி நான்மொழி யீற்றது' (81)

இனி, நன்னூலார் இவ்வாறு தொல்காப்பியர் விரித்துக் கூறியவற்றை ஒரே நூற்பாவில் தொகுத்துக் கூறியுள்ளார். தொல்காப்பியரைப் போன்று தனிப்பட்ட குறைந்த சொல்லாட்சிகளை நன்னூல் காட்டுமாறு காணோம்.

'ஆவிஞண நமன யரலவ ழளமெய்
சாயு முகரம் நாலாறு மீறே' (107)–என்பர்

இன்றைய மொழியியலில் நாம் காணும் சான்றுகளைத் தும் மேலே கண்ட இலக்கண நெறிகட்கு மாறுபட்டுத் தோன்றுவதில்லை. ஒலியசை முறை (syllabation) என்ற பகுதியில் காணப்பெற்ற விதிமுறைகள் மிக ஒழுங்காகப் பின் பற்றப்பட்டு வருகின்றன. தனிப்பட்ட எழுத்து வடிவம் நீங்கலாகப் பேச்சொலி இயக்கம் என்ற ஒன்று இப்பகுதியில் ஆராயப்படுவதால் சில நுண்ணிய மாற்றங்கள் மட்டும் காணப்படுதலை நாம் தவிர்க்க இயலாது சான்றாக, க, ச, த, ப என்னும் வல்லெழுத்துக்கள் (plosives) மொழி முதலில் வருங்கால், ஒலியன்களாகிய (phonemes) இவை மாற்றொலியன்களையும் (allophones) ஒன்றாகச் சேர்த்து மொழி முதலில் ஒலியன்களாகவே அமைய நாம் அவற்றை வழங்குகின்றோம்

பாவம் – pāvam, பாவம் – bāvam என்ற இரு சொற்களில் காணப்பெறும் பகரம் (p and b) தம் நிலையால் வேறுபட்ட பொருளைத் தருவதால் 'b' என்பது பகரத்தின் (p) மாற்றொலியனாகக் கருதப் பெறாமல் தனிப்பட்ட ஒலியனாகவே (distinct phoneme) ஆங்கு அமைந்துள்ளது. இத்தகைய முறைகள் தாம் மொழியியலில் காணப்பெறும் காலத்திற்கேற்ற மாற்றங்களாக இருத்தலைக் காணலாம். ஆகவே, இலக்கண நெறிகளும், மொழியியல் மரபுகளும் தம்முள் வேறுபாடற்று ஒன்றி நிற்றலே மொழி மாட்சியாம்.



# 33. 'சார்பொலிகள்'
# Dependent Sounds.

ஒல்காப் புகழ்த் தொல்காப்பியரும் நன்னூலாரும் எழுத்துக்களை முதல், சார்பு என இரண்டாகப் பகுத்தனர். அணுத்திரள் ஒலியாக எழ அதனால் எழுத்துத் தோன்றி அவ்வெழுத்து முதல், சார்பென இருவகைப்படும் 'எழுதப்படுதலின் எழுத்து' (Letter) என்று யாப்பருங்கலவிருத்தி உரைக்கும். ஆனால், உரையாசிரியர்கள் எழுத்து என்பதற்கு ஓசை அல்லது ஒலி எனப் பொருள் கொண்டனர். தொல்காப்பியர் எழுத்ததிகார நூற்பா ஆறினில், "கூட்டியெழூஉதல்" எனக் குறிப்பிடுவர். 'எழு' என்ற அடிச்சொல்லை (Verbal root) எழுப்புதல் அல்லது இசைத்தல் என்ற பொருளில் அவர் பயன்படுத்தியுள்ளார். நன்னூலாரும் "அணுத்திரள் ஒலி" (நூ 58) என விளக்குவர். ஆகவே, ஒலியடிப்படையில் முதலொலி (Primary sound), சார்பொலி (Dependent sound) எனக் கொள்ளுதல் இலக்கண ஆசிரியர்களின் கருத்தாம். இன்றைய மொழியியலார் ஒரு மொழியில் விளங்கும் ஒலிகளை (Phones) அடியொற்றி ஒலியன் (Phoneme), ஒலியியல் (Phonetics) எனக் குறிப்பிடுதலைக் காண்க.

> "எழுத்தெனப் படுப
> அகர முதல
> னகர விறுவாய் முப்பஃ தென்ப
> சார்ந்துவரன் மரபின் மூன்றலங் கடையே" (எழுத்து 1)

என்றும்,

> "அவைதாம்
> குற்றிய லிகரம் குற்றிய லுகரம்
> ஆய்தம் என்ற
> முப்பாற் புள்ளியும் எழுத்தோ ரன்ன"–என்றும் ( " 2)

தொல்காப்பியர் இருவகைப் பாகுபாடுகளை முதற்கண் எடுத்துக் கூறியுள்ளார். நூன்மரபில் முதலெழுத்துக்களை எடுத்துக் காட்டிய பின் மொழிமரபில் சார்பெழுத்துக்களைப் பற்றிக் கூறுங்கால், 'சார்ந்து வரும் மரபினையுடையன' என்றும், 'தமக்கு இயல்பில' என்றும் இரு பண்புகளைக் கூறுவதால், சார்ந்து வாராமையும், தமக்கியல்புடைமையும் முதலெழுத்துக்களின் இருபண்புகள் எனக் கொள்ளலாம். உயிர் பன்னிரண்டும், மெய் பதினெட்டும் நந்தமிழின் முதல் ஒலிகளாக

(primary sounds) விளங்குகின்றன. ஆனால், இவையனைத்தும ஒலியனகளா (phonemes) என்பது ஆயவுககுரியது. உயிா வரிசையில நாம கருத்து வேறுபாடு கொளள இடமிலலை மெய்யொலிகளுள ககரததிறகு இனமாகிய ஙகரம ஒலியனா என ஆராய்தல் வேணடும தொலகாபபியா காலத்தில ஙகரவொலி இருபபினும் அதனை ஒலியனாகக கொளளவில்லை ஆனால, நன்னூலாா ஙகரததை மொழி முதலில் வரும எழுததாகக கொணடு நூறபா வகுததுள்ளாா இனி, இநத ஙகரவொலி தனி ஒலியனதானா என ஈணடுக காணபது பொருததமான தோன்றும்

பன்னீருயிருடனும், க த ந ப ம என்னும ஐநது ஒறறுக கள சோநது மொழி முதற்கண் வரும என்பா தொலகாபபியா

"க த ந ப ம எனும ஆவைந தெழுததும
எல்லா உயிரொடுஞ் செலலுமாா முதலே" (61) – எனக

கூறுவதில 'ங' எனும ஒலி மொழி முதலில வருவதாக அவா குறிபபிடாமை காணக ஆனால் நனனூலார்,

"பன்னீ ருயிருங கசதந பமவய
ஞஙவீ ரைநதுயிா மெயயு மொழிமுதல்" (102)

என ஙகரததையும பிற மெயகளோடு சோததுக கூறியுளளாா இதனையொட்டிச சிறபபு விதி வகுககுங்கால,

"சுட்டியா வெகர வினாவழி யவவை
ஒட்டி ஙவவு முதலா குமமே" (106) – எனககூறி,

அதற்குச சான்றாக, 'அஙஙனம', 'இஙஙனம', 'உஙஙனம', 'எஙஙனம', 'யாஙஙனம' என்பவற்றைக காட்டுவர் உரையாசிரியா 'ஙனம' என்பது இடததையும தனமையையும உணாததும் பல பொருள ஒரு சொல என்று விளககங்கூறுவா, இழிவுச் சிறபபு உமமையால் ஙவ்வும ஒருவிதததிலே முதலாகும் என்ற ஒரு குறிபபு உரையில் காணபபடுகின்றது.

தொலகாபபியததை நோககுங்கால் ஙகரவொலி இவ்வாறு வருமா என்பது தெரியவில்லை. ஙகரம் வருமிடமெல்லாம் அதனையடுத்துக ககரவொலி வருகின்றது. ககரம வருமிடத்தில் ஙகரம வருவதில்லை. ஆதலின், ஙகரமும் ஙகரமும் துணைநிலை வழககில அமைநதுள்ளன என்பர் மொழியியலார். 'ங' என்பது ஒரு தனிபபட்ட ஒலியனாகக (distinct phoneme) கருதப்படாமல் ககரவொலியின் மாற்றொலியாகவே கொள்ளபபெறும். "It is only an allophone of the velar plosive /k/" – என்பது மொழியியல கோட்பாடாம.

'அங்கம்', 'சங்கம்', 'கங்குல்', 'பாங்கு' 'தங்குதல்' .. என இவ்வாறு சொற்கள் உருவாகும்போதெல்லாம் ஙகரவொலியின் சூழ்நிலையை நாம் நன்குணரலாம். இதனைத் தனிப்பட்ட ஒலியனாகக் கொள்ளாமைக்குக் கீழ்வரும் காரணங்களை எடுத்துக் காட்டுவர்.

(i) 'ங'கரவொலி மொழிமுதலில் வருவதற்குரிய ஒலி எளிமையைக் கொள்ளாமை.

(ii) இவ்வொலி தனிமொழியின்கண் இடையே தான் வரும். அவ்வாறு வருங்கால் அதனைச் சார்ந்து ககரவொலி யன்றி வேறு வாராமை.

(iii) 'ஙனம்' என்பதைப் போன்று மொழி முதலில் அதனை உச்சரித்தல் இயலாத ஓர் அமைப்பே.

(iv) தொல்காப்பியர் உப்பகாரம், உச்சகாரம் என்றும், வெரிந், பொருந், உரிஞ் என்றும் மிகக் குறைவாகப் பயிற்சியில் வரும் வடிவங்களை உடைய சொற்களை வரையறுத்துக் கூறுவதில் தவறவேயில்லை. அவ்வாறிருக்க 'ஙனம்' என்ற சொல் வழக்குப் பயிற்சியில் இருந்திருப்பின் அதனைக் கூறாதொழிவாரோ?

(v) தனிமொழியில் ககரத்திற்கு முன் ஙகரம் வருதல் போன்று தொடர் மொழிக்கண்ணும் வருதலைக் காணக.

(எ.டு) நாம் + கள் > நாங்கள்
நீம் + கள் > நீங்கள்
தாம் + கள் > தாங்கள்

என மகரம் ககரம் வரின் ஙகரமாக மாறுதல் அறிக.

அ + ஙனம் > அங்ஙனம்
இ + ஙனம் > இங்ஙனம்
எனச் சொற்கள் புணருங்கால்,

சுட்டுக்களையடுத்து ஙகரவொற்றே வருதலைக் காண்கின்றோம். ஆனால், உச்சரிக்குங்கால், அங்கனம், இங்கனம் என்று ஙகரத்திற்கு மாறாகக் ககரவொலியினைக் கூட்டிச் சொல்கின்றோம். இவ்வாறு ஓரினமாகும் முறை (assimilation) மாறிக் ககரவொலியே ஆங்கு அமைதல் கூடுமாதலால் அதனைத் தனி ஒலியனாகவோ, மொழி முதலொலியாகவோ கொள்வதற்கில்லை. இதனால், அதனைக் ககரத்தின் மாற்றொலி எனக் கூறுவது பொருத்த

மாகத் தோன்றுகிறது. ஆகவே, மெய்வரிசையில ஙகரவொலி சூழலைச சாாநது வருகினற ஒரு நிலையை நாம உலக வழக கிடையே நனகு காணமுடிகின்றது

தொலகாபபியர் சாாபொலிககுக கூறிய இருபணபுகள சாாநது வருதலும, தமககியலபு இன்மையுமாம

"சாாநதுவரி னல்லது தமககியல பிலவெனத்
தோநது வெளிபபடுதத ஏனை மூன்றும்
ததம் சார்பிற பிறபபொடு சிவணி
ஒத்த காடசியில் தமமியல் பியலும"
(தொல. எழுதது. 101)

என்பது தொலகாபபியம் ஒரு குறிபபிடட சூழலில (environment), ஒரு குறிப்பிட்ட இடத்தில (position) சாாபொலிகள் வரும்[1] ஆகவே, ஒரு குறிபபிடட சூழநிலையில வருவதே சாா பொலியின் தனமை எனபது வெளிபபடை இளமபூரணா, "தமககெனத் தாமே வரும இயலபில" என்றும், நசசினாக கினியர் "தமககெனத தோன்றுதறகுரிய ஓரியல்பில" எனறும, சிவஞான முனிவா "தனித்தியஙகும் இயலபு தமககில" என்றும கூறியுளளமையை நோககுக.

குறறியலிகரம, குறறியலுகரம், ஆயதம ஆகிய மூன்றும் மேலே கூறியவாறு குறிபபிடட இடஙகளில முதலெழுததுக களைச சாாநது வருகின்ற அமைபபால சாாபொலிகள எனும தகுதியைப பெறறன

**(1) குற்றியலிகரம் :-**

தொல்காபபியா,

"குற்றிய லிகர நிற்றல வேணடும
யாவென் சினைமிசை யுரையசைக கிளவிக
காவயின வரூஉம மகரம ஊாநதே" (34)

என நூற்பா வகுத்து ஒருமொழிக குறறியலுகரததை விளககுவர்

"கேணமியா" என்ற சொலலில மகர மெயயின் மேல ஏறி வநத இகரம குறுகியொலிததலைக காட்டுவா. நாகு+யாது> நாகியாது, வரகு+யாது>வரகியாது எனக குறறியலுகரஙகள

[1] Dr செ. வை சணமுகம — எழுத்ததிகார ஆராய்சசியும, மொழியியலும.

யகரம் வர இகரமாக மாறிக் குறுகி ஒலித்தலைப் புணர்மொழித் தன்மைக்குச் சான்றாகக் காட்டுவர்.

> "புணரியல் நிலையிடைக் குறுகலும் உரித்தே
> உணரக் கூறின் முன்னர்த் தோன்றும்". (35)

யகரம் இடமாக உகரஞ் சேர்ந்த வல்லொற்றுப் பற்றுக்கோடாக அமைகின்றது

(2) **குற்றியலுகரம்:-** நம் மொழியின் மிக நுண்ணிய ஒலிக்கூறு குற்றியலுகரமாம். தொல்காப்பியர் எழுத்ததிகாரத்தில் குற்றியலுகரப் புணரியல் எனத் தனியே ஓரியல் வகுத்துள்ளமையைக் காணக. ஒருமொழிக் குற்றியலுகரம்,

> "நெட்டெழுத் திம்பருந் தொடர்மொழி யீற்றுங்
> குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே" (36)—வரும்

(எ-டு) நாடு, பல்கு, எஃகு முதலியன.

புணர்மொழிக் குற்றியலுகரம்,

> "இடைப்படிற் குறுகும் இடனுமா ருண்டே
> கடப்பா டறிந்த புணரிய லான" (37)—என வரும்.

(எ-டு) செக்குக் கணை, சுக்குக் கொடு.

இவ்வாறு வல்லெழுத்துப் பற்றுக்கோடாக மொழியீற்றில் இச்சார்பொலி வருதலைத் தொல்காப்பியர் காட்டுவர்.

(3) **ஆய்தம்:-** தனிக் குறிலைச் சார்ந்து ஈற்றில் குற்றியலுகரம் வர, இடையே ஆய்தவொலி சார்பொலியாக வரும்

> "குறியதன் முன்னர் ஆய்தப் புள்ளி
> உயிரொடு புணர்ந்தவல் லாறன் மிசைத்தே" (38)

என நூற்பா காட்டி, எஃகு, அஃது என்று சான்றுகள் காட்டுவர். இவ்வாறே புணர்மொழிக் கண்ணும் கஃறிது, முஃடீது என ஆய்தம் சார்ந்து வருதலை,

"ஈறியல் மருங்கினும் இசைமை தோன்றும்" (39) என்று தொல்காப்பியம் உணர்த்தும். இடத்தைச் சூழ்நிலையாகவும், சார்பொலிகளுக்கு அடுத்து நிற்கும் ஒலியினைப் பற்றுக்கோடாகவும் காட்டிச் சார்பொலிகளை இவ்வாறு வகைப்படுத்துதல் தொல்காப்பிய நெறியாம்.

நன்னூலார், தொல்காப்பியர் காட்டிய சார்பொலிகளை ஒட்டி உயிர்மெய், அளபெடை முதலியவற்றையும் சேர்த்துச் சார்பு எழுத்துக்களைப் பத்தாகக் காட்டுவர்.

"உயிர்மெய் யாய்த முயிரள பொற்றள
பஃகிய இஉ ஐஔ மஃகான்
தனிநிலை பத்துஞ் சார்பெழுத் தாகும்". (60)

இதனைத் தொடர்ந்து இவற்றின் விரியினையும் அவர் காட்டுவர்.

"உயிர்மெய் யிரட்டுநூற் றெட்டுய ராய்தம்
எட்டுயி ரளபெழு மூன்றொற் றளபெடை
ஆறே ழஃகு மிம்முப் பானேழ்
உகர மாறா றைகான் மூன்றே
ஔகா னொன்றே மஃகான் மூன்றே
ஆய்த மிரண்டொடு சார்பெழுத் துறுவிரி
ஒன்றொழி முந்நூற் றெழுபா னென்ப". (61)

நன்னூலார் காட்டும் நிலைகளை ஆராயுங்கால் இவை தொல்காப்பியத்தை ஒட்டி அமைந்த வளர்ச்சிகளோ என எண்ண வேண்டியுள்ளது. உயிர்மெய்யும், உயிரளபெடையும், ஒற்றளபெடையும், ஐகாரக் குறுக்கமும், ஔகாரக் குறுக்கமும், மகரக் குறுக்கமும், ஆய்தக் குறுக்கமும் நன்னூலார் காலத்தில் கருதப் பெற்ற சார்பொலிகள் என்பது நமக்கு நன்கு புலனாகின்றது. முதலெழுத்துக்களைச் சார்ந்து வரும் ஒவ்வொன்றின் இடத்தினையும், பற்றுக் கோட்டினையும் இதனால் நாம் விளக்கமாகக் காண முடிகின்றது. தம் கால நிலைக்கேற்றவாறு நன்னூலார் சார்பொலிகளை இவ்வாறு பாகுபடுத்தல் அன்றைய வழங்கியல் மரபாக இருந்ததோவென நாம் எண்ண வேண்டியுள்ளது.

## சார்பொலி மாற்றொலி தானா!

தமிழ் மொழி வரலாற்றை ஆய்ந்த பேராசிரியர் Dr தெ. பொ. மீ அவர்கள் சார்பொலிகள் மாற்றொலிகளாகக் கருதப் பெறும் என்ற கருத்தினை விளக்க முற்படுவர். தொல்காப்பியர் காட்டும் சார்பொலிகள் மூன்றனுள் குற்றியலுகரமும், குற்றியலிகரமும் வருமிடங்களில் முற்றியலுகரம் வாராமையை நோக்குக. இதனால் நமக்கு இருவகைக் கருத்துக்கள் புலனாகும். குற்றியலுகரம் சொற்களின் ஈற்றில் வன்மையூர்ந்து வரும் என்பதனால் இடச்சார்பு (complementary distribution) புலனாகிறது. பிற இடங்களில் முற்றியலுகரமே வருவதால், உகரமும் குறிலுகரமும் மாற்றொலிகளாக (allophones) வரும் என்பர்

ஒலிநிலையை ஆய்கின்ற மொழியியலார் இனி, குற்றியலுகரம் யகர முதன்மொழி வரின் இகரமாம் என இடச்சார்பு (complementary distribution) உணர்த்தப் பெறுகின்றது இகரவொலியும், குற்றியலிகரமும் மாற்றொலிகளாகவே (allophones) வரும் எனக் கொள்ள நம் வழக்குகள் இடந்தருகின்றன ஆய்தவொலி லகர, ளகர, வகரவொற்றுகளின் திரிபாக வருதலை நாம் தொடர்மொழிகளில் காணலாம்

(எ-டு) கல் + தீது > கஃறீது
முள் + தீது > முஃடீது
அவ் + கடிய > அஃகடிய

இவ்வாறு ல், ள், வ் ஆகிய மூன்றும் வருமொழியில் வல்லினம் வர ஆய்தவொலியாக மாறித் தனித்தனியே மாற்றொலிகளாகக் காணப்படுகின்றன ஆய்தவொலியை இரட்டை வல்லெழுத்தின் (geminated plosive) மாற்றொலியாகக் (allophone) கொள்ளுதல் மொழியியலார் நிலையாகும்

உயிர்மெய்யொலியை நன்னூலார் சார்பொலியாகக் கொள்ளுதல் மொழியியலாருக்கு உடன்பாடன்று எழுத்து முறையமைப்பில் உயிர்மெய் என்றவொன்று அடிப்படையாக உண்டாயிற்று எனக் கருதி அதனை அசைநிலை அமைப்புக்கு (**Syllabic structure**) இன்றியமையாததாக நாம் கொள்கின்றோம் உயிரளபெடையும், ஒற்றளபெடையும் சார்பொலிகளாகக் கருதப்பட்ட அவற்றை முறையே '**Vowel Cluster**', '**Consonant Cluster**' எனக் கருத இடமுண்டு செய்யுட்கண் இவ்விருவகை அளபெடைகளும் யாப்பியற் பாங்கு (**Prosaic feature**) நோக்கி வருதலை இலக்கியங்களில் நாம் பரக்கக் காணலாம். எஞ்சிய ஐகார, ஒளகார, மகர, ஆய்தக் குறுக்கங்கள் நன்னூலாரால் தனிப்பட்ட சார்பொலிகளாகக் கருதப்படுகின்றன தொல்காப்பியர் மகரம் ணகரத்தின் முன்னரும், வகரத்தின் முன்னரும் வந்து குறுகும் என்பார்

> "செய்யுள் இறுதிப் போலி மொழிவயின்
> ணகார மகாரம் ஈரொற் றாகும்" (51)

(எ-டு) "திசையறி மீகானும் போன்ம்"

இவ்விடத்தில் மகரம் ஈரொற்று உடனிலையாய் (**Consonant Cluster**) வர, நன்னூலார் சார்பொலியாக இதனைக் கருதுவர். மகரக்குறுக்கம் என்ற ஒரு வகைப் பெயரும் இதற்கு அமைகிறது இதைப் போன்றே ஐகாரம் தனக்குரிய இரண்டு மாத்திரைகளைப்

பெறுமல் ஒரு மாத்திரை பெறுங்கால ஐகாரக் குறுக்கமாக அமைய, அதனை நன்னூலார் தனிப்பட்ட சார்பொலியாகக் கருதுவர். ஔகாரக் குறுக்கமும் தன்னைப் போன்ற கூட்டெழுத்தாகிய ஐகாரம் போன்றே குறுகி ஒலித்தலை ஓர் ஒலினீர்மையாகக் கொள்கின்றது. ஆய்தக் குறுக்கம் நன்னூலார் காட்டும் விதிப்படி,

"லள வீற் றியைபினு மாய்த மஃகும்"— என்று வரும். ஆனால், தொடர்மொழிப் பாங்கை நுணுகி ஆராயுங்கால் இவ்வாய்தக் குறுக்கம் புணரியல் மாற்றமாகவே (morpho-phonemic change) காணப்பெறும்.

எனவே, சார்பொலிகளைப் பற்றித் தொல்காப்பியரும் நன்னூலாரும் கொண்டுள்ள கருத்துக்கள் இருவேறு கால நிலைகளை எடுத்துக் காட்டுவன எனக் கருத்தில் கொண்டு இவற்றை முறையாக ஆராய வேண்டும். தன்னியல்பில் நின்று விளங்கும் ஆற்றல் அற்ற சூழ் நிலையில் இடத்திற்கேற்றவாறு ஒருவகைப் பற்றுக்கோட்டினைக் கொண்டு ஒரு மொழியைச் சார்ந்து வரும் இயல்புடைய எழுத்துக்களைச் சார்பெழுத்துக்கள் எனக் கொள்ளுதல் தொல்லாசிரியர் துணிபாம். இவற்றைச் சார்பெழுத்துக்கள் எனக் கூறுவதைக் காட்டிலும் சார்பொலிகள் என விளக்கமாக ஆராய்தல் நன்றும். முதலொலிகளின் சார்பின்றி இவ்வொலிகள் வாராமையே இவை இப்பெயர் பெற உரிய காரணமாம். நன்னூலார் காட்டும் சார்பெழுத்துக்களில் பல, சார்பெழுத்தின் இலக்கணத்திற்குச் சற்று மாறுபட்டு வருதலை நோக்குங்கால இன்றைய மொழியியலாரின் ஒலியியல் தத்துவங்கள் நமக்குப் பெருந்துணை புரிவதோடு அறிவு ஆராய்ச்சியை வளர்க்கத் துணை செய்கின்றன. இலக்கணக் கருத்துக்கள் இலக்கிய மரபுகளை யொட்டி அமைந்தமையால் அவ்விருவகை மரபுகளும் காலத்திற்கேற்ப மாறிக் காணப்படு கின்ற பொழுது புதுமைத் துறையில் ஆய்வு காண்போர் பழமை நெறிகளை முழுமையாகப் புறக்கணிக்காமல் உண்மையைக் காண முற்படல் நேரிய முயற்சியன்றோ!



# 34. 'திராவிட அடிச்சொற்கள்'.
# The Dravidian Roots.

ஒரு மொழி தன் அடிச்சொற்களை ஆளும் அமைப்பு முறைகளை அம்மொழியின் உண்மை நிலையினையும், சிறப்பியல்புகளையும் (essential spirit and distinctive character) விளக்க வல்ல சிறந்த தன்மையாம் அடிச் சொற்களை ஆளும் முறையில் காணப்படும் வேற்றுமைகளை அடிப்படையாகக் கொண்டே, ஐரோப்பிய, ஆசிய மொழிகள் பலவேறு இனங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. திராவிட மொழிகளில் வழங்கும் இலக்கண வடிவங்களை நன்கு ஆராய்ந்து ஒப்பிடுவதற்கு அத் திராவிட அடிச்சொற்களின் இயல்புகளையும், அவை இலக்கண வடிவங்களாகச் சேர்ந்து வருகின்ற பொழுது அவற்றிடையே ஏற்படும் மாறுதல்களையும், இயல்புகளையும் நன்கு ஆராய்தல் வேண்டும். திராவிட மொழிகளில் காணப்பெறும் அடிச்சொற்களைப் பற்றிய பாகுபாடு உலக மொழிக் கூறுகளுள் தனியான இடத்தைப் பெறத் தக்க சூழலை எடுத்துக் காட்டும்

**மொழியின் பல்வேறு இனங்களாவன:-**

(i) தனிமொழிகள் (The Isolative Languages.)

இவ்வகை மொழிகளுக்குச் சிறந்த எடுத்துக் காட்டாக விளங்குவது சீன மொழியேயாம் இவற்றில் வரும் பகுதிகள் திரிவதும் இல்லை; பிற சொற்களோடு புணர்வதுமில்லை. தனித் தனியே நின்று பொருள் உணர்த்துவனவாம். இச்சொற்களில் இயைபு காணப்பட வேண்டுமென்றால் பிறிதொரு முறையை மேற்கொள்ளல் வேண்டும் ஒரு சொல்லுக்கும், மற்றொரு சொல்லுக்கும் உள்ள பொருள் தொடர்பினைத் துணைச் சொற்களாலும் (auxiliary words or phrases), சொற்கள் நிற்குமிடத்தாலும் (position of words) தான் அறிந்து கொள்ள வேண்டும். "In the isolative languages, all grammatical relations are expressed either by auxiliary words or phrases or by the position of words in a sentence" [1] என்பார் Dr. Caldwell. "In contemparary terminology an isolating language is one in which word consists of a single morpheme" [2] என்று Greenberg கூறுவர்

---

[1] Dr. Caldwell -A Comparative Grammar of the Dravidian Languages P. 191.

[2] Joseph H Greenberg - Essay on Linguistics P. 60.

### (ii) இடைமாற்ற மொழிகள் (அல்லது) செமிடிக மொழிகள்.
### (The Intromutative Languages or the Semitic Languages )

இவ்வகை மொழிகளில் உயிரெழுத்துக்கள் மாறி மாறி வருவதால் பொருள் மாறும். செமிடிக மொழியில் மெய்யெழுத்துக்களே பகுதியாய் நிற்கும்.

V V
S l m > Salem   C C C > C C C

'Grammatical relations are expressed by internal changes in the vowels of dissyllabic roots'– [3] என்று Dr Caldwell குறிப்பிடுவார். Hebrew, Arabic போன்ற செமிடிக மொழிகளில் ஈர் அலகு பெற்ற பகுதிகளின் இடையே வரும் உயிரெழுத்துக்களே மாறி மாறி வந்து பொருள் தரும்.

### (iii) ஒட்டு மொழிகள் (The Agglutinative Languages.)

இம்மொழிகளில் பகுதியோடு (Roots) சேர்ந்து வரும் இடைநிலை (Tense sign), விகுதி (Suffix) முதலியவை இலக்கணத் தொடர்பை விளக்கி வருகின்றன. "Grammatical relations are expressed by affixes or suffixes added to the root or compounded with it [4] என்பார் அவர். இந்தோ-ஐரோப்பிய இனத்தைச் சேர்ந்த மொழிகளும், சித்திய இனத்தைச் சேர்ந்த மொழிகளும் திராவிட மொழிகளும் இந்த இனத்தைச் சார்ந்தவையாம். இம்மொழிகளுக்குள் சொற்களால் மட்டுமன்றி இலக்கண வடிவங்களாலும் பல மாறுபாடுகள் இருப்பினும், துணைச்சொற்களை ஒட்ட வைத்து வழங்கும் முறையில் இவையனைத்தும் தொடக்க நிலையில் தம்முள் ஒத்திருந்தன எனத் தோன்றுகின்ற காரணத்தால் Dr Caldwell அவர்கள் இவற்றை ஓரினமாகக் கருதியுள்ளார். தொடக்கத்தில் எழுந்த சொல்லமைப்பு முறையில் இவை ஒரு தன்மையாக அமைந்து, பின்னர் தம் வளர்ச்சிக்கேற்பப் பெரிதும் வேறுபட்டுள்ளன.

இந்தோ-ஐரோப்பிய இனத்தைச் சார்ந்து வளர்ச்சி பெற்றுச் சிறந்த மொழிகளின் அடிச் சொற்களில், பின்னிலை இணைப்புகளாக (Suffixes) வந்தவையனைத்தும் இன்று அடிச்சொல்லோடு சேர்ந்தும், அடிச் சொல்லிலிருந்து வேறு பிரிக்க முடியாத

---

[3] Dr. Caldwell – A Comparative Grammar of the Dravidian Languages P. 191.

-Ibid- P. 191.

வாறு அதனோடு ஒன்றியும் அமைந்துள்ளன (Post positional additions melted down into inflection or blended with the root) அவ்வாறு வடிவம் மாறுதிருந்த சித்தியன் இனத்தைச் சார்ந்த மொழிகளும், திராவிட இனத்தைச் சார்ந்த மொழிகளும், தம் பழைய முறையாகிய ஒட்டுநிலை அமைப்பை இன்றும் காத்து வருகின்றன ஒவ்வொரு தொடரிலும் அவற்றின் உறுப்புகள் பழைய இடத்திலிருந்து மாறாமலும், தத்தம் தனி நிலையினின்று பெயராமலும் சிறந்துள்ளன அவ்வாறின்றித் தந்நிலை இழந்தும், சொல்லின் வடிவம், பொருள் இவை திரிந்தும், சொல்லில் இருந்து பிரிக்க முடியாத நிலையில் ஒன்றாகியும் உள்ள மொழிகளை "Inflectional languages" என்கின்றனர் இந்நிலை வடமொழியில் மிகுதியாகக் காணப்படும்

## திராவிட அடிச்சொற்களின் பாகுபாடு:-
## The Arrangement of Dravidian Roots into Classes

எல்லா வகையான உருபுகளையும் விட்டு அடிச்சொற்களை மட்டும் தனியே நோக்குங்கால் அவற்றை இரு இனமாகப் பிரிக்கலாம். (1) வினையடிகள் (Verbal Roots) – இவை பொது வாகப் பெயராகவும் விளங்கக் கூடியவை இந்தப் பிரிவே நம் மொழியின் பெரும் பிரிவாம் (ii) பெயரடிகள் (Nouns)- இப்போதுள்ள எந்த வினைச் சொல்லிலிருந்தும் பிறந்தனவாக இவற்றைக் கொள்வதற்கு இல்லை (that cannot be traced up to any extant verbs)

வினையடிகள் (Verbal roots)–திராவிடமொழிகள் யாதொரு சேர்ப்பும் (additions) இன்றித் தனி வினையடியையே முன்னிலை ஏவல் ஒருமையாகக் (Imperative of the II Person Singular) கொண்டு விளங்குகின்றன இந்த வகையில் திராவிடமொழிகள் வடமொழிக்கும் கிரேக்க மொழிக்கும் மாறுபட்டு, சித்தியன் மொழியோடு ஒன்றுபட்டு விளங்குகின்றன. இவ்வாறு வருவதே பொது விதியாம். இதற்குப் புறனடையாகச் சில திரிந்து வழங்கும். திராவிட மொழிகளின் அடிச் சொற்களில் பல பெயராகவும், வினையாகவும் வழங்கப்படுகின்றன.

(எ.டு) சொல், தறி, அணி

திராவிட அடிச் சொற்களில் பெரும்பான்மை பின்னிலையோ (addition), திரிபோ (alteration) இன்றி வினைப் பகுதியாகவும் (Verbal theme), பெயராகவும் வழங்குகின்றன. இவை எந்த வகைச் சொற்கள் என்பதனை முன்னும் பின்னும் வருஞ் சொற்களைப் பொருத்துத்தான் கண்டறியக் கூடும். எந்த அடிச் சொல்லாயினும் பெயராக நின்றால் அது பெரும்பான்மை

யும் வினையாக வழங்கிய வழக்கத்தினின்றும் பிறந்ததேயாம். "It would appear that originally there was no difference in any instance between the verbal and the nominal form of the root in any Dravidian dialect"[5] என்னும் Dr Caldwell கோட்பாடு நன்கு பொருந்தும்

நிலம் > நில + அம் (Verbal Root + Formative Suffix)

வினையாகப் பிறந்தன என்பதைக் காட்ட ஆக்கநிலை விகுதியோ (Formative Suffix), வேறு அடையாளமோ இன்றி அவையே பெயர்ச் சொற்களாகவும் வழங்கி வந்ததால் பெயர்ச் சொற்களை வினையடியாகப் பிறந்தன எனக் கொள்ள இயலவில்லை. (மரம் 'மரன்) ஒரே அடிச் சொல்லின் இந்த இருமை நிலையை அல்லது இருமை வழக்கை விளக்கக் கீழ்வரும் எடுத்துக் காட்டுகள் துணைபுரியும்

(எ.டு) சொல், அணி

இனி, 'கடுநடை' என்பதில் 'கடு' என்பது பெயரடையாக (adjective) அமைந்துள்ளது 'கடு' என்ற சொல்லோடு 'த' என்ற ஆக்கநிலை விகுதி சேர்ந்தால் (V R + F S *) 'கடுத' என அமைகிறது 'காடு' என்ற சொல், கடு என்பதன் உயிர் நீண்டு அமைகிறது. இது கடுமையான இடத்தை உணர்த்தும் பொருளாக இருக்கின்றது (lengthening of the initial vowel in the root- √கெடு > கேடு, √கடு > காடு)-√CVCV > $C\bar{V}CV$ (√ Verbal root)

திராவிட இனத்தைச் சேர்ந்த எம் மொழிகளிலும் தொடக்கத்தில் எந்த இடத்திலும் அடிச் சொல்லின் வினைவடிவத்திற்கும் பெயர் வடிவத்திற்கும் யாதொரு வேற்றுமையும் இருந்ததில்லை (No difference between the verbal and the nominal form of the root – e g 'சொல்') ஆனால் மொழிகள் பண்பாடு பெற்று வளர்ச்சியுற்று வரும்போது படிப்படியாக வினையும் பெயரும் வேறுபடத் தொடங்கின

**பெயரடிகள் (Nouns)**- திராவிட மொழிகளில் பெரும்பாலான பெயர்ச் சொற்களுக்கு வினையடி காண முடியும் பெயர்ச் சொற்களை நன்கு ஆராய்ந்து பார்க்கும் போது அவை தொழிற்

---

[5] Dr. Caldwell— A Comparative Grammar of the Dravidian Languages. P 193

* V R — Verbal Root—வினையடிச் சொல்.

F. S — Formative Suffix—ஆக்கநிலை விகுதி.

பெயர்களும், வினையடியாகப் பிறந்த சொற்களுமாகவே காணப்படும்

(எ. டு) கண் – சினைப்பெயர். காட்சி – பெயர்

√காண் – வினையடி காணல் – தொழிற்பெயர்

ஈரசை பெற்ற (dissyllabic) திராவிடப் பெயர்கள் பலவற்றிலும் இரண்டாம் அசையாய் வரும் 'அல்' என்பது தமிழில் தொழிற்பெயர் விகுதியாம் (Formative of the verbal noun) இவ்வினத்தைச் சேர்ந்த பெயர்கள் அனைத்தும் வினையடியாகப் பிறந்தன எனத் தடையின்றிக் கூறலாம்

| | | | | |
|---|---|---|---|---|
| (To expand) | விரி + அல் | > விரல் | -al (formative suffix) | |
| (To pass beyond) | கட + அல் | > கடல் | | |
| (To divide) | பகு + அல் | > பகல் | √V R + F S | |
| (To hollow out) | குடை + அல் | > குடல் | | |

காணல், சாதல், வரல் என்ற தொழிற்பெயர்களுள் காண், சா, வா என்ற வினையடிச்சொற்களோடு 'அல்' என்ற தொழிற்பெயர் விகுதி புணர்ந்து அவை தொழிற்பெயர்களாக வழங்குகின்றன இனி மேலே கண்ட பெயர்ச்சொற்களில் காணப்படும் 'அல்' என்பது ஆக்கநிலை விகுதியாம். சில வினையடிகள் பெயராகும் போது அடையும் மாறுதல் மிகச் சிறிதேயாகும் அடிச் சொல்லோடு ஆக்கநிலை விகுதி புணர்ந்தோ, அடிச் சொல்லின் அகத்துயிர் நீண்டோ பெயராக மாறும்.

(i) Addition to the root of a formative particle.

(ii) The lengthening of the included vowel of the root

| அடிச்சொல் | > | பெயர்வடிவம் |
|---|---|---|
| V. Roots. | | Noun forms |
| நில | | நிலம் |
| நடு | ——— | நாடு |
| கடு | ——— | காடு |
| மின் | ——— | மீன் |
| வெள் | ——— | வெள்ளி |
| குதி | ——— | குதிரை |
| விள | ——— | விளை |
| நக்கு | ——— | நாக்கு |
| காண் | ——— | கண் |

(முதல் குறுகும்)

இவ்வாறு அடிச் சொற்கள் காட்டும் சீரான பாங்கினை நாம் மிகத் தெளிவாகவே உணரலாம்.

# 34 (a) 'திராவிட அடிச்சொற்கள் ஓரலகுச் சொற்களே'.

## The Dravidian Roots are originally Monosyllabic.

திராவிட மொழிகளில் அடிச் சொற்கள் தெளிவாய்ப் பிரித்து அறியும் நிலையில் சொற்களின் அடிப்படையான கருத்துக்களை உணர்த்தி நிற்கின்றன. திராவிட மொழிகளில் முதன் முதல் ஓரலகுச் சொற்களே (monosyllabic) இருந்து வந்தன என்பது Dr Caldwell அவர்களின் கருத்து. "It may appear at first sight scarcely credible that the Dravidian roots were originally monosyllabic, when it is considered that the majority of the words in every Dravidian sentence are longer than those of any other language in Asia or Europe, and are inferior in length only to the words of the polysynthetic languages of America"[1] என்னும் கூற்றினைக் காண்க. இம்மொழிகளின் அடிச்சொற்களுக்கும் இந்தோ ஐரோப்பா மொழிகளின் அடிச் சொற்களுக்கு வேறுபாடு பெரிது. எல்லா மொழிகளிலும் தொடக்கத்தில் பல அலகுச் சொற்கள் இருந்தன என்றும், அவை கால நிலையில் மருவியும் திரிந்தும் ஓரலகுச் சொற்களாக மாறுவதே மொழிகளின் இயல்பு என்றும், "Language proceeds from original polysyllabism towards monosyllabism and we have to imagine primitive language as consisting of very long words full of difficult sounds, and sung rather than spoken"[2] என Jespersen என்பார் கூறுகின்றார். அவர் Habaidedeime>Had என்று கூறியுள்ளார். ஐரோப்பிய மொழிகளின் அடிச் சொற்கள் பேச்சு மொழியில் என்றும் வழங்காதன என்றும் அவர் குறிப்பிடுவர். இந்தோ-ஐரோப்பிய மொழிகளில் அடிச் சொற்கள் என்று கூறப்படுபவை யாவும் இலக்கண நூலாரின் படைப்பே அன்றி வழக்கிலுள்ள சொற்களல்ல. ஆனால், திராவிட மொழிகளின் அடிச்சொற்கள் யாவும் பேச்சு வழக்கிலும், இலக்கிய வழக்கிலும் நாள்தோறும் வழங்கி வருபவையாம்.

நம் மொழியின் இடைக்கால இலக்கண நூலாகிய நன்னூலில் பவணந்தியார், "நடவா மடி சீ . ...வினைப்பகாப்பதமே"

---

[1] Dr Caldwell — A Comparative Grammar of the Dravidian Languages P. 196

[2] Otto Jespersen — Progress in Language. P. 18.

(எழுத்து 137) எனக் குறிப்பிடுவதினின்றும் வினைச் சொற்களின் அடிச் சொற்கள் (Root words of the verbs) யாவும் முன்னிலை ஏவல் ஒருமையாக (II Person Imperative Singular) வழங்கப் பெறுகின்றன என்பதையறியலாம். தமிழில் 'இருக்கிறது' என்ற சொல்லோடு, ஆங்கில மொழியின் 'is' என்பதனையும், இலத்தீன் மொழியின் 'est' என்பதனையும் ஒப்பு நோக்கிக் காண்போம். பின்னைய மொழிகளில் காணப்பெறும் சொற்கள் குறுகிய அமைப்பைக் கொண்டு இலங்கத் தமிழ்ச் சொல் மிகவும் நீண்டு அமைந்திருப்பது நன்கு புலனாகும். இந்நிலையில் திராவிட அடிச் சொற்கள் தொடக்கத்தில் ஓரலகுச் சொற்களாகவே இருந்தன என்பதனை நாம் நம்புவதில்லை. எழுத்துக்களைப் பிரித்து இடையிடையே இன்னோசையின் பொருட்டு நாம் அமைத்துக் கொண்ட சில சொற்களைச் சேர்ப்பதால் அவை நீண்டு தோன்றுகின்றன. திராவிட அடிச்சொற்கள் காட்சி நிலையால் நீண்டு காணப்படினும் 'ஒட்டுமொழி' வகை என்ற ஒன்றின் அடிப்படையில் நாம் அச்சொற்களை இலக்கணக் கூறுகளாகப் பிரித்து அவை 'ஓரலகுச் சொற்களே' எனத் துணியலாம். ஆனால், சிறப்பாக ஆக்கநிலை விகுதிகளும் (formative suffixes), பகுதி நீங்கலாகப் பிற உருபுகளும் (inflexional particles and pronominal fragments) ஒன்றோடொன்று தொடர்ந்து வருவதால் அவை நீண்டு பொருள் தருகின்றன. "The great length of Dravidian words arises partly from the separation of clashing consonants by the insertion of euphonic vowels, but chiefly from the successive agglutination of formative and inflexional particles and pronominal fragments"[3] எனும் கருத்து Dr Caldwell அவர்கள் கொண்டுள்ள தெளிவினை உணர்த்தும். பொருள் வேறுபாடு புலப்படுத்த அடிச் சொல்லோடு சேர்க்கப்படும் பிற சொற்களை இடைச் சொற்கள் (particles) எனத் தமிழிலக்கணம் கூறும். அவை இன்று துணை உறுப்புக்களாக (auxiliaries) நிற்கின்றன. பகுபத உறுப்புக்களைச் சேர்ப்பதற்கு முன் திராவிட வினைப் பகுதிகளில் பெரும்பாலானவை மூவசைச் சொற்களாம். (Tri-syllabic forms) மூன்றாவது அசையாக இருப்பவை ஆக்கநிலை விகுதிகளாம். முதலிரண்டு அசைகளை நோக்கும் போது ஓரசை நிலை இன்னோசையின் பொருட்டு திரிபு பெற்று ஈரசையாக அமைந்துள்ளது. மூன்றாவது அசையாக நிற்கும் வினைப் பகுதிகள் (inflectional base / verbal base) என்பதனோடு காலம்,

---

[3] Dr Caldwell — A Comparative Grammar of the Dravidian Languages. P. 196.

இடம், பால், வேற்றுமை முதலியன உணர்த்தும் உருபுகள் சேரும் இக்காரணத்தால்தான் திராவிடத்தின் அடிச் சொற்கள் நீட்சி பெறுகின்றன

திராவிடச் சொற்கள் நீண்டு தோன்றினும் உற்று நோக்கி அவற்றை ஒவ்வொன்றாகப் பிரித்தால் அடிச் சொல் ஓரசையாகவே அமைவதைக் காணலாம். இரு+க்+கிறு+அது> இருக்கிறது என்ற வினைமுற்றில் 'இரு' என்பதுதான் வினைப் பகுதி (verbal base) 'இர்' என்பது வினையடிச் சொல்லாக அமைய 'உ' என்பது ஒலித்துணை உகரமாக அமைகிறது நம் மொழியில் எத்தகைய வினைமுற்றுச் சொல்லையும் நாம் எளிதாகக் கூறிட்டு இலக்கணச் சிறப்புக்களை அவற்றிற்கு வழங்கலாம் சான்றாக, 'பெருகுகிறது' என்ற சொல்லினைக் காண்போம்.

பெருகு+கிறு+அது>பெருகுகிறது இச் சொல்லில் 'அது' என்பது படர்க்கைச் சுட்டுப் பெயரின் பால்காட்டும் விகுதியாம் (Pronominal suffix of the III Person Demonstrative Pronoun)· 'கிறு' என்பது நிகழ்கால இடைநிலை (Present tense-sign) எஞ்சிய 'பெருகு' என்ற பகுதியில் காணப்பெறும் மூன்றும் அசையாகிய 'கு' என்பது வினையைத் தன் வினையாகக் வந்த ஆக்க நிலை விகுதியாம் (formative suffix) இதுவும் நீங்கவே, 'பெரு' என்ற சொல் வினைப்பகுதியாக அமைதலைக் காணலாம் அச் சொல்லிலும் 'உ' என்பதனை ஒலித்துணை உகரமாகக் (enunciative vowel) கொண்டு 'பொ' என்பதனையே ஓரலகுச் சொல்லாக (monosyllabic verbal root) நாம் உருவாக்க முடியும் திராவிடத்து அடிச் சொற்கள் ஒற்றினை ஈற்றிலே கொண்டும், உயிரினை ஈற்றிலே கொண்டும் இரு பிரிவுகளாகப் பகுக்கப் படுகின்றன. (நில, செல, வாழ என்பன ஒருவகை. எழு, நட, படு என்பன மற்றொரு வகை) இனி, 'மின' என்ற வினையடியாக அடிச் சொல்லின் முதலுயிா நீண்டு 'மீன்' என்ற பெயா வடிவம் முன்னாகக் காட்டப் பெற்றது போல, 'பொ' என்பதும் 'போ' என நீண்டு நின்று பெயா வடிவாக அமைதலைக் காணக் இஃதன்றியும், 'பெரிய மகன்', 'பெருந்துயா' என்ற சொற்றொடர்களில் காணப்பெறும் 'பெரிய', 'பெரும்' என்ற பெயரடை (adjectives) வடிவங்களை நாம் பிரித்தால் அவை முறையே 'பொ+இய' என்றும், 'பொ+உம' என்றும் நிற்றலைக் காணலாம் இவ்வாறு 'பொ' என்ற அடிச்சொல் இன்னோசைக்காக ஈற்றுகரம் பெற்று 'பெரு' என நிற்கிறது இவ்வாறு நோக்குமிடத்து ஓரசைச் சொல் ஆறசைச் சொல்லாக நீண்டு அமைவதை அறிகிறோம் "Whatever be the length and complication

of Dravidian words, they may invariably be traced up to monosyllabic roots, by a carefull removal of successive accretions"[4] என்பர் Dr Caldwell.

திராவிட மொழிகளில் அடிச்சொல் தெளிவாக அறியப்படுகிறதோடு, அடிச்சொல் சிதையாவாறு நிற்க வேண்டி அதனுடன் சேரும் உருப்புக்கள் தெளிவாக ஒட்டி நின்று பல வகைச் சொல்லாய் நீண்டு நிற்கின்றது. அடிச்சொல் சிதையாவாறு ஒலித்துணையாகச் சேர்வன சில (enunciative additions); சொல்லமைக்க வரும் ஆக்கநிலை விகுதிகளோடு (formative suffixes) சேர்ந்து வருவனவும் உள. இவையன்றிப் பொதுப் பொருளைச் சிறப்புப் பொருளாக்கத் தந்து வருவனவும் (particles of specialisation), உள. திராவிட அடிச்சொற்கள் தொடக்கத்தில் ஓரலகு (அலகு) ஓரசையாலாகி இயல்பால் இருவகையாகப் பிரிந்துள்ளன (1) 'ஆ' 'சா' 'போ' என உயிரீறாக நிற்பன (2) 'அண்', 'நில்', 'செல்' எனக் குறில் உயிர் இணைந்த மெய்யீறாக நிற்பன என்று Dr Gundert குறிப்பிடுகின்றார். இந்தோ-ஐரோப்பிய மொழிகளின் நிலையை உட்பிணைப்பு நிலை (inflexional stage) என்றும், திராவிட மொழிகளின் நிலையை ஒட்டு நிலை (agglutinative stage) என்றும் குறிப்பிடுவர்.

சொற்களின் நீட்சியில் அமெரிக்க மொழியின் பலவகைச் சொற்களுக்கு அடுத்த படியாகக் கருதப்பெறுபவை திராவிட மொழிகளேயாம் எனினும், அவற்றின் அடிச் சொற்கள் ஓரசைச் சொற்களேயாம். பலவகைக் கருத்துக்களைத் தேடியலையும் மக்களின் மனம் கிடைத்த எந்தத் துணையுறுப்பையும் கருவியாகக் கொண்டு, அதை அடிச் சொல்லோடு சேர்க்கும் முறையை மட்டும் ஒழுங்கு படுத்திக் கொள்ளுகின்ற முறை மொழி வல்லார்க்குப் புதுமையாகத் தோன்றுதல் பெருவியப்பே.

## -: இன்னோசை காரணமாக அடிச்சொல் நீளுதல் :-
## Euphonic Lengthening of Verbal Roots.

நம் திராவிட மொழிக்குடும்பத்தில் திருத்தம் பெறாத திராவிட அடிச் சொற்கள் (Crude Dravidian roots) இன்னோசை உயிர்களின் சேர்க்கையால் சில சமயங்களில் நீண்டு ஒலிக்கின்றன. ஓரசை நிலைச் சொற்களின் பின் சேர்ந்து வரும் உயிர்கள் பெரும்பாலும் இன்னோசைக்காகவே பயன்படுத்தப்

[4] Ibid P 196.

பெறுகின்றன. ஏற்று மெய்யினை எளிதின் ஒலிக்க வேண்டி ஒலித்துணையாக உகரம் வழங்கப் பெறுகின்றது. உகரம் இவ்வாறு பெரும்பான்மையாக வந்தாலும் ஓரசைநிலைச் சொற்களின் பின்னே இகரமும், இதனையடுத்து அகரம், எகரம், ஐகாரம் இவையும் பயின்று வரும்.

"ஏற்று மெய்யினை எளிதில் ஒலிக்க ஒலித்துணையாக ஓர் எழுத்து வரவேண்டும் என நா விரும்பிய போதெல்லாம் உகர உயிரே பயன்பட்டு வருகிறது. அச் சொல்லினை அடுத்து வேறோர் உயிர் வரும்போதெல்லாம் இந்த உகரம் கெடுகிறது"[1] என்பார் Dr தெ பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்கள்.

மற (Ta) > மறெ (Ka.)
சடி (Ta) > கரசு. (Te.)
முளை (Ta) > மொலசு (Te)

**ஆக்கநிலை விகுதிகள் :- Formative additions to the Roots**

இவ்வாக்கநிலை விகுதிகள் இயற்கை வடிவில் நிற்கும் வினையடிச் சொற்களோடு சேர்ந்து வருவதுபோல அத்தகைய பெயரடிச் சொற்களோடும் சேர்ந்து வருகின்றன எனினும், அவை வினைச்சொல் எனச் சிறப்பாய் வழங்குவனவற்றிற்குப் பின்னேயே வழங்கி வருகின்றன அத்தகைய வினையடிச் சொற்கள் ஒரு பகுதியாக நிற்கும்போது அதன் மூன்றும் அசையாக (third syllable) இவ்விகுதிகள் வழங்குகின்றன. இவ்விகுதிகள் இப்போது தன் வினையினின்றும் வேறு வகையினைப் பகுத்து அறியவும் (to distinguish transitive verbs from intransitives), பெயர்ச் சொற்களினின்று பெயரடை வடிவங்களைப் பகுத்தறியவும் (to form adjectival form of nouns) பயன்படுகின்றன தமிழ் மொழியில்தான் இவ்வாக்க நிலை விகுதிகள் நன்கு வளர்ச்சி பெற்றுள்ளன தன் வினையில் சிறப்பியல்பாக வரும் ஒற்றை மெய்யெழுத்தின்முன் இன்னோசையின் பொருட்டு இனமெல்லெழுத்து பெரும்பான்மையும் வரும் ஆனால், அச்சொல்லின் பொருள் மாறுவதில்லை

கு > ங்கு (இன்னோசை) தன்வினை ku < ngu.
கு > க்கு —பிறவினை ku > kku
√அட > அடங்கு (தன்வினை)
அடக்கு (பிறவினை)

[1] Dr. தெ பொ மீனாட்சிசுந்தரனார் — கால்டுவெல் ஒப்பிலக்கணம் II அடிச்சொற்கள். பக்கம் 17.

பெருத்து, பெருக்கு என்ற சான்றுகளில் தன்வினைக்கண் இன்னோசை பொருட்டு மெல்லெழுத்து மிகுதலைக் காண்க. தன்வினையில் ஆக்கக்கிளை உறுப்பு எழுத்து மெல்லோசை பெறும்; பிறவினை வல்லோசை பெறும்.

(எ-டு) நடந்து, பயின்று — தன்வினை
நடத்து, பயிற்று — பிறவினை

ஆக்கக்கிளை விகுதியாக வரும் பல விகுதிகளும் பொருள் வேறுபாடு பழகிவரும் நோக்கத்தாலே, இவையனைத்தும் கூடிவரும் நோக்கத்தோடு ஒன்றிலிருந்து ஒன்று அடிப்படையாக வேறுபட்டிருக்கவில்லை. இவ்வாறு ஈறுகளாக வரும் கு (ku), ங்கு (ṅku), க்கு (kku), சு (cu), ச்சு (ccu), டு (ṭu), ண்டு (ṇṭu), ட்டு (ṭṭu), று (ṟu), ந்து (ntu), த்து (ttu), பு (pu), ம்பு (mpu), ப்பு (ppu) என்பனவற்றைப் பொதுவாக ஆக்கக்கிளை விகுதிகள் என வகுக்கலாம். இவ்விதியை ஆராயும்போது பெயர்களைப் பற்றிய உண்மை விளங்குகிறது. இப்பெயர்கள் வினையடியில் பிறந்தன எனவும், வினையடியோடு தொடர்புடையன எனவும் அறிய முடிகின்றன.

கொம்பு > கொய் + ம்பு (mpu)
பாம்பு > பாய் + ம்பு (mpu)
— Verbal root + Formative suffix > Noun forms

"It may be concluded that wherever Dravidian verbs or nouns are found to terminate in any of the syllables referred to, there is reason to suspect that the first part of the word alone constitutes or contains the root. The final syllables கு, ங்கு, க்கு may as a general rule be rejected as formative additions"[2] என்பார் Dr Caldwell.

-: அடிச்சொல்லின் ஈற்று ஒற்று இரட்டுதல் :-
Reduplication of the Final Consonants of the Roots.

தமிழ் மொழியில் இரட்டிப்பு (Reduplication) விளக்கமாகப் புலனாகும் ஓர் இலக்கண முறையென நாம் அறிவோம். சிறப்பாக வல்லொற்றுக்கள் (Plosive consonants) இரட்டித்து நம் மொழியின் சிறப்பினைக் காக்கும்.

[2] Dr. Caldwell — A Comparative Grammar of the Dravidian Languages P. 203.

(i) பெயரடைகளை உருவாக்க ஒற்று இரட்டித்தல் (For changing a noun into an adjective)

(எ. டு) நாடு + பற்று > நாட்டுப்பற்று.

(ii) செயப்படுபொருள் குன்றிய வினையைச் செயப்படுபொருள் குன்றாத வினையாக்க ஒற்று இரட்டிக்கும் (For converting an intransitive or neuter verb into a transitive)

(எ. டு) ஓடு > ஓட்டு

(iii) இறந்தகாலம் காட்ட ஒற்று ஒற்று இரட்டிக்கும் (For forming the preterite or past tense).

(எ. டு) புகு > புக்கு

(iv) வினைப்பகுதியிலிருந்து பிறக்கும் பெயர்களை அமைக்க ஒற்று இரட்டிக்கும் (For forming derivative nouns from verbal themes)

(எ. டு) எழுது > எழுத்து

(v) இந்தோ - ஐரோப்பிய மொழிகளின் அடிச்சொல்லின் முதல் ஒற்று இரட்டித்து இறந்த காலம் காட்டும். திராவிட மொழிகளில் ஈற்றொற்று இரட்டித்து இறந்தகாலம் காட்டுவது சிறப் பிற்குரிய தொன்றாம்

## சிறப்பு நிலை உருபுகள் – Particles of Specialisation

ஈரசை பெற்று வழங்கும் பெயர்களையும், வினைகளையும் நணுகு ஆராயுங்காலத்து முதலசை பொதுப் பொருண்மையோடு விளங்கும் அடிச்சொல் (generic signification) என்றும், இரண்டாவது, இவ்வடிச் சொல்லின் பொதுப் பொருண்மையையும் மாற்றுகின்றது (generic meaning of the stem is modified) என்றும் நாம் அறியலாம் இவ்வாறு பொதுப் பொருள்களைச் சிறப்பு நிலைக்குக் கொண்டுவரும் உருபுகளை சிறப்புநிலை உருபுகள் (To specialise the meaning of the root) என்பர் இந்த அடிச்சொல்லமைப்பு திராவிடமொழிகள் எல்லாவற்றிலும் உண்டு எனினும், தமிழ்மொழியின்கண் அதன் இயல்பும் சிறப்பும் நன்கு விளக்கம் பெறுகின்றன

(1) √அட் > (அடு) என்பது ஓரடிச் சொல் இந்த அடிச் சொல்லோடு உருபுகள் புணர்ந்து கீழே காணுமாறு போலச் சிறப்புப் பொருளைத் தருகின்றன

$\sqrt{அட}$ + அ + ந > அடஙகு -a-
$\sqrt{அட}$ + இ > அடி -i- ($\sqrt{அட}$ - generic
$\sqrt{அட}$ + உ > அடு -u- notion of nearness)
$\sqrt{அட}$ + ஐ > அடை -ai-

(2) $\sqrt{அண}$ + அ + கு > அணஙகு - a -
$\sqrt{அண}$ + இ > அணி -i- ($\sqrt{அண}$-contact)
$\sqrt{அண}$ + உ > அணு -u-
$\sqrt{அண}$ + ஐ > அணை -ai -

இவவிரணடு எடுததுக காடடுகளின்றும 'அட' என்ற பொதுப் பொருளைத தரும அடிசசொல்லோடு அ, இ, உ, ஐ முதலிய உருபுகளைச சோததுச் சிறபபுப பொருளை உணாததுவதையும, 'அண' எனற அடிசசொலலோடு அவவுயிாகளைச சோதது சிறபபுப பொருளை உணாததுவதையும அறிகிறோம இவறறுள இவவிரணடாம அசையானது பொருளைப பெருககவும், சுருகக வும, வேறு வகையால மாறறிச சிறபபிககவும வருவதைக காணகினறோம. இவவுயிா எழுததுககள் இசைநிறையாக (euphonic) வருவது மடடுமலலாமல சிறபபுநிலை உருபுகளாக வும மாறுமல நிலைபெறறு வருகின்றன.

திராவிட அடிசசொறகளின் பின்னே வரும இணைப்புக்கள (post-positions) எவவளவு நீணடு வந்தாலும், அவ்வடிச சொறகள தனியாக நிறகுமபோதும, பிற சொறகளோடு சோநது தொகையாக நிறதும போதும யாதொரு மாறறமோ, சிதைவோ இனறிப பொதுவாக நிறகும ஆனால, இபபொது விதிககு மாறுகச சிலவுளளன

I ாரசை நிலையாக வரும அடிச சொல்லிலோ, தொழிற் பெயரிலோ (dissyllabic root or verbal noun) இடையில உயிா மெயயாய வருகினற மெயயெழுதது நலிநதும, கெட்டும் ஒழிய, அதன் முன்னும் பின்னும நின்ற உயிா ஒன்றுய இயைநது விடும. (Rejection of medial consonant)

(எ.டு) (i) தொகுபபு > தோபபு
tokuppu > tōppu -k-> Ø
touppu > o+u > ō > tōppu.

(ii) தொகலு > தோல்

togalu > $t\bar{o}l$ (Kannada & Tamil)

–g– > Ø, –u > Ø

toalu > o+a > $\bar{o}$ > $t\bar{o}l$ (u)

CVCV + suffix > CVV + suffix
> $C\bar{V}$ + suffix } Loss of consonant

(iii) பெசர் > பேர்

pesar > $p\bar{e}r$ (Kannada & Tamil)

s > Ø

pear > e+a > $\bar{e}$ > $p\bar{e}r$

II திராவிட மொழிகளில் தன்மை முன்னிலைச் சொற்கள் ஒருமையிலும் பன்மையிலும், உருபுப் புணர்ச்சியில் மாத்திரை குறைந்து வருகின்றன. இவற்றின் எழுவாய் வடிவங்கள் நீண்டு விளங்குகின்றன. "The quality of the root vowels of the pronouns of the I and II persons both singular and plural, is short in oblique cases" – என்பது கம இலக்கண நெறி.

| எழுவாய் வடிவங்கள் (Nominative forms) | > | உருபேற்கும் வடிவங்கள் (Oblique forms) |
|---|---|---|
| நான் | > | என் |
| நாம் | > | எம் |
| நீ | > | உன் / நின் |
| நீர் | > | உம் / நும் |
| $C\bar{V}C$ | > | VC (or) CVC |

III வினையடியானது யாதொரு வேறு மாறுதலுமின்றித் தொழிற்பெயராய் வரும்போது உயிர் நீளும். வினையடியைப் பெயராக்க அதனோடு ஆக்க விகுதிகள் சேர்ந்துவரின் அடி உயிர் மாறாமலேயே நிற்கிறது. வினையடியே சில இடங்களில் பெயராக வழங்கும்போது அடிச் சொல்லின் உயிர் நீளும்.

√கெடு > கேடு or கெடுதி V R + F S (No change in the V Root)

√மின் > மீன் i > ī

√சுடு > சூடு u > ū

√படு > பாடு a > ā

√கொள் > கோள் o > ō

√பெறு > பேறு e > ē

(Note the change– lengthening of the five primary vowels)

# 35. 'திணைப் பாகுபாடு'.
# The Classification of Gender.




Note -* I Gond.
II Kui
III Kurukh.
IV Telugu
V Tamil.

Based on Professor Jules Bloch's Essay on 'Gender & Number' in the book, 'The Grammatical Structure of Dravidian Languages'

## -: பெயர்ச் சொற்கள் :- (Nouns)

திராவிட மொழிகளில் முதன் முதலில் வினைச்சொல், பெயர்ச்சொல் என இருவகைச் சொற்களே இருந்தன. இந்த நிலை எல்லா வகை மொழிகளுக்கும் பொருத்தமானதே. நாளடைவில் பொருள் வேறுபாடுகளைக் குறிக்க வல்ல நிலையில் ஐ, ஆல், கு, இன், ஏ ஓ, உம் முதலிய சொற்களைத் தனியே வகுக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. இவற்றை இடைச்சொற்கள் (Particles) என்றனர். உரிச்சொல் (Attributive) என்பது உரிமையான சொல் எனப் பொருள் தந்து சொல்லின் முதனிலையில் அமைந்தது என்பர். இவ்வாறு சொல் பெயர், வினை, இடை, உரி என நான்காகத் தோன்றியது. இவற்றுள் பெயர்ச்சொல் திராவிட மொழிகளின் திணை, பால், எண், இடம் இவற்றையும் உணர்த்தும்.

(ஏ நனி துயர் தீருமோ?
இடைச்சொல்.
உரிச்சொல் பெயர் 'செய்யும்' என்னும் வாய்பாட்டு முற்று.
(பெயரடை)

ஓகார இடைச்சொல் பெரும்பாலும் பொருள் முடிபின் நிலை உணர்த்த ஈற்றிலே வரும். இனறேல் வினை முடிபுக்கு ஈற்றில் வரும். உரிச்சொல் பெயரடையாகவோ (adjective), வினையடையாகவோ (adverb) வந்து பொருளைச் சிறப்பிக்கும்.

### திராவிட மொழிகளில் திணை, பால், எண் உணர்த்தப் பெறும் முறைகள்:—

இந்தோ - ஐரோப்பிய மொழிகளில் முன்னோர் வழங்கிய முறையைக் கடைப்பிடித்து ஆண்பால் (Masculine), பெண்பால் (Feminine), அலிப்பால் (Neuter) என முப்பால்களாகப் பகுத்தனர். இப்பாகுபாட்டிற்குரிய காரணம் சிறப்பாகப் புலப்படுத்தப் பெறவில்லை. மொழி ஆய்வினை மேற்கொண்ட Dr Caldwell அவர்கள் திராவிட மொழிகளின் திணை, பால் பகுப்பு முறைகளைக் கண்டு வியந்து மிகச் சிறப்பாக அவற்றைப் போற்றுகின்றார். பொருள்களின் இயற்கையான அமைப்பு முறையை அடிப்படையாகக் கொண்டு இப்பகுப்பு முறை எழுந்தது என்பதனை அவர் வலியுறுத்துகின்றார். (The classification of the Gender and Number of Dravidian is the result of human intellect and philosophic outlook of mind)

Dr Caldwell திராவிடப் பால் பாகுபாட்டின் மேன்மையைப் புலப்படுத்துங்கால், "The peculiar Dravidian law of gender . .. would appear to be a result of progressive intellectual and grammatical cultivation"[1] எனக் கூறுதல் காண்க.

இனி, (a) வட மொழி போன்றவற்றில் உயிரில் பொருள்களும், நுண் கருத்துக்களும் ஆண்பால், பெண்பால் இனங்களாகப் பகுக்கப்படுகின்றன. (b) இந்தோ – ஐரோப்பிய மொழிகளில் ஆணினம், பெண்ணினம் என இத்தகு பாகுபாடுகளில் பிரித்துக் கூற முடியாத சொற்களை உணர்த்தும் பொருள்களைப் பால் பாகுபாட்டோடு அமைத்துக் கூறுதல் மிக வியப்பானதொன்றே. இவை போன்ற மொழிகளைக் கற்போர் பகுத்தறிவிற்கு ஒவ்வாத, காரணமற்ற பால் பாகுபாட்டு முறைகளை மனனம் செய்து இடர்ப்படுதலைக் காணலாம். இத்தகைய முறைகள் இடர்ப்பாடு தருவதோடல்லாமல் இயற்கைக்கு மாறுபட்ட நிலையிலும் அமைந்துள்ளன (c) ஆனால், Manchu, Mangolian, Turkish, Finnish ஆகிய இந்த மொழிகளில் மேற் கூறியவற்றினின்றும் முற்றிலும் மாறுபட்ட பால் பாகுபாட்டின் அடிப்படையில் எல்லாச் சொற்களும் அஃறிணையாகவே சொல்லப் பெறுகின்றன. கடவுள் (God), ஆடவன் (Man), மங்கை (Woman), கணவன் (Husband), மனைவி (Wife) போன்ற சில சொற்களில் மட்டுமே சித்திய மொழிகளில் ஆண், பெண் பாகுபாடு காணப்படுகின்றது. இத்தகைய மொழிநிலைகளை நோக்கிய பின்னர், திராவிட மொழிப் பாகுபாட்டை ஆராய்ந்தால் அதன் தனிச் சிறப்பு நன்கு புலனாகும். திராவிட மொழிகளில் உயர்திணை, அஃறிணை என்ற இரு பாகுபாடுகளே உள்ளன. இவற்றைத் தெலுங்கு மொழியில் mahāt, amahāt என வழங்குவர். தொல்காப்பியர்,

"உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே
அஃறிணை என்மனார் அவரல பிறவே" (சொல். 1) எனப் பகுத்தறிவின் அடிப்படையில் மிகச் சிறப்பாகப் பாகுபாடு செய்தனர். மக்கட் சுட்டினை உயர்திணையாகக் காட்டுதல் திராவிட மக்களின் – மிகச் சிறப்பாகத் தமிழ மக்களின் – அறிவு நுட்பத்தை உணர்த்தும். அவருக்குப் பின் வந்த நன்னூலார்,

"மக்கள் தேவர் நரகர் உயர்திணை
மற்றுயிர் உள்ளவும் இல்லவும் அஃறிணை" (சொல். 261)

---

[1] Dr Caldwell – A Comparative Grammar of the Dravidian Languages P. 220

எனக் காட்டுகின்றார். இவ்விருவருக்குமிடையே காணப்பெறும் வேறுபாடு பிற்காலத்துத் தோன்றிய மக்களின் மன வளர்ச்சியையே காட்டும். ஆனால், இலக்கணப் பாகுபாட்டில் குறை காணுதல் நேரிதன்று. Dr Caldwell நம் மொழிமரபினை மேற்கொண்டு ஒரு காலத்தில் எல்லாச் சொற்களும் அஃறிணையாகவே இருந்து வந்தன எனக் காட்டித் தம் கொள்கைக்குச் சான்றாக, "இறை", "அரசு", "வேந்து" என இவற்றைக் குறிப்பிடுகின்றார். இப்பழமையான சொற்கள் அஃறிணை வினைமுற்று விகுதியையே (Suffix of the neuter singular) ஏற்று வரப் பிற்காலத்தில் 'அன்' எனும் பால் காட்டும் விகுதியோடு (Pronominal suffix) சேர்ந்து உயர்திணையாக மாறி வந்த வழக்கினைக் காட்டுகின்றார். 'It may indeed be stated as a general rule that all primitive Dravidian nouns are destitute of gender, and that every noun or pronoun in which the idea of gender is formally expressed, being a compound word, is necessarily of later origin than the uncompounded primitives"[2] என்பார் Dr Caldwell.

"இறை வென்றது; அரசு கொண்டது, வேந்து சிறந்தது-" என்ற சொற்றொடர்களை நோக்குங்கால், இறை, அரசு, வேந்து என்பன அஃறிணை வினை முடிபுகளையே கொண்டுள்ளமையை அறியலாம். பின்னர் நாளடைவில் 'அன்' (Masculine singular termination) விகுதி புணர்ந்து, இறைவன், அரசன், வேந்தன் என வழங்கப்படுதலை அறிக. 'அன்' விகுதி போன்றே 'இகர' விகுதி புணர்ந்து, இறைவி, அரசி என்னும் சொல்லாட்சிகள் அமைந்தமையும் நம் மொழி இலக்கண அறிவுக்குப் பெருந்துணை புரியும்.

தற்காலத் தமிழ் மக்களின் பேச்சு வழக்கில் காணப்பெறும் சூரியன், சந்திரன் என்ற சொற்கள் வடமொழிச் சார்பு நிலையாக (Sūryā+an>Suryan; Chandrā+an>Chandran ā+a>a) அமைந்தவை. ஆனால், தூய் தமிழின்கண் ஞாயிறு, திங்கள் என்ற சொற்கள் இப்பொருள்படச் சிறப்பாக விளங்கிய நிலையைக் காலப்போக்கில் நாம் பயன்படுத்தத் தவறி விட்டோம். இவ்வாறு சொற்பொருள் (Semantic theme) நிலையைப் புறக்கணித்தல் அழகுடையதன்று. மலையாள மொழியில் 'பைதல்' என்ற சொல் 'பையன்' என்பது போல 'அன்' விகுதி ஏற்காமல் இன்றும் வழங்கி வருவதும், உயர்திணைக்கண் இருபாலாரைப்

---

[2] Ibid P. 220

பிரிகக ஆண்பைதல், பெணபைதல எனச சொலலுககு முன்ன டையாக ஆண, பெண இவை (prefix) ஏறறு வழஙகி வருவதும மிகச சிறபபானவையே இததிணையோடு சாாநது பாலபாகுபாடு அமைககினறபொழுது உயாதிணையில ஆணபால ஒருமை, பெணபால ஒருமை எனக கொணடு பனமை வழககினைப பலாபாலாகக காடடுதல காணக

அடுதது, அஃறிணையில 'ஆண', 'பெண' என்ற பாலினை ஒழிதது, 'ஒன்று', 'பல' என்ற வழககினைக கொணடு ஒனறன பால, பலவினபால காணுதல் மிகச சிறநத பகுபபாம அஃறிணைப பொருளகளிடையே உயிா உளளவறறுள ஆண, பெண எனற பகுபபைக குறிககத தனிததனிச சொறகள இருநதாலும அவறறை ஆண, பெணணுகக காடடுதல அஃறிணை மரபன்று ஆதலால், அஃறிணைச சொலலுககுரிய விகுதியையே (Neuter termination) காடடுதல தான திராவிட மொழி மரபு. விலஙகு, புள ஆகிய இவறறிடையே ஆண, பெண இவறறைக குறிககத தனித தனிச சொறகள எலலா வறறிறகும காணபபடாமையால பெருமபானமை வழககு நோககி நாம அஃறிணையாகவே கொளளுதல சாலடபொருநதும.

| ஆணபாற பெயாகள | | பெணபாறபெயாகள. | |
|---|---|---|---|
| களிறு<br>சேவல<br>எருது<br>கடுவன | வநதன. | பிடி<br>பேடை<br>பசு<br>மநதி | கணடன |

நீலகிரி மலையில வாழுகின்ற மககள் தஙகள வழககிடையே மிகப பழையதொரு திராவிட இயலபினை நூல வடிவில கொண டுளளாாகள அவாகள மொழியில படாகலைக இடததில உளள சொல் திணை, பால், எண எனும இவறறைக கொளளவிலலை. atham (remote), itham (proximate) எனற சொறகளில முறையே அவன, அவள, அவா, அது, அவை எனபனவற றையும, இவன், இவள், இவா, இது, இவை எனபனவறறை யும வழஙகுகினறனா எனினும, திராவிட மொழிக குடுமபததில தமிழ, கனனடம போனற மொழிகளின் தொடாபால அவன, அவள எனும வழககுகள அமைதலை Dr Pope அவாகள குறிக கினறனா "The pronouns 'avan' and 'aval' are occasionally used but Dr Pope thinks they have been recently introduced from the Tamil and Canarese"[3] என்பா Dr. Caldwell.

---

[3] Ibid. P 222.

C J Beschi என்னும் வீரமா முனிவர் தமது 'Tamul Grammar of Common Dialects' என்னும் நூலின்கண் கூறி யுள்ள கருத்துக்கள் சிந்தனைக்கு நல்ல விருந்தாம். "It seems that in this language, there either is no difference of Gender, or that such difference is not necessary, for as much as, whilst with us (that is in Latin) the Genders are distinguished by the adjectives and articles, the Tamulians distinguish by gender neither adjectives nor articles. Nevertheless, they distinguish the genders by the third person of the verbs, a thing peculiar to this language." [4] என்று கூறுவர்.

மேலே கண்ட அட்டவணையை நோக்கின், திணைப் பகுப்பு முறை வளர்ந்துள்ள நிலை நமக்கு நன்கு புலனாகும். (1) Gond மொழியில் பெண்பால் ஒன்றன் பாலாகவே கருதப் பெற்றது (The joining of the feminine to the inferior is absolute.)

(எ. டு)

(i) 'Gaiki mindsi mattol'. – 'the Gaiki was sleeping' — Male.

(ii) 'Gaike matta ron' – 'the wife of Gaike was at home'. – Female

(iii) 'ron valle bar barri matta' – 'the house was upside down'. – Neuter

இவற்றுள் 'ron' (was) என்பது பெண்பாலுக்கும், பொதுப்பாலுக்கும் உரிய ஒரே வினைப்பாங்காய் அமைந்துள்ளது.

(2) **Kui** மொழியில் அடுத்த நிலையைக் காணலாம். (The assimilation starts from the inferior of the flexion).

(எ. டு) 'aja – ngi' – 'to the mother' – dative of ajā (mother)

ābaki – dative of āba (father)

kōru – tungi – dative of kōru (buffalo).

இவற்றுள் 'tu' என்பது பெண்பாலில் காணப்படாமை அறிக.

---

[4] C J· Beschi – Tamul Grammar of Common Dialects P. 39

(3) Kurukh மொழியில் அடுத்த வளர்ச்சியைக் காணலாம்.

(எ-டு) 'anai' – ai (suffix)–Female
'anaru – ar (suffix)–Epicene plural

(common to masculine and feminine plural). இதனால் பெண்பால் ஒருமை, பெண்பால் பன்மை என்ற பிரிவுகள் நோக்கத்தன.

(4) தெலுங்கு மொழியில் உயர்திணைக்கண் ஆண்பால் பன்மை, பெண்பால் பன்மை எனும் இரண்டும் ஒத்துள்ளன. பெண்பால் ஒருமையும், ஒன்றன் பாலும் ஒத்து நிற்றலை அம்மொழியில் காணலாம். (The plural is equally common to both the genders, masculine and feminine But in the singular the feminine remains attached to the inferior gender )

| | | | | |
|---|---|---|---|---|
| Tamil | 'avan' | — | Telugu | 'vāndu (he) |
| ... | 'aval' | — | ... | adi (she) |
| .. | atu | — | . | adi (it) |
| ... | 'mancidi' – good woman or good thing | | | |

(5) தமிழ் மொழியிலேதான் உயர்திணையில் ஆண் ஒருமை, பெண் ஒருமை, பலர்பால் என்ற பகுப்பும், அஃறிணையில் ஒருமை, பன்மை என்ற பகுப்பும் பொருட்செறிவோடு அமைந்துள்ளமையைக் காணலாம் (Five fold classifications in gender )

தொடக்க காலத்தில் ஆண்பாற் கூறும், ஆண்பால் ஒழிந்த பிற இனமும் (human male or human non-male) இருந்த நிலை படிப்படியாக மாறிப் பலவேறு மொழி பேசும் மக்களிடையே வளர்ச்சி பெற்று இறுதியாகத் தமிழ் மொழியில் காணுமாறு இருதிணை ஐம்பால் மரபுக்கு உயிரூட்டுதல் வியத்தகு ஒன்றே!



# 36. 'எண்கள்'.
## The Numbers.

திராவிட மொழிகளில் ஒருமை, பன்மை (Singular and Plural) என எண் இரண்டே உள்ளன. வட மொழியிலும், அதைச் சார்ந்த மொழிகளிலும் உள்ள இருமை (Dual) என்று ஒன்று திராவிட மொழியில் இல்லை "The Dravidian languages recognise only two numbers, the singular and the plural The dual, properly so called, is unknown, and there is no trace extant of its use at any previous period" [1] என்பார் Dr Caldwell. திராவிட மொழிகளில் திணை, பால் பாகுபாடும், எண் பாகுபாடும் தனிப்பட்டு வேறாக நிற்காமல் கலந்து அமைந்துள்ளன. எண் முறையில் உயர்திணைக்கண் ஆண் ஒருமை, பெண் ஒருமை என்றும், பன்மையில் பலர்பால் என்றும், அஃறிணைக்கண் ஒருமையை ஒன்றன்பால் என்றும், பன்மையைப் பலவின்பால் என்றும் பாகுபாடு செய்வர். ஒருமை எண்ணில் வேறுபாடு காணப்பெறுகிறது. உயர்திணை ஒருமையை ஆண், பெண் என்று பாகுபாடு செய்வது போல் அஃறிணை ஒருமையை அவ்வாறு பாகுபாடு செய்யாமை நோக்கத்தக்கது.

(i) 'உயர்திணை ஆண்பால் விகுதிகள் – Masculine Singular Terminations.'

'அன்', 'ஆன்', 'ஒன்' ஆகிய இவ்விகுதிகள் மூன்றும் உயர்திணை ஆண்பால் விகுதிகளாகக் கூறப்பெறுகின்றன. இவை மூன்றும் ஒன்றின் வடிவங்களே. ஒலி நயத்திற்காக (euphony) இவ்வாறு திரிந்தன எனக் கூறுவர். பழங்கன்னடத்தில் 'அனு' என்பதும், புதுக்கன்னடத்தில் 'அம்' என்பதும் விகுதிகளாக அமைந்துள்ளன. தெலுங்கில் 'டு', 'உடு', 'அடு', 'ண்டு', 'உண்டு', 'அண்டு' என்ற ஆறும் விகுதிகளாக அமைந்துள்ளன. மலையாள மொழியில் தமிழைப் போலவே விகுதிகள் காணப்பெறுகின்றன. தெலுங்கில் காணப்பெறும் வடிவங்கள் 'அன்' என்பதன் திரிபுகளே. தமிழிலுள்ள 'மகன்' என்ற சொல் 'மகண்டு' (அ) 'மகடு' என்று மாறும்.

மக + அன் > மகன் (Tamil)

மக + ண்டு > மகண்டு
மக + டு > மகடு (Telugu)

[1] Dr Caldwell — A Comparative Grammar of the Dravidian Languages. P. 222.

தமிழிலும் 'பெண்' என்ற சொல் 'பெண்டு', 'பேடு' என அமைதல் காணக. தமிழில் காணப்பெறும் 'அவன்' என்ற ஆண்பால் சுட்டுப்பெயர் தெலுங்கில் 'வாடு' (அ) 'வாண்டு' எனத் திரியும்.

Masculine Singular.

| | | | |
|---|---|---|---|
| I | Tamil and Malayalam | an̲, ān̲, ōn̲ | |
| II | Old Kannada | anu | –u (euphonic vowel due to the influence of Telugu) |
| | Mod Kannada | am | |
| III | Telugu | ḍu, nḍu | Tamil – an̲ > –ḍu, nḍu |
| | | nḍu, unḍu | → assimilation of the initial and the final consonants |
| | | aḍu, anḍu | → an̲ (Ta) > aḍu–change in the suffix |

(ii) 'பெண்பால் விகுதிகள்–Feminine Singular Terminations'

தமிழ் மொழியில் 'அள்', 'ஆள்', 'இ' என்பன பெண்பால் விகுதிகளாக வரும். தெலுங்கிலும், கோண்டு மொழியிலும் பெண்பால் எனும் ஒரு பகுப்பு இல்லை எனக் கருதுகின்றனர். தெலுங்கு மொழியில் பெண்கள் பலரைச் சுட்டும்போது பலர் பாலில் அழைக்கக் கூடுதலும் உண்டு (**Feminine plural–classified under the epicene plural-mahat**) ஆனால், தனிப்பட்ட ஒருத்தியைக் குறிக்கும் பொழுது உயர்திணையாகக் கொள்ளாமல் அஃறிணை ஒன்றன் பாலாகக் கருதுகின்ற வழக்கு அங்குக் காணப்பெறுகிறது. (**Fem singular neuter gender-amahat**). 'அவள் வந்தாள்' என்ற தமிழ்ச் சொல் வழக்கு தெலுங்கில் 'அதி வச்சுனதி' (**adi vaccunadi**) என்று வரும். அஃறிணை ஒன்றன் பாலில் 'நாய் வந்தது' என்பதனைக் 'குக்க வச்சுனதி' (**kukka vaccunadi**) எனக் கொள்வர். இவ்விடங்களிலும் 'அது' எனும் அஃறிணை ஒன்றன் பால் விகுதியிலுள்ள ஒலித்துணையாய் வரும் உகரம் இகரமாய்த் (அது > அதி) திரிந்துள்ளது. ஆனால், 'சீதா வச்சுனதி' என்று கூறும்போது வருகின்ற 'வச்சுனதி' எனும் வினைமுற்றின் ஈற்று இகரம் ஒலித்துணையாக வரும் இகரமா, பெண்பாலையுணர்த்த வல்ல விகுதியாகிய இகரமா என்பது ஆராயத்தக்கது. பெண்பாலை

புணர்த்தும் இகரமாகக் கொள்ளுதற்கும் இஃது இடந்தருகிறது. திராவிட மொழிகளில் எல்லாம், திராவிட மொழிகளுக்குச் சிறப்பாக உரிய திணை, பால் பாகுபாட்டில் ஒன்றாகிய பெண் பால் விகுதி தெலுங்கு, கோண்டு மொழிகளில் மட்டும் இல்லை என்று கொள்ளுதல் பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை அன்றியும், தெலுங்கில் மாலதி (பறைச்சி), சின்னதி (சிறுமி) முதலான சொற்கள் இகரத்தை மிகுதியாகக் கொண்டு விளங்குகின்றன. சில இடங்களில் 'ஆளு' என்ற சொல் செய்யுளிலும், கொச்சைமொழியிலும் விளங்குகிறது. சான்றாக, மனமராளு (manamaraḷu—Grand daughter), கோடலு (மருமகள்—kōḍalu) என வரும்

Fem Singular — atu > atı – euphonic u > i

aḷ, al, i — āḷu – ālu – ḷ > l (free variation)

Telugu uses adi or dı — māla – dı (a paria woman)
chınna – di (gırl)

(iii) 'அஃறிணை ஒன்றன் பால் விகுதி – Neuter Singular Termination'

திராவிட மொழிகளில் முதன் முதலில் எல்லாச் சொற்களும் திணையற்றவையாகவோ, அஃறிணையாகவோ இருந்திருக்க வேண்டும் (Every Dravidıan noun ıs naturally neuter or destıtute of gender) காலப் போக்கில் அவை உயர்திணை, அஃறிணை என்ற பாகுபாட்டை அடைந்திருக்கலாம் இம்முறையில் காணத்தக்க அஃறிணை ஒன்றன் பால் வடிவம், மக > மகவு (Neuter Sıngular) என வர உகரம் சொல் எளிமையாக வந்தது.

maka + an > makan } Neuter } Pronominal
maka + al > makal } noun } + Suffıx an or al

இவற்றுள் 'அன்', 'அள்' என்பன ஆண்பால் ஒருமை, பெண்பால் ஒருமை விகுதிகளாக வருவன உலக வழக்கில் ஆண்பால், பெண்பால் எனும் பகுப்பு இருந்தும், அஃறிணையில் இப்பாகுபாடு இல்லை பறவை, விலங்கு முதலியவற்றில் ஆண், பெண் என்ற பகுப்பு உள்ளது இலக்கண முடிபில் மட்டும் அத்தகைய பாகுபாடு செய்வதற்கு இல்லை மக்கள் கருத்தை விளக்குவதற்காகவே மொழி ஏற்பட்டது, ஆதலால் பால் வேறுபாடு பற்றிய கருத்துக்களை விளக்கச் சில முறைகள் அமைந்துள்ளன.

(1) விலங்கிற்கும், பறவைக்கும் ஆண், பெண் இனங்களைக் குறிக்கத் தனிச் சொற்கள் அமைந்துள்ளன.

(எ. டு) களிறு<br>சேவல்<br>எருது<br>கடுவன் } (ஆண்பாற் சொற்கள்) → வந்தன.

பிடி<br>பேடை<br>பசு<br>மந்தி } (பெண்பாற் சொற்கள்) → கண்டன

(2) பால் விளக்காத பொதுச் சொல்லில், அச்சொல்லின் முன்னர் ஆண், பெண் என்ற பால் விளக்கும் சொற்களைச் சேர்த்தல் உண்டு. சான்றாக, பொதுச் சொல்லாகிய 'யானை' என்பதோடு ஆண், பெண் என்ற சொற்களை முன்னடைகளாகச் (prefixes) சேர்த்து ஆண்யானை, பெண்யானை என வழங்கினாலும் 'வந்தது' என்ற ஒன்றன்பால் வினைமுற்று வடிவமே (Neuter singular finite verb) ஆங்குக் காணப்பெறுதல் நம் மொழி மரபாக நிலவுகிறது. அஃறிணை ஒன்றன் பாலுக்கென வழங்கி வந்த விகுதி 'து' (Neuter singular suffix) என்பதேயாம். 'அது' என்ற பால் காட்டும் விகுதி இந்நிலையிலமைந்து திராவிட மொழி மரபைச் சிறப்பிக்கும்.

### (iv) 'பன்மை உணர்த்தும் முறைகள் — Principles of Pluralisation'

இந்தோ-ஐரோப்பிய மொழிகளின் சொற்களில் ஒருமையும், பன்மையும் தெளிவாய் நிற்கின்றன. இப்பொழுது ஆங்கிலத்தில் ஒருமைக்கும், பன்மைக்கும் பொதுவாக உள்ள sheep, news போன்ற சொற்கள் பண்டைக் காலத்தில் இந்தோ-ஐரோப்பிய மொழிகளில் இல்லை. சித்திய மொழிகளில் ஒருமைக்கும் பன்மைக்கும் உள்ள வேறுபாடு சொற்களில் பெரும்பாலும் இல்லை (In Scythian the number is generally left indefinite). திராவிட மொழிகளின் அமைப்பு ஒருமை, பன்மைகளைப் பொருத்த வரையில் சித்திய மொழி அமைப்புக்கு ஒப்ப அமைந்துள்ளது. அஃறிணைச் சொற்களைப் பொருத்தவரை திராவிட மொழிகளுக்கும் சித்திய மொழிகளுக்கும் யாதொரு வேறுபாடும் அதில் இல்லை. "With respect to principles of pluralisation, most of the Dravidian tongues differ considerably from the Indo-European family, and accord on the whole with the languages of the Scythian stock"[2] என்பார் Dr Caldwell. எடுத்துக் காட்டாக, தமிழி

[2] Dr Caldwell— A Comparative Grammar of the Dravidian Languages. P. 232.

ழுள்ள அஃறிணைப் பெயர்ச் சொற்கள் பன்மையை உணர்த்தும் 'கள்' விகுதி இன்றியே விளங்குகின்றன. தொல்காப்பியர் 'கள்' விகுதி (Plural suffix) சேர்த்துக் கொள்ளும் இடமும் உண்டு என விரித்ததால் பழமையான முறை இன்னதெனத் தெளிவாகத் தெரிகின்றது. நாட்டுப்புற மக்கள் 'கள்' விகுதியின்றி அஃறிணைச் சொற்களை வழங்குவதால் இவ்வுண்மை நமக்குப் புலனாகும். செய்யுள் நடையுள்ளும் புலவர்கள் 'கள்' விகுதியைப் புறக்கணித்தே வந்துள்ளனர். இத்தகைய அஃறிணைச் சொற்களை இலக்கண நூலார் 'பால்பகா அஃறிணைப் பெயர்' என்பர்.

"பால்பகா அஃறிணைப் பெயர் பாற்பொது மைய"–நன். 281

இந்த இலக்கண மரபு பிற திராவிட மொழிகளைக் காட்டிலும் தமிழிலேயே என்றும் மாறாமல் விளங்குகிறது. திராவிட முதன் மொழியின் இயல்பை விளக்கவல்லது பண்பட்ட தமிழேயாம் எனும் கொள்கையை வலியுறுத்தும் சான்றுகளில் இதுவும் ஒன்றாம்.

(1) (எ. டு.)

| | |
|---|---|
| மாடு வந்தது –Singular<br>மாடு வந்தன.–Plural | The plural suffix 'அ' denotes the number distinction |
| ஒரு மாடு வந்தது.–Singular<br>பத்து மாடு வந்தன.–Plural | Numerical words as adjectives denote the numbers. |

இவ்வாறு பால்பகா அஃறிணை வடிவில் சொற்கள் உருவாகி அமைந்துள்ள நிலையை நாம் காணலாம். பின்னைய எடுத்துக் காட்டில், எண்ணுப் பெயரடைகள் (Numerical adjectives) பெயருக்கு முன்னின்று அதன் ஒருமை, பன்மை நிலையைக் காட்டுகின்றன.

(2) தெலுங்கு மொழியில் அஃறிணைச் சொற்கள் எல்லாம் பன்மையை உணர்த்தும்; பேச்சுத் தமிழில் அஃறிணைப் பெயர்ச் சொற்களைப் போலவே அஃறிணை வினைச் சொற்களும் ஒருமை பன்மைகளை உணர்த்தாமல் நிற்கின்றன.

| | |
|---|---|
| (எ. டு.) ஓர் எருது வந்தது. – Singular<br>பத்து எருது வந்தது – Plural | No change found in the usage of P suffixes But the numerical words denote the numbers. |

(3) எதிர்கால வினைமுற்றுக்களைப் பொருத்தவரை இலக்கியத்திலும் இம்முறையைக் காணலாம்.

(எ-டு.) ஓர் எருது வரும் —Singular
பத்து எருது வரும்.—Plural
} The predicate forms are common with regard to the usage in the future tense

(4) திராவிட மொழிகளில் உயர்திணைப் பன்மையை உணர்த்தும் விகுதியும், அஃறிணைப் பன்மையை உணர்த்தும் விகுதியும் வேறுபடுதல் திராவிட மொழியின் மற்றொரு சிறப்பியல்பாகும்.

'அர்' ( -ar) —Epicene Plural.
'அ' ( -a) —Neuter Plural

ஒன்றுக்கு வழங்குவது மற்றொன்றுக்கு வழங்குவதில்லை. ஆனால், சில இடங்களில் மட்டும் இம்முறை மாறிவருதலும் உண்டு.

நரி+ஆர்>நரியார் வந்தார். (Neuter Noun+Suffix of the Epicene Plural) அஃறிணைப் பொருள் உயர்திணை முடிபை ஏற்று வருதல் காண்க. இங்கு அஃறிணைச் சொல் உயர்திணைப் பலர்பால் விகுதியாகிய 'ஆர்' என்பதனைப் பெற்றுள்ளது.

மக்கள் வந்தனர். (மக+கள்>மக்கள்)

இங்கு அஃறிணைப் பன்மை விகுதியாகிய 'கள்' என்பது உயர்திணைக்கண் வந்தது (Plural suffix of the neuter noun is suffixed to the root -maka+kal) தமிழிலுள்ள 'மக்கள்' என்பதற்கு நேரான தெலுங்கு மொழியின் பலர்பாற் சொல் 'மகரு' என்பதாகும் (makkal>makaru) இச்சொல்லில் அஃறிணைப் பன்மை விகுதியாகிய 'லு' (lu) என்பது இடம்பெறவில்லை. ஆனால், உயர்திணைப் பலர்பால் விகுதியாம் 'அர்' என்பதன் திரிபாகிய 'ரு' (ru) என்பது வந்துள்ளது. இங்கிலே திராவிட மொழி இயல்புக்கு ஒத்தது (-ar> -ru→Metathesis form.)

(5) தமிழில் 'அவர்' முதலான சொற்கள் உயர்திணை ஒருமையை உணர்த்தும் (Honorific Singular) சொல்லாகவும் வருகின்ற வழக்கு உண்டு.

(எ-டு.) அவர் ஓர் அறிஞர் (-ar→Honorific Singular).

உயர்சொற் கிளவியினின்றும் பன்மையை வேறு படுத்தும் பொருட்டு 'அர்' விகுதியோடு 'கள்' விகுதியைச் சேர்த்துக் கூறினர்.

(எ.டு.) அவர்கள் அரசர்கள் (–ar + kal > Double plural forms)
எனவே, தமிழ் மொழியுள் உயர்திணைப் பன்மைச் சொற்கள் இருவகை ஆயின.

(7) சிலவிடங்களில் இரண்டு பன்மை விகுதிகள் அமைந்த உயர்சொற் கிளவி காணப்படும்.

(எ.டு.) 'தலைவர் அவர்கள்' என்ற சொல்லாட்சியுள் 'அர்', 'கள்' என்ற இரு பன்மை விகுதிகள் அமைந்திருப்பினும், அஃது ஒருமையாகத் தான் விளங்குகின்றது. தற்காலத் தெலுங்கிலும் இவ்வாறு இருவகைகள் உள்ளன.

| | |
|---|---|
| **vāru** – வாரு – உயர்திணைப் பன்மை | – **ar + kal >** |
| **vārulu** – வாருலு – தற்காலத் தெலுங்கு | **ru+lu** |

(8) மலையாளத்தில் 'அவர்' உயர்திணைப் பலர்பால்; 'அவர்கள்' உயர்சொற் கிளவியாக உயர்திணை ஒருமையை உணர்த்தும்.

(9) ஆசிரியன்மார், தாய்தந்தைமார் என்பனவற்றில் உயர்வைக் குறிப்பதற்காக நாம் 'மார்' என்ற விகுதியை மிகையாக வழங்குகின்றோம்.

(10) மலையாள மொழியுள் உயர்வைக் குறிப்பதற்கு இந்நிலையைக் கையாளுகின்றனர்.

(எ.டு.) கள்வன்மார்.

**Plural forms – Terminations**

Tamil & Malayalam — ar, ār, ir, īr, a, mār.

Telugu & Kannada — aru, are, ēru, ru, ri.

(Epicene plural)

| | |
|---|---|
| **Tamil – kal, a** | (Neuter plural) |
| **Telugu – lu** | |

"The number of Tamil nouns, especially a neuter noun, is ordinarily indefinite; and it depends upon the the connection whether any noun is to be regarded as singular or plural It is true that when more persons than one are referred to, the high caste or rational pronouns that are used are almost invariably plural and that even neuter nouns themselves are sometimes pluralised, especially in polished prose compositions, but the poets and the peasants, the most faithful guardians of antique forms of speech, rarely pluralise the neuter, and are fond of using the singular noun in an indefinite singular-plural sense, without specification of number, except in so far as it is expressed by the context"[2] என்று Dr. Caldwell கூறும் கருத்து நம் மொழியின் பன்மைபுணர்த்தும் முறையைத் தெளிவுறுத்துதல் காண்க.



[2] Dr. Caldwell - A Comparative Grammar of the Dravidian Languages P. 232

# 37. 'வேற்றுமை'.
# The Cases.

உலகப் பெரு மொழிகளில் வேற்றுமை என்ற ஒன்று இலக்கண மரபிடையே சிறந்து விளங்குகின்றது. தனிப்பட்ட ஒரு பெயர்க்கும், அதனை அடுத்துள்ள பிறிதொரு சொல்லுக்கும் இடையேயுள்ள வேறுபட்ட தன்மையை எடுத்துக்காட்டுவதே வேற்றுமை (A grammatical category by means of which the relation of a noun to another word is expressed) எனப்பெறும். இந்தோ - ஐரோப்பிய மொழிகள் வேற்றுமைப் பொருளை உணர்த்துங்கால் தனியே எடுத்துக்காட்டாமல் சொற்களோடு உடன்பிணைந்த நிலையில் உணர்த்தி நிற்கின்றன. இதனை ஆங்கிலத்தில் 'Inflexional Terminations' என்பர். அம்மொழிகளின் வேற்றுமைப் பொருளை உணர்த்த முன்னடைகள் அமைந்துள்ளன. சான்றாக, 'Cut it by a knife' என்ற சொற்றொடரிலும், 'He came with Raju' என்ற சொற்றொடரிலும் வேற்றுமைப் பொருளை உணர்த்தத் தனிப்பட்ட உறுப்புகள் அமையாமல் 'by', 'with' என்னும் முன்னடைகளே (prepositions) காணப்பெறுகின்றன. ஆனால், சித்திய மொழிக் குடும்பங்களில் இதற்கு முற்றிலும் வேறுபட்ட நிலையில் பின்னடைகள் பயன்படுத்தப் பெறுகின்றன. அப்பின்னடைகளை (post-positions) நாம் எளிதாக நீக்கிப் பகுத்தறிய இயலும். இச்சித்திய மொழியும், திராவிட மொழிகளும் இவ்வமைப்பில் ஒன்றுபட்டு விளங்குகின்றன. Dr Caldwell அவர்கள் திராவிட மொழிகளில் காணப்பெறும் வேற்றுமை நிலைகள் சித்திய மொழியோடு ஒன்றுபட்டு அமைகின்றன எனக் காட்டுகின்றார். இத்திராவிட மொழிகளில் காணப்படும் வேற்றுமை உருபுகள் எளிதாகப் பிரிக்கப்படுவனவாகவும், பின்னடைகளாகவும் அமைந்து பெயர்ச் சொற்களோடு இணைக்கப் பெறுகின்றன. "On turning our attention to the Dravidian languages we find that the principle on which they have proceeded in the formation of cases is distinctively Scythian All case-relations are expressed by means of post-positions or post-positional suffixes Most of the post positions are, in reality, separate words"[1] எனும் அவர் கருத்தினை நன்கு நோக்குக. Dr. Caldwell - இன் கருத்துப்படி மிகத் தொன்மையான

---

[1] Dr Caldwell. — A Comparative Grammar of the Dravidian Languages P 253

காலத்தில் வேற்றுமைப் பொருளை யுணர்த்தச் முழுச்சொற்களே வழங்கப்பெற்று இருத்தல் வேண்டும் என்றும், பிற்காலத்தில் அச்சொற்கள் மருவியும், திரிந்தும் உருபுகள் (case-signs) என்னும் நிலையை அடைந்திருக்க வேண்டுமென்றும் கூறுகின்றார். இனி, இந்தோ-ஐரோப்பிய மொழி இனங்களில் ஒருமை, பன்மை என்ற எண் வேறுபாட்டிற்கு ஏற்றவாறு வேற்றுமையுருபிலும் வேறுபாடு காட்டப்பெறுகின்றது (Indo-European languages—the case endings of the plural differ from those of the singular) அவற்றில் வேற்றுமையுருபுகள் ஒருமை, பன்மை என்ற இரு நிலைகளை ஏற்றல் பெருவிப்பவே. ஆனால், சித்திய மொழிக் கூறுகளில் ஒருமை, பன்மை என்ற இரு எண்களுக்கும் ஒரே வகை வேற்றுமையுருபுகள் தாம் காட்டப்படுகின்றன (Scythian languages - same case - signs are employed both for singular and plural) திராவிட மொழிகளில் இத்தகைய நிலை அமைந்திருந்தல் மிகச் சிறப்பாகக் காணத் தக்கது.

**வேற்றுமை முறையமைப்பு — Principles of case formation.**

திராவிட மொழிகளின் ஒப்பியன் மொழியிலக்கணத்தினை அறுதியிட்டுக் கூறும் Dr Ca'dwell தம் கருத்துக்கு எட்டிய அளவில் சில குறைகளைக் குறிப்பிடுகின்றார். அவர் கருத்துப்படி மிகப்பண்பட்ட தொன்மையான தமிழில் இலக்கண மரபை உருவாக்கியவர்கள் இவ்வேற்றுமை பற்றிய நிலையில் வடமொழியைப் பின்பற்றிப் பாகுபாடு செய்தமையால் தீங்கு செய்தனர் எனக் காட்டுகின்றார் (The Tamil Grammarians have done much havoc to their case-system by following the Sanskrit model) இத்தகைய நிலைமை எழுந்ததற்குரிய காரணங்களை மொழியியலை ஆராய்வோர் காணல் நன்று. Dr. Caldwell ஒப்பியன் மொழி இலக்கணம் எழுதுங்கால், தமிழில் முதன்மை இலக்கணமாம் தொல்காப்பியத்தைப் பற்றி அறிந்து இருக்கவே வழியில்லை. அவருக்குச் சிறந்த துணையாகவும், வழியாகவும் நின்றது பவணந்தியாரின் நன்னூலே.

தொல்காப்பியர் சொல்லதிகாரத்தில் வேற்றுமையியல், வேற்றுமை மயங்கியல் விளிமரபு என மூன்று இயல்களை வகுத்து மிகத் திறம்பட எழுதியுள்ளார். ஆனால், நன்னூலாரோ சொல்லதிகாரத்தின் பெயரியலில் சில நூற்பாக்களைக் கொண்டு இவ்வேற்றுமைகளை விளக்குகின்றார். தொல்காப்பியர்,

"வேற்றுமை தாமே ஏழென மொழிப" (சொல். 62) என்று பிறர் கூற்றுக்குக் காட்டித் தம் கால வழக்கையும் நோக்கி,

"விளி கொள்வதன்கண் விளியோடு எட்டே" (63) எனக் கூறியுள்ளார். அன்றியும், எழுவாய் வேற்றுமை, விளி வேற்றுமை என முதல்வேற்றுமையையும், எட்டாம் வேற்றுமையையும் இவ்வாறு பெயரிட்டு, எஞ்சிய வேற்றுமைகளைச் சுட்டுங்கால்,

"இரண்டாகுவதே ஐயெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி" (71)
"மூன்றுகுவதே ஒடுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி" (73)
"நான்காகுவதே குவ்வெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி" (75)
"ஐந்தாகுவதே இன்னெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி" (77)
"ஆறுகுவதே அதுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி" (79)
"ஏழாகுவதே கண்ணெனப் பெயரிய வேற்றுமைக்கிளவி" (81)

என இரண்டாம் வேற்றுமை முதல் ஏழாம் வேற்றுமை வரை உருபுகளைக் கொண்டே பெயரிடுகின்றார். இத்தகைய சிறந்த பாகுபாட்டு முறை Dr Caldwell அறியாத ஒன்று. அவர் நன்னூலாரைப் பின்பற்றி இரண்டு, மூன்று, நான்கு எனப் பெயரிட்டுள்ளமையை நாம் காணலாம். அன்றியும், வடமொழியில் காணப்படுவன எட்டு வேற்றுமைகளே. அவ் வடமொழியில் வேற்றுமைகளைப் பெயரிடுங்கால் முதலாம், இரண்டாம், மூன்றாம் என அமைக்கின்றனர். சான்றாக,

| | | | |
|---|---|---|---|
| Prathama | Vibakthi | — | Nominative case |
| Dwidiya | ,, | — | Accusative case |
| Trithriya | ,, | — | Instrumental case |
| Chathurthi | ,, | — | Dative case |
| Panchami | ,, | — | Ablative case |
| Shasti | ,, | — | Genitive case |
| Sabthami | ,, | — | Locative case |
| Sambodhana Prathama | | — | Vocative case |

எனப் பாகுபாடு செய்தமை காண்க. இந்தக் காரணங்களால் Dr Caldwell தமிழில் காணப்பெறும் வேற்றுமைகளை வடமொழிச் சார்புடையன எனக் குறிப்பிடுகின்றார். "Tamil grammarians, in following the order of the Sanskrit cases, have also adopted or imitated the Sanskrit mode of denominating them not by descriptive appellations, as dative or ablative, but by numbers They have affixed a number to each case in the same order as in Sanskrit–e g., first case, second case, etc to eighth case"[2] எனல் காண்க.

---

[2] Ibid P. 255.

நம் திராவிட மொழிகளில சிறபபாகத தமிழில மிக நுணணியதாக ஆராயநதால வேறறுமைகள எட்டுககும மேற படடனவாக அமையும. அவற்றிறகுச சான்ருக, நாம் கீழக காணும மூன்று நிலைகளைக காட்டலாம ஒரு தனிப்பட்ட வேறறுமையினகீழ அதறகுரிய பொருளை மட்டும தராமல இருவேறுபட்ட பொருள நிலைகளைச சுட்டிக காட்டவலல வேறறுமையுருபுகளை அமைததல அநதுணைச சிறப்பாகத தோன்றவிலலை (Under one distinct case, two different ideas have been brought out) தமிழில வழஙகப பெறும ஒவ்வொரு வேறறுமையும தனிததனியே பொருள நிலை கொணடு அமைநதுளளது இவ்வாறு பொருள அடிப்படையில வேறறுமையை விளககவலல நிலையிருகக, ஒரு தனிபபட்ட வேற்றுமையின கீழ ஒனறனுகது மேறபட்ட பொருளை உணாததுவதால தமிழின் தனித் தன்மை அழிநதுவிடடது எனக கூறுவா

(1) 'ஆல்' என்ற கருவிப பொருளும (Instrumental), 'ஒடு' என்ற உடனிகழசசிப பொருளும (conjunctive) மூனறும வேற்றுமையின் கீழ நம மொழியில காணபபடுகின்றன ஈணடுக கருவிப பொருளும், உடனிகழசசிப பொருளும வேறு பட்டிருகக, அவறறை ஒரே வேறறுமையின் கீழே கொணாதல அத்துணைச சிறபபுடையதாகத தோன்றவிலலை (The idea is that what is known in English as 'With case' is different from the 'By case')

(2) நீஙகல (Ablative), எலலை (Delimitive), ஒப்பு (Comparative), ஏது (Causative) எனனும் நான்கு வகைப்பட்ட அடிபபடையில் மிகக வேறுபாடு கொணட பொருளகளும ஐநதாம வேறறுமையின்கீழக காணபபெறுகின்றன ஈணடுக காட்டப பெறும நான்கு பொருளகளும எந்த அடிப்படையிலும ஒறறுமை உடையனவாக அமையாமை அறிக அதனோடு அலலாமல ஐநதாம வேறறுமையை 'Ablative case' என நீஙகல பொருளளவில குறிபபது வியப்பானதே

(3) திராவிட மொழிகளில சிறபபாகத தமிழில 'ஆறறு நீர', 'காட்டு வழககு', 'குளததுமீன' எனும சொல வழககுகள வேறறுமையுருபு ஏறகாமலேயே வேறறுமைப பொருளைத தருகினற தனமையை நாம காணலாம. தமிழிலககண நூலாா 'குளததுமீன' முதலான சொறகளில் வேற்றுமையுருபு காணப பெருமையால, அதனை விளகக வேணடி 'அததுச சாரியை உருபுப் பொருளில் வநதுளளது' எனக கூறுவர்.

(Without case-signs but with inflectional increments) ஆனால், எழுவாய் வேற்றுமையையும், விளி வேற்றுமையையும் உருபின்றி வழங்கும் வழக்கம் நமக்கு உடன்பாடு ஆதலாலும், அவ்வேற்றுமைகளை வழங்குங்கால், முதலாம் வேற்றுமை, எட்டாம் வேற்றுமை என எண் அளவில் கொள்ளாது, எழுவாய், விளி எனப் பொருள் அளவால் கொள்வது நமக்கு உடன்பாடு ஆதலாலும், உண்மையான தமிழ் மரபை விளக்க வேண்டிச் சாரியை வேற்றுமை என ஒன்றினை வழங்கியிருந்தால் சிறப் பாகத் தோன்றுமே! அஃதாவது, உருபேற்காமல் சாரியையே அந்த உருபின் பொருளை விளக்குவதால் சாரியை வேற்றுமை (Inflectional case) என ஒன்றினை வகுத்திருக்கலாம். இக் காரணங்களால் Dr Caldwell எட்டு வேற்றுமைகளுக்கு மேலாகப் பொருள்நலம் விரித்து 'இலக்கண மரபை அழகு செய்ய வழி யிருந்தும் தமிழிலக்கண நூலார் வட மொழியை ஒட்டி வேற்றுமை எட்டே' எனும் கோட்பாட்டிற்கு உடன்பட்டனர் எனக் குறை கூறுகின்றார்

திராவிட மொழிகளுள் தமிழ் மொழியானது மேலே கூறிய வாறு ஒருவகை மரபுக்கு உடன்பட்டிருந்தாலும் தன் தனித் தன்மையை இழந்து விடவில்லை வடமொழியினின்றும் முற்றி லும் வேறுபட்ட இலக்கணச் சிறப்போடு நம் தமிழ்மொழி தனிப் பட்ட மாண்புகளையும் தாங்கியுள்ளது அவற்றை நிரலே காண்போம்.

I வட மொழியில் எண்ணும், வேற்றுமையும் இணைந்து ஒரே வகை இடைச்சொல்லால் பொருள் தரும். (Number and case are expressed by the same particle) தமிழ் மொழியில் திணை, பால், எண் என்பன ஒன்றாக இணைந்து செல்ல (Gender and number go together), வேற்றுமைப் பொருளோ தனிப்பட்ட குறியீட்டைப் பெற்று (distinct separate sign) பின்னடைகளாக (post-positional suffixes) இணைக்கப்பெறும்

Sanskrit – Rama — Noun form

Rama + am (Accusative case sign – ஐ of Tamil)

Ramam — Singular form–Rama+am, a+a > a

Ramou — Dual form – Rama+am, a+a > ou

Ramanu – Plural form–Rama+am, a+a > V̄nu

ஆனால், தமிழ்மொழியில் ஒருமை, பன்மை என்ற இருவகை நிலை

களிலும் வேற்றுமையுருபு எத்தகைய மாறுபாட்டையும் பெறுவதில்லை

N+Ø+C S   Noun+Case Sign
N+P S +C S   Noun+Plural Suffix+Case Sign.

(குறிப்பு Ø — ஒருமைக்கு உருபில்லை என்று உணர்த்தும் zero morpheme)

பெயர் ஒருமையாக இருந்தால் கண்+ஐ என நின்று 'கண்ணை' எனப்புணரும் பெயர் பன்மையாக இருந்தால் 'கண்+கள்+ஐ' என நின்று பெயரோடு பன்மை காட்டும் விகுதி (Plural Suffix) சேர்ந்து உருபினை ஏற்றுக் 'கண்களை' என்று புணரும் "In the singular, the case-postpositions are appended directly to the nominative, which is identical with the base, in the plural they are appended, not to the nominative or base, but to the particle of pluralisation which has been suffixed to the base"[3] என்று Dr. Caldwell அவர்கள் குறிப்பிடுவதில் இக்கருத்து நன்கு புலப்படுவதை அறிக

II வடமொழியில் பெயரைப் போலவே பெயரடையும் உருபேற்கும். ஆனால், தமிழில் பெயரடைகள் பெயரைப்போல வேற்றுமையுருபு ஏற்கமாட்டா (Sanskrit declines its adjectives as well as nouns Tamil does not decline its adjectives)

அழகு மகள் — பெயரடையோடு சேர்ந்த பெயர் வடிவம் (Adj+Noun)
அழகு மகளை — மகள்+ஐ எனப்பெயர் மட்டும் உருபேற்று நிற்றல். (Adj+Noun+C S)

இவ்வெடுத்துக்காட்டில், 'அழகு' எனும் பெயரடை வடிவம் (Adj-form) உருபேற்காமை காண்க ஆனால், வடமொழியில் 'Sundarī narī' (Beautiful woman) என்பது எழுவாய் வேற்றுமை வடிவம் இது செயப்படுபொருள் வேற்றுமையாக மாறவேண்டுமென்றால் பெயரடையும் பெயர்போல உருபேற்க வேண்டும் (Sundarī+am; Nārī+am) 'am' என்ற உருபேற்ற வடிவம் Sundarīm Nārīm எனக் காணப்பெறும் ( i+a>ī - V+V>V̄ — >To avoid vowel cluster).

[3] Ibid P 253

III தமிழமொழியில சாரியை பெறுதல எனவொன்று (Inflectional increment) சிறபபாக அமைநதுளளது. ஆனால, வடமொழியில அததகைய அமைபபே இலலை

IV வடமொழியில தனிபபெயருககும முதல வேற்றுமைக் கும வேறுபாடு உணடு அதாவது முதல வேறறுமையும உருபேறறு நிறகும ஆனால, தமிழில முதல வேறறுமைப பெயர எததகைய வேறுபாடும இலலாமல ஒரே நிலையாகக காணபபெறும தமிழிலககணம,

"எழுவாய வேறறுமை பெயர தோன்றும நிலையே"
(தொல சொல 65) எனக கூறும

C J Beschi என்னும வீரமாமுனிவர பெயர்கள உருபேறறலைப (Declension of Nouns) பற்றிக குறிபபிடுஙகால, தமிழின நீரமையை நனகு விளககுதல காணக "The nouns themselves reckon eight cases, which, by a common term, the Tamulians call வேறறுமை, and they name them from the form of the termination; (e g ) the accusative, since it ends in 'ai', is called ஐயெனனும வேறறுமை; and so of the rest· except however the nominative, which they call பெயர (i e) the noun, and the vocative, which they call விளி வேறறுமை (i e) the case of calling from the verb விளி to call[4] என்பர அவர் எனவே Dr Caldwell அவர்கள் தொன்மைத தொலகாபபியத தைத தழுவாமல பிறறைய நன்னூலையே பின்பறறிச சில குறை நிலைகளை எடுததுக காட்டுகின்றார வேறறுமைப பொருளைப பிரிககுஙகால, இருவகை வழககுகளையும தம கருததில கொணடு சில உணமைகளை விளககுகினற அவர அறிவு போறறற் குரியதே



[4] C J Beschi — Tamul Grammar of the Common Dialects P. 25.

# 37 (a) 'திராவிடமொழிகளின் வேற்றுமையுருபுகள்'.
# The Dravidian Case-Signs.

திராவிட மொழிகளில் எழுவாய் வேற்றுமையிலும், விளி வேற்றுமையிலும் உருபுகள் இணைக்கப் பெறுவதில்லை. வட மொழியில் காணும் 'அம்' (am) என்ற இரண்டாம் வேற்றுமை யுருபைச் சேர்த்து 'பாபம்' (pābam), 'குணம்' (gunam) என்பன வற்றை இரண்டாம் வேற்றுமையாகக் கொள்ளலாகாது. தமிழில் 'அம்' என்பது படர்க்கைப் பொருளின் விகுதியாக (neuter suffix) வரும். 'மரம்', 'இலவம்' முதலிய சொற்களோடு வேற்றுமையுருபுகள் சேர்ந்து 'மரங்களால்', 'இலவங்களால்' என வருவதால் 'அம்' என்பதனை வேற்றுமையுருபாகக் கொள்ளப் படுவதற்கு இல்லை.

(1) 'அம்'—படர்க்கை விகுதியாக நம் மொழியில் வழங்கப் பெறுகிறது.

(2) ஈருயிரிடையே பகரம் வரின் தமிழில் வகரமாக மாறும். [-p->-v-]

(3) மரம் என்ற சொல்லில் காணப்பெறும் 'அம்' என்பது வடமொழி இரண்டனுருபு அன்று.

அன்றியும், தமிழ் மரபுப்படி, பெயர் + பன்மை விகுதி + வேற்றுமை யுருபு (N+P. S +C S) என இவ்வாறு அமைவதே நம் வழக்குச் சான்று. 'மரங்களால்' – 'அம்' என்பது வடசொல் உருபென்றால் இவ்விடுத்துக்காட்டில், பெயர் + இரண்டனுருபு + பன்மை விகுதி + மூன்றனுருபு (Noun+2nd C S +Plural Suffix+3rd C S. – என இவ்வாறு அமைதல் மொழி வழக்கன்று. எனவே, 'அம்' படர்க்கை விகுதியே திராவிட மொழியில் முதலாம் வேற்றுமை எழுவாய் வடிவமே பெயரே உருபேலாது பொருளைத் தரும். "The Dravidian nominative singular is simply பெயரே, the noun itself–the inflectional base of the noun–without addition or alteration"[1] என்பர் Dr Caldwell

[1] Dr. Caldwell – A Comparative Grammar of the Dravidian Languages. P 255

## -: THE DRAVIDIAN CASE SIGNS :-

| Cases | Tamil | Malayalam | Telugu | Kannada |
|---|---|---|---|---|
| Nominative | ∅ | ∅ | ∅ | ∅ |
| Accusative | ai | e<br>(a–Gundert) | nu, ni<br>i] ni; elsewhere nu | am (O K)<br>a, annu<br>am < annu (Dr C) |
| Instrumental/ Conjunctive | an otu<br>al otu (utan) | al otu (utan)<br>otu | ceta (or) ce<br>ce < ceyi (hand)<br>(totu) | im (O.K) inta (N K)<br>im, inta < in (Ta 5th C S.) (utane) |
| Dative | ku | kku<br>innu, nu, u | ku, ki<br>–i] ki; elsewere ku<br>ge, kke | ge, ke |
| Ablative | in/il | in | (Metathesis form)<br>ni | im (O. K.)<br>inta (M K) |
| Genitive | atu<br>(Sing) a (Plu)<br>atu | atu, a<br>re, inte, inre,<br>te (Sing), ute (Plu) | a<br>ti < ati | a / a<br>atu |
| Locative | kan, kal, il, ul, etc<br>(words denoting location) | kan | lo<br>(antu) | ol (O K.)<br>alli, illi (M K) |
| Vocative | ∅ | ∅ | ∅ | ∅ |

| Cases | Tamil | Malayalam | Kannada | Telugu |
|---|---|---|---|---|
| Nominative | maram | maram | maram | gurramu<br>gurram |
| Accusative | marattai<br>marattinai | marattına<br>maratte | maramam<br>maravam<br>maranam | gurramunu<br>gurrannı<br>gurram |
| Instrumental | marattal<br>marattınal / an<br>marattodu | marattal<br>marattotu | maradım<br>maradındam | gurramuna<br>gurrana<br>gurramuto |
| Dative | marattırku | maratthınnu | marake<br>marakke | gurramunaku<br>gurranaku |
| Ablative | marattin | marattıl nınnu | maradattanım | gurıamundı |
| Genitive | (S) marattınatu<br>(P) marattına | marattındra<br>marattınuda | marada<br>marada | gurramu<br>gurramuyokka |
| Locative | marattınkan<br>marattil<br>marattınil | marattıl | maradol<br>maradol | gurramandu<br>gurrmunandu |
| Vocative | marame | marame | mara, mara,<br>marame | gurrama |

Tamıl, Malayalam, Kannada } மரம் 'maram'     Telugu 'gurram' குதிரை     maram>mranu (Metathesıs form)     (Thıs ıs ırregular ın Telugu Hence another word - Dr Caldwell)

இரணடாம வேறறுமையுருபாக ஐகாரம் (ai) வரும இதனைச செயபபடுபொருள வேறறுமையாகக கொளவா மலையாளததில எகரமும (e), Dr. Gundert கருததினபடி அகரமும (a) உருபுகளாக வரும தெலுங்கு மொழியில றறில இகரம வநதால 'ணி' (ni) என்பதும, பிறவிடஙகளில 'னு' (nu) என்பதும உருபுகளாக வநத சனனட மொழியில 'அம' என்ற பழங்கனனட வடிவமதான 'அனனு' (annu) என வரும (The 'nu' can be explained as a remnant and resultant of the Canarese form 'annu')

மூனறும வேறறுமைககுத தொலகாபபியா 'ஒடு' (otu) என்ற உருபினைக காடட, வீர சோழியமும, நனனூலும 'ஆல' (āl) ஓடு (ōtu), உடன (utan) என்பன வறறையும கூறுகின்றன. தெலுங்கில காணபபெறும 'சே' (ce) என்பது 'செய' என்பதன் திரிபேயாகும (ce<ceyi) தமிழ, மலையாளததில காணபபெறும 'உடன்' (utan) எனும சொலலுருபுககு ஏறறவாறு தெலுங்கில 'தொடு' (totu) எனபதும, கனனடததில 'இம' (im) என்பதும மூனறும வேறறுமையுருபுகளாம் 'இய', 'இநத' எனபன வறறைத தமிழில ஐநதாம வேறறுமையுருபாகிய 'இன' எனபதன வழியாக வநதவை எனக கொளளலாம (The Tamil word 'இன்' which we find used in connection with the fifth case was probably considered adequate for expressing the third case too வாளால ஆய வடு→ வாளான் ஆய வடு.)

நானகாம வேறறுமையின்கண தமிழில 'கு' (ku) உருபும, மலையாளததில 'இன்னு' (innu), 'னு' (nu), 'உ' (u) என்பனவும காணபபடுகினறன. மொழி வலலார 'இன்னு' எனபதனை 'இஙகு' என்பதன் திரிபாகக கொளவா (innu<inku). இதில் 'இன்' என்பது தமிழில சாரியையாக வழங்கப படுதலைக காணக தெலுங்கில கு, கி (ku, ki) என்பன இவ்வேறறுமையுருபுகளாகக காணபபடுகின்றன நிலைமொழியீறறில இகரவுயிர வரின 'இ' உருபும, பிறவரின் 'கு' உருபும அமையும. பிறவுருபுகளாக 'kke, ge' என்பன தெலுங்கிலும, அவையே நீணடு கனனடத தில் 'gē, kē' என வழஙகபபடுதலைக காணக

ஐந்தாம் வேற்றுமையுருபாகத் தமிழ், மலையாளம் ஆகிய வற்றில் காணப் பெறுவது 'இன்' (in) என்பதேயாம். இந்த 'இன்' என்பது தெலுங்கில் 'ni' என வடிவம் பெற்றுக் காணப் படுகிறது (உயிர் இடம் பெயர்தலாகிய Metathesis என்ற வடிவம்). பழங்கன்னடத்தில் 'இம்' (im) என்பதும், புதுக் கன்னடத்தில் 'இந்த' (inta) என்பதும் ஐந்தாம் வேற்றுமை யுருபுகளாக வரும்

ஆறாம் வேற்றுமையில் நாம் மிகக் வேறுபாடுகளைக் காண இயலாது தமிழில் 'அது' (atu), 'ஆது' (ātu), 'அ' (a) என்பன உருபுகளாக அமையும். மலையாளத்தில் 'அது' (atu), 'ஆ' (ā) என்பனவும், தெலுங்கில் 'அ' (a) என்பதும், கன்னடத்தில் 'அ' (a), 'ஆ' (ā) 'ஆது' (ātu) என்பனவும் உருபுகளாக அமை கின்றன

ஏழாம் வேற்றுமையில் பெரும்பாலும் இடப்பொருளை உணர்த்தும் எல்லா இடைச் சொற்களும் (Particles) உருபுகளாக வருதலைக் காணக். தமிழ், மலையாளத்தில் 'கண்' (kaṇ) என்பதும், தெலுங்கில் 'லோ' (lō) என்பதும், பழங்கன்னடத்தில் 'ஓல்' (ol) என்பதும், புதுக் கன்னடத்தில் 'அல்லி' (alli), 'இல்லி' (illi) என்பனவும் உருபுகளாகக் காணப்பெறுகின்றன

எட்டாம் வேற்றுமையைப் பொருத்த மட்டில் உருபுகள் இல்லாவிடினும் தமிழ், மலையாளம், தெலுங்கு ஆகிய மும் மொழிகளும் ஈற்றுயிர் நீண்டு விளிவேற்றுமைப் பொருளைத் தரும்

(எ-டு.) நம்பி > நம்பீ!
நங்கை > நங்காய்!

"The vocative is formed merely by affixing or suffixing some sign of emphasis, or in certain instances by suffixing fragments of the personal pronouns"[2] என்று Dr. Caldwell கூறுவார் இவ்வாறு திராவிட மொழிகளில் வேற்றுமை உருபுகள் தத்தமக்குரிய பொருள் வகையில் சிறப்புற்றுத் தம் முள்ளே சிறுவகை மாற்றங்களைக் கொண்டு விளங்குகின்றன என்பது வெளிப்படை யன்றோ!

[2] Ibid P 306

# 38. 'பெயரடைகள்'.
# The Adjectives.

உலகில் காணப்பெறும் எல்லா மொழிகளிலும் 'பெயரடை (Adjective) என்ற வடிவம் சிறப்பாகக் காணப்பெறுகின்றது. இந்தோ - ஐரோப்பிய மொழிகளில் இப்பெயரடைகள் பெயர்ச் சொற்களைப் போலவே பால், எண் என்னும் இவைகளை ஏற்று வருகின்றன. ஆனால், சித்திய மொழிகளிலும், திராவிட மொழிகளிலும் அத்தகைய முறை காணப்பெறவில்லை. பெயர்ச்சொற்களோடு ஒன்றுபட்ட அமைப்பில் பண்புப் பெயர்களை ஏற்றுத் (Quality base + Noun) தொடர்பு கொண்டு பெயரடைகள் விளங்குகின்றன. "Dravidian adjeetives, properiy so called, like those of the Scythian tongues, are nouns of quality or relation, which acquire the signification of adjectives merely by being prefixed to substantive nouns without declensional change"[1] என்பார் Dr. Caldwell. தமிழிலக்கண நூலார் இவ்வாறு பெயரடைகளாக வருவனவற்றை உரிச்சொற்கள் (Attributives) என வழங்குவதும் காணத்தக்கதே. வினைமுற்றுக்களின் பெயரெச்ச வடிவங்களே பெரும்பாலும் பெயரடைகளாக வருதலை நாம் காணலாம்.

(எ-டு) வந்த துயர். நொந்த தந்தை — Participles of verbs as adjectives

திராவிட மொழிகளில் பெயரடைகள் கீழ்க்காணுமாறு அமைக்கப் பெறுகின்றன.

(1) பெயரும், பண்பையுணர்த்தும் பெயரும் தாம் நிற்குமிடத்தால் பெயரடையாக அமையும் (Nouns of quality or relation by mere position)

'பொன் அரிது' என்ற சொல்லில் 'பொன்' என்பது பெயர். ஆனால் 'பொன் முடி' என்ற சொல்லில் 'பொன்' எனும் பெயரே மற்றொரு பெயரைத் தழுவுவதால் பெயரடையாக அமைகிறது. இன்னும் சில இடங்களில் நிலைமொழி, வருமொழி ஆகியவை புணர்ச்சி வேறுபாடு கொண்டு 'பொற்சிலை' எனக்

---

[1] Dr. Caldwell — A Comparative Grammar of the Dravidian Languages. P 308.

காணப்படுமாறு போலப் பெயரடையாக வருதலையும் காண்க. 'கருமை' என்ற வண்ணப் பெயர் முதல் நீண்டு, கடைகுறைந்து 'கார்' என நின்று (lengthening of included vowel to compensate the loss of 'u'), 'கார்மேகம்' என அமைதலையும் காண்க. சில பண்பட்ட வழக்குகளில் 'நல்ல' என்ற குறிப்புப் பெயரெச்சம் 'நல்' என நின்று, 'நல்வழி' எனப்படுமாறு போலப் பெயரடைத் தன்மையை ஏற்று நிற்றலைக் காண்க. ஆங்கிலமொழியின்கண் 'It is gold' என்ற சொல்லில் 'gold' என்பது பெயராகவும், 'A gold watch' என்ற சொல்லில் 'gold' என்பது பெயரடையாகவும் அமைதலை ஒப்பு நோக்குக. (It is generally the crude ultimate form of the noun of quality which performs the functions of the adjective in classical compositions)

(2) வடமொழிச் சொற்கள் 'அம்' ஈறு பெற்று நின்று வருமொழியோடு புணருங்கால் 'அம்' ஈறு நீங்க (rejection of final 'am') அச்சொல் பெயரடையாக வருதலைக் காணலாம்.

(எ-டு) சுபம் + தினம் > சுபதினம்

(3) தமிழ் மொழியுள் 'அம்' ஈற்றுப் பெயர்ச் சொற்கள் வருமொழிப் பெயர்களோடு புணருங்கால் அவற்றிடையேயுள்ள உறவினை விளக்கவேண்டி முன்னவை பெயரடைகளாக மாறுகின்றன. அவ்வாறு மாறுங்கால் 'அம்' ஈறு நீங்கி 'அத்துச் சாரியை' பெறுகின்றது. (Displacement of 'am' into 'attu'–an inflectional increment)

(எ-டு) நிலம் + கிளை > நிலத்துக்கிளை

இன்னும் சில விடங்களில் 'ஆன' என்ற வடிவம் ஏற்று,

புண்ணியம் + நாள் > புண்ணியமான நாள் என்று பெயரடை அமைகிறது.

(4) ட, ற என்னும் மெய்கள் முற்றியலுகரமாக வருகின்றபொழுது அவை நிலைமொழியாய் நின்று வருமொழிப் பெயர்களோடு புணருங்கால் ஈற்று ஒற்று இரட்டித்துப் பெயரடையாக மாறுகின்றன (Duplication of final consonants to denote adjectival forms)

(எ-டு) நாடு + பண் > நாட்டுப்பண்.
வயிறு + பசி > வயிற்றுப்பசி.

(5) அத்துச் சாரியை போல 'இன்' (in) சாரியை பெற்றும் பெயரடைகள் அமையும். (Inflexional increment is used for the conversion of substantives into adjectives)

(எ-டு) நிழலின் படம்

(6) வினைத்தொகை இலக்கண வடிவங்களும், பெயரெச்ச வடிவங்களும் பெயரடைகளின் அமைப்பு முறையில் பெரும் பங்கு கொள்கின்றன.

(எ-டு) உயர் மலை — வினைத்தொகை
உயர்ந்த மலை — பெயரெச்சம்.

(Relative participles of verbs and nouns of quality converted into relative participles by the addition of participial formatives, are largely used as adjectives in all the Dravidian languages).

(7) திராவிட மொழிகளில் பெரிய, சிறிய என்ற வடிவங்கள் பெயரடைகளாக விளங்குதல் மிகப் பலவாறாகக் காணப் பெறுகின்றன

(எ-டு) பெரிய மக்கள். / சிறிய மனம் } (By adding 'iya' to the roots)

(8) எதிர்காலப் பெயரெச்ச வடிவங்கள் பெயரடையாக வருதலும் பெரும்பான்மை வழக்கே

(எ-டு) வரும் துன்பம் (V. R. + um → the sign of the relative participle of the future)

(9) வலித்தல், மெலித்தல் விகாரங்கள் செய்யுள் வழக்கில் பெயரடைகளாக அமைதலையும் காணலாம்

(எ-டு) இரும்பு + கோல் > இருப்புக்கோல். (m > p)
மருந்து + பை > மருத்துப்பை (n > t)

(10) எண்ணுப் பெயர்கள் பெயரடைகளாக வருதலும் மிகப் பலவாம்

ஒன்று + மகள் > ஒரு மகள். / இரண்டு + கண் > இரு கண் } (Numerical base + Noun)

என எண்ணுப் பெயர்கள் அவ்வாறே நில்லாமல் புணர்ச்சி வேறுபாட்டிற்கு ஏற்றவாறு மாற்றம் பெற்று நிற்றலைக் காண்க.

இவ்வாறு திராவிட மொழிகளில் பெயரடைகள் உருவாகி நிற்றல் மிகத் தொன்மை வழக்காக இயங்கி இலங்கி வருதலைக் காண்க.

# 38. (a) 'உரிச் சொற்கள்'.
# The Attributes.

நம தொன்மை இலககணம் உரிச சொற்கள என்னும ஒருவகைப பாஙகினைச சீரிய நிலையில் விளககும. இவற்றை நாம பெயரடைகளின் நிரலில காணபது ஒரு வகையில நேரிது பெயாகடகு அடையாக வநது அமைநது சிறபபுறுதலைப போலவே, இவை வினைச சொற்கட்கும அடையாகவந்து மாண புறுதலை நாம காணலாம சொலலாடசியில் ஒருவகை அழகு நாடடம இருததல நநதமிழ மரபு பெயரடைகள (Adjectives), வினையடைகள் (Adverbs) எனனும இலககணக கூறுகள இவ வகையில பெருந்துணை புரியும.

'அன்பு நெஞசம' என்பதில் 'அன்பு' எனனும பணபுப பெயா 'நெஞசததிற்கு' அடையாக நினறு பொருட சிறபபை மிகுவிககிறது

'நனி நன்று' என்பதில் 'நனி' எனும உரிச சொல் (Attribute) 'நன்று' என்னும குறிப்பு வினை முற்றுக்கு வினை யடையாக நினறு பொருடசிறபபை ஊடடுகினறது.

தொலகாபபியம வினைககும், பெயருககும அடிச சொற களாக அமைகின்ற சொற்கள் என்றும, ஒரு பொருள் உணாத தும பல சொறகளும, பல பொருள உணாததும ஒரு சொல லும, இசை, குறிபபு, பண்பு இவற்றின அடிபபடையில் எழும சொற்களென்றும கூறும

| | | | |
|---|---|---|---|
| "உரிசசொற | கிளவி | விரிககுங | காலை |
| இசையினும | குறிபபினும | பணபினும | தோன்றிப |
| பெயரினும | வினையினும | மெயதடு | மாறி |
| ஒருசொல | பலபொருடகு | உரிமை | தோன்றினும |
| பலசொல | ஒருபொருடகு | உரிமை | தோன்றினும |
| பயிலாத | வறறைப | பயின்றவை சாாததித் | |
| தததம | மரபிற | சென்றுநிலை மருஙகின் | |
| எசசொல | லாயினும | பொருளவேறு கிளததல" | |

–(சொல 297)

என்பது தொலகாபபியம "Uriccol root according to Tolkāppiyar denotes 'icai'–sound, or 'paṇpu'–the physical qualities

or 'kurippu' – mental conceptions Some of the roots are synonyms, some others polysemes These can occur both as verb roots and noun roots" [2] என்று Dr. தெ பொ மீ. அவர்கள் குறிப்பிடுவர். நன்னூல் பண்புப் பெயராக அமைந்து செய்யுட்குரிய சொல் உரிச்சொல் எனக் கூறும்.

'பலவகைப் பண்பும் பகாப்பெய ராகி
ஒருகுணம் பலகுணம் தழுவிப் பெயர்வினை
ஒருவாச் செய்யுட்கு உரியன உரிச்சொல்'. (442)

என்பது நன்னூல். இருவகை இலக்கண நூலாரும் உரிச்சொற்களைப் பற்றிக் கூறியுள்ள கருத்துக்களை ஒருவாறு வகைப்படுத்திக் காண்போம்.

**தொல்காப்பியம்**

'உறு தவ நனி என வரூஉம் மூன்றும்
மிகுதி செய்யும் பொருள என்ப' (தொல். 299)

**நன்னூல் :**

'சால உறு தவ நனி கூர் கழி மிகல்' (456).

இவ்வாறு மிகுதிப் பொருளை உணர்த்தும் சொற்கள் மூன்று எனத் தொல்காப்பியம் கூற, நன்னூல் ஆறென விரித்துக் கூறும்.

**சான்று :**

நனி – 'வந்து நனி வருந்தினை வாழிய நெஞ்சே'.
(அகம். 19)

| உரிச்சொல் | பொருள். | சான்றுகள். |
|---|---|---|
| உரு | உட்கு | 'உரு கெழு ஞாயிற்று' (புறம் 160) |
| புரை | உயர்பு | 'புரைய மன்ற புரையோர் கேண்மை' (நற்றிணை 1) |
| குரு, கெழு | நிறன் | 'குரு மணித்தாலி' 'செங்கேழ் மென்கொடி' |
| செல்லல், இன்னல் | இன்னாமை | 'மணங்கமழ் வியன்மார்பு அணங்கிய செல்லல்'. –(அகம் 22) |

[2] Dr T. P. Meenakshisundaram – A History of Tamil Language P 75

| உரிச்சொல். | பொருள் | சான்றுகள் |
|---|---|---|
| மலலல் | வளன | 'மலலன் மாலவரை' |
| ஏ | பெறருதல | 'ஏகல அடுககம'. |
| உகப்பு<br>உவபபு | உயர்தல<br>உவகை | 'உவநதுவநது ஆர்வ நெஞச மொடு ஆய்கலன அணி இய'. |
| பயபபு | பயன் | 'பயவாக களரனையா' (குறள். 106) |
| பசபபு | நிறன் | 'மையில் வாண முகம பசப பூநமமே. (கலி 7) |
| இயைபு | புணர்சசி | 'இயைநத கேணமை இலலாகியரோ' (புறம 190) |
| இசைப்பு | இசை | 'வாயில தோன்றி யாழிசை யூபபுகக'. |
| அலமரல<br>தெருமரல | சுழற்சி | 'தெருமரல் உள்ளமொடு அன்னை துஞசாள' |
| மழ, குழ | இளமை | 'மழ களிறு, குழக கன்று' |
| சீாததி | மிகுபுகழ | 'வயககரு சால் சீாததி' |
| மாலை | இயலபு | 'இரவல மாலை யனே' (குறிஞசி. 230) |
| கூர்ப்பு<br>கழிவு | உளளது<br>சிறததல | 'துனிகூா எவவம' (சிறுபாண 39)<br>'சினனே காமம கழி கணணோட்டம' (பதிற்று.22) |
| கதழவு<br>துணைவு | விரைவு<br>காடடல | 'கதழ பரி நெடுநதோ' (நற. 203)<br>'துணை பரி துரககும்'. (அகம். 9) |
| அதிாவு<br>விதிாபபு | நடுககம் | 'அதிர வருவதோா நோய்'. (குறள 429)<br>'விதுப்புறு அறியா ஏமக காபபிணை'. (புறம 20) |
| வாாதல<br>போகல<br>ஒழுகல | நோமை<br>நெடுமை | 'மால வரை ஒழுகிய வாழை'. |
| தீாதல்<br>தீர்த்தல | விடுதல் | 'துணையில தீாநத கடுஙகண் யாணை'. (நற். 108) |

| உரிச்சொல். | பொருள் | சான்றுகள். |
|---|---|---|
| கெடவரல், பண்ணை | விளையாட்டு | 'கெடவரல் ஆயமொடு'. 'பண்ணைத் தோன்றிய எண்ணான்கு பொருளும்' (தொல் மெய்ப்பாடு) |
| தட – கோட்டம் | & பெருமை | 'வலி துஞ்சு தடக்கை'. (புறம் 394) |
| கய – மென்மை | | 'கயந்தலை மடப்பிடி'. (நற் 137) |
| நளி – செறிவு | | 'நளி மலை நாடன்' (புறம் 150) |
| பழுது | பயமின்மை | 'நச்சியிருந்த நசை பழுதாக' (புறம் 237) |
| சாயல் | மென்மை | 'அமிர்தன்ன சாயல்' (சீவக 8) |
| முழுது | எஞ்சாமை | 'உலக முழுதாண்ட' (சிலம்பு. அந்தி 1) |
| வம்பு | நிலையின்மை | 'வம்ப மாரி' (குறுந் 66) |
| மாதர் | காதல் | 'மாதர் நோக்கு' |
| நம்பு, மே | நசை | 'நயந்து நாம் விட்ட நன்மொழி நம்பி'. (அகம் 198) |
| ஓய்தல், ஆய்தல், நிழத்தல், சாய்தல் | உள்ளதன் நுணுக்கம் | 'கயலறல் எதிரக் கடும்புனல் சாஅய' (நெடுநல். 18) |
| புலம்பு | தனிமை | 'புலம்பு மணித் தாலி'. (அகம். 7) |
| துவன்று | நிறைவு | 'ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்'. (நற் 170) |
| முரஞ்சல் | முதிர்வு | 'கோடு பல முரஞ்சிய கோளி ஆலத்து' (மலைபடு 268) |
| வெம்மை | வேண்டல் | 'ஏம வெங்காமம்'. (அகம். 15) |
| பொற்பு | பொலிவு | 'பெருவரை அடுக்கம் பொற்பச் சூர் மகள்'. (நற். 34) |
| வறிது | சிறிது | 'வறிது வடக்கிறைஞ்சிய சீர்சால் வெள்ளி'. (பதிற்று 24) |

| உரிச்சொல். | பொருள் | சான்றுகள் |
|---|---|---|
| எற்றம் | நினைவு, துணிவு | 'கானலஞ் சேர்ப்பன் கொடுமை எற்றி' (குறுந் 145) |
| பிணை, பேண் | பெட்பு | 'அமரர்ப் பேணியும்' (புறம் 99) |
| பணை | பிழைத்தல, பெருத்தல் | 'வேயமருள் பணைத்தோள்'. (அகம் 1) |
| படர் | உள்ளல், செலவு | 'வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி'. (புறம் 47) 'கறவை கன்று வயின் படர' (குறுந் 108) |
| பையுள், சிறுமை | நோய் | 'பழுமரம் படரும் பையுள் மாலை'. (குறுந். 172) 'சிறுமை உறுபவோ செய்பறியலரே'. (நற் 1) |
| எய்யாமை | அறியாமை | 'எய்யா மையலை நீயும் வருந்துதி'. (குறிஞ்சி. 8) |
| நன்று | பெரிது | 'நன்றும் அரிதுற்றனையால் பெரும'. (அகம் 10) |
| தா | வலி, வருத்தம் | 'தாவில் நன்பொன் தைஇய பாவை'. (அகம். 212) |
| தெவு | கொள்ளல் | 'நீர்த் தெவ்வு நிரைத் தொழுவர்'. (மதுரைக். 89) |
| தெவ் | பகை | 'தெவ்வுப் புலம்'. |
| விறப்பு, உறப்பு, வெறுப்பு | செறிவு | 'வெறுத்த கேள்வி விளங்கு புகழ்க்கபிலன்'. (புறம் 53) |
| கம்பலை, சும்மை, கலி, அழுங்கல் | அரவம் (இரக்கம் & கேடு) | 'எங்கோன் இருந்த கம்பலை மூதூர்'. (புறம் 54) |
| கழும் | மயக்கம் | 'கழுமிய ஞாட்பு' (களவழி 11) |
| செழுமை | வளன், கொழுப்பு | 'செழும் பல குன்றம்'. |
| விழுமம் | சீர்மை, சிறப்பு, இடும்பை | 'நின்னுறு விழுமம் களைந்தோன்'. (அகம். 170) |

| உரிச்சொல் | பொருள் | சான்றுகள் |
|---|---|---|
| கருவி | தொகுதி | 'கருவி வானம தலைஇய யாஙகு'. (புறம 159) |
| கமம | நிறைவு | 'கமஞ சூல் மாமழை'. (குறுங். 158) |
| அரி | ஐமமை | 'அரி மயிா ததிரண் முனைகை' (புறம 11) |
| கவவு | அகத்திடுதல | 'காதலற பிரியாமல கவவுககை ஞெகிழாமல' (சிலமபு—மஙகல 61) |
| துவைததல<br>சிலைததல<br>இயமபல<br>இரஙகல | இசைபபொருள<br>(கழிநத பொருள) | 'வாலவளை துவைபபவும' (புறம 158)<br>'இனி நினைநது இரக்கமாகின்று'. (புறம. 243) |
| இலமபாடு<br>ஒறகம | வறுமை | 'இலமபாடு நாணுத தரும'. (சிலமபு கஞ 71)<br>ஒககல ஒற்கம சொலிய' (புறம. 327) |
| ஞெமிாதல<br>பாயதல் | பரததல | 'தருமணல ஞெமிரிய திருநகா முறறதது'. (நெடுநல் 90)<br>'புணணுமிழ் குருதி முகமபாயநது இழிதர'. (குறிஞ்சி. 172) |
| கவாவு | விருபபு | 'கவா நடைப புரவி'. (அகம், 130) |
| சோ | திரடசி | 'சோநது செறி குறுஙகின்'. (நற். 170) |
| வியல | அகலம | 'வியலுலகம' |
| பேம<br>நாம்<br>உரும் | அசசம | 'மன்றமரா அதத பேஎமுதிாக கடவுள' (குறுங் 87)<br>'நாம வேல்'. (சிலம்பு கானல் 27)<br>'உருமில் சுற்றம' (பெரும பாண. 447) |
| வய | வலி | 'வயமான் தோன்றல்'. (புறம 44) |
| வாள் | ஒளி | 'வாண் முகம்'. |
| துயவு | அறிவின் திரிபு | 'துயவுற்றேம யாமாக'. |

| உரிச்சொல் | பொருள். | சான்றுகள். |
|---|---|---|
| உயா | உயஙகல | 'பருநதிருநது உயா விளி பயிறறும'. (அகம். 19) |
| உசா | சூழச்சி | 'உ சாத துணை'. |
| வயா | வேட்கைப்<br>பெருககம | 'வயவுறு மகளிா' |
| கறுபபு<br>சிவபபு | வெகுளி,<br>நிறவேறுபாடு | 'நிறகறுததோா' (பதிறறு 13)<br>'சிவநத காநதள'. ( ''  15) |
| நொசிவு<br>நுழைவு<br>நுணஙகு | நுண்மை | 'நொசிமட மருஙகுல'.<br>'நுழை நூற கலிஙகம'<br>'நுணஙகிய கேளவியா' (குறள். 419) |
| புனிறு | ஈன்றணிமை | 'புனிறு தீா குழவி' (புறம 68) |
| நனவு | களன்<br>அகலம் | 'நனந்தலை யுலகம'. (முலலைப 1) |
| மதவு | மடன், வலி<br>மிகுதி, வனபபு | 'மதவு நடை நலலான்' (அகம 14)<br>மாதர் வாணமுகம மதைஇய நோககே'. (அகம 130) |
| யாணர் | புதிது | 'மீனொடு பெயரும யாணா ஊரா'. (நற. 210) |
| அமாதல | மேவல் | 'அகனமாநது செயயாள உறையும' (குறள். 84) |
| யாண | கவின் | 'யாணது பசலை'. (நற 50) |
| பரவு<br>பழிசசு | வாழததல | 'நெலலுகுதது பரவும கடவுளும இலவே' (புறம 335)<br>'அருநதிறல கடவுள பழிச சிய பின்றை' (மலைபடு 538) |
| கடி | வரைவு, கூாமை, 'கடி நுனைப பகழி'<br>காபபு, புதுமை, 'கடியுண கடவுள'<br>விரைவு, விளககம, 'கடிமலா மிசைபூதது'.<br>மிகுதி, சிறபபு,<br>அசசம, முன்தேறறு,<br>ஐயம, கரிபபு. (தொல.)<br>(நனனூலாா ஐயம,<br>முன்தேறறு கூறுமல்,<br>விரை, ஆததல<br>இவறறைக கூறுவா). | |

| | | |
|---|---|---|
| ஐ | வியப்பு | 'ஐதே காமம்' |
| முனைவு | முனிவு | 'சேற்று நிலை முனை இய செங் கண் காரான'. (அகம். 46) |
| வை | கூர்மை | 'வைநுனிப் பகழி' |
| எறுழ் | வலி | 'பரோ எறுழ்த் திணி தோள்' (பெரும்பாண் 60) |

தொல்காப்பியர் உரிப் பொருள் தன்மையைப் பற்றிக் கூறும் பொழுது, முன்னும் பின்னும் வந்த மொழியை அறிந்து மரபு நோக்கி அதற்கேற்பப் பொருளுரைத்தல் வேண்டும் என்பர் (**Only the context denotes the semantic aspect of the attributes**) சொற்கள் பொருளாதலை வரலாற்று முறையான் கொள்வதன்றி அவற்றின் காரணம் நமக்கு விளங்கத் தோன்றா என்பதனை,

"மொழிப் பொருட் காரணம் விழிப்பத் தோன்றா"
(தொல் சொல் 394)

என்பதனால் உணர்த்துவர். இவ்வுரிச் சொற்களில் எழுத்துப் பிரிந்து இசைத்தல் இல்லை என்று விதி வகுத்து உரிச்சொல் மாண்பைப் பகர்வர் தொல்காப்பியர்.

நன்னூலார் உரிச்சொற்களைப் பற்றிய கருத்து விளக்கத்தில் பண்பை உடையன, உயிர் உள்ளன, உயிர் இல்லன என்று பாகுபடுத்திக் கூறுவர் தொல்காப்பியர் மரபியலில் கூறும் உயிர்களைப்பற்றிய கருத்துக்களை நன்னூலார் இங்கே குறிப்பிட்டுள்ளார் உயிர்ப்பொருள்களின் குணப் பண்புகளாக அறிவு, அருள், ஆசை, அச்சம், மானம், நிறை, பொறை, ஓர்ப்பு, கடைப்பிடி, மையல், நினைவு, வெறுப்பு, உவப்பு, இரக்கம், நாண், வெகுளி, துணிவு, அழுக்காறு, அன்பு, எளிமை, எய்த்தல், துன்பம், இன்பம், இளமை, மூப்பு, இகல், வென்றி, பொச்சாப்பு, ஊக்கம், மறம், மதம், மறவி என முப்பத்திரண்டினைக் குறிப்பிடுவர். துய்த்தல், துஞ்சல், தொழுதல், அணிதல், உய்த்தல் எனும் ஐவகைத் தொழிற்பண்புகளையும் பின்னர்க் கூறுவர் உயிரல்லாத பொருட்குப் பல்வகை வடிவு, இரு நாற்றம், ஐவண்ணம், அறுசுவை, ஊறுஎட்டு ஆகியவை குணம் என்பர்.

"தோன்றல் மறைதல் வளர்தல் சுருங்கல்
நீங்கல் அடைதல் நடுங்கல் இசைத்தல்
ஈதல் இன்னன இருபொருள் தொழில்குணம்" (–455)

என்று இருபொருட்கும உரிய பொதுமைத் தொழிற பண்பைப் பாஙகுறக கூறியுள்ளமை நோககுக

எனவே தொல்காபபியரும் நனனூலாரும காடடும உரிச சொற பானமை நம தமிழமொழியின் சொல வளததை (Diction of Tamil words) நனி காடடுதல் காணக ஒரு சொறகுப பல பொருள (one word for different meanings), பல சொறகு ஒரு பொருள (many words for specific meaning) எனும சொறபொருள (semantics) மரபை இபபகுதி மிகச செவவனே காடடும. உளள நீரமையோடு ஒன்றி வரும மொழியாககததில ஒருவகை அழகு காடடததைப போறறும வணணம இவவுரிச சொனனிலை கருதது விளககமாக ஒளிாதலைக காணக



# 39. 'எண்ணுப் பெயர்கள்'.
# The Numerals.

ஒரு மொழி வரலாற்றில் இன்றியமையா இயல்பை உடையதாய் விளங்குவது எண்ணுப் பெயரே. இவ்வெண்ணுப் பெயர்களைப் பொருட்சிறப்போடு ஆய்ந்து பார்த்தால் அவை இருவகைகளாகப் பாகுபடுத்தப்பெறும் அவற்றை இயல் எண் (Cardinal), வரிசை எண் (Ordinal) என்று வழங்கலாம். இவற்றையே எண்ணலளவை, எண்ணுமுறை என்றும் பெயரிட்டு வழங்குவர் ஒன்று, இரண்டு, மூன்று என வழங்கப் பெறுவன இயல் எண்கள் (Cardinals) என்றும், முதலாம், இரண்டாம், மூன்றாம் என வழங்கப் பெறுவன வரிசைஎண் (Ordinals) என்றும் கூறப்பெறும் இயல் எண்கள் எண்ணுப்பெயர்களாகவே வழங்கப் பெறுவன (Neuter nouns of number) ஆனால், வரிசை எண்கள் நிலைமொழி நீர்மையில் நின்று வருமொழிப் பெயர்களைத் தழுவிப் பெயரடைகளாக (Adjectival forms) வழங்கப் பெறுவன

நம் தமிழ் மொழியில் காணப் பெறும் எண்ணுப்பெயர்களுள் நாம் ஒருவகைத் தனிப்பட்ட சிறப்பைக் காணலாம் 'ஒன்று' முதல் 'பத்து' ஈறாக எண்ணப்பெறும் எண்களுள் 'ஏழு' என்பது முற்றியலுகரமாகக் காணப்படுகிறது. 'ஒன்று' முதல் 'ஐந்து' ஈறாக அமைவன மென்தொடர்க் குற்றியலுகரங்களாகவும், 'ஆறு' நெடில்தொடராக குற்றியலுகரமாகவும், 'எட்டு', 'பத்து' என்பன வன்றொடராகக் குற்றியலுகரங்களாகவும், 'ஒன்பது' என்பது உயிர்த் தொடராகக் குற்றியலுகரமாகவும் காணப்பெறும். அக்'குற்றியலுகர'மென்னும் நுண்ணிய இலக்கண ஒலிக்கூறு வேறு எம்மொழிகளிலும் காணப் பெறாத ஒன்றாய் அமைய, நம் எண்ணுப்பெயர்கள் இக் குற்றியலுகர ஈற்றினைப் பெறுவதால் சிறப்புறுகின்றன 'ஒன்று' என்பது நீங்கலாக எஞ்சிய இயல் எண்கள் வரிசை எண் நிலைக்கு ஏற்றவாறு மாறுகின்றபொழுது, 'ஆம்' என்பதுடன் புணர்ந்து விளங்குகின்றன. (Cardinal Number+am>Ordinal Number) "This use of the numeral substantive instead of the numeral adjective is not ungrammatical, but is in accordance with the characteristic Dravidian rule that every noun of quality or relation becomes an adjective by being prefixed to a substantive noun in direct opposition"[1] என்பர் Dr Caldwell அவை எத்தகைய பெருமாற்றத

[1] Dr Caldwell — A Comparative Grammar of the Dravidian Languages P. 321

றைதயும் தாராமல, நிலைமொழியிலும மாறறம் பெருமல் அமைதல் ாணடுச் சிறபபாகக காணபபடுகிறது. ஆனால், 'ஒன்று' என்ற இயல்எண், வரிசை எண்ணுக மாற, 'ஆம' என்பதனேடு புணருகின்றபோது 'ஒன்று + ஆம் > ஒனரும்' (onru + ām > onrām) என இல்லாமல 'முதலாம' (mutalām) எனவே வழஙகபபெறு கிறது இநநிலையில நாம் ஒருவகை மாறறததை நக காண்கின்ரும. தமிழ மொழியேயலலாமல இந்தோ-ஆரிய மொழியினததைச் சார்நத சமஸகிருததததிலும 'prathamā' என்ற சொல்லே காணப் படுகிறது ஆஙகிலததிலும் 'One' என்ற (Cardinal) எண 'First' என்ற அமைபபில (Ordinal) மாறுதலைக் காணக. இவ்வாறு உலக மொழிகளில 'ஒன்று' எனற எணமட்டும தனித்த முறையில் மாற்றம பெறுதலைக காணுஙகால, பிற வற்றினின்றும நீஙகிய தனிச் சிறபபுடைய நிலையில இததகைய அமைப்பு அமைந்ததோ என எணண வேண்டியுள்ளது. மாருக, 'முதன்மை' என்ற சொல்லடியாகப பிறந்த 'முதலாம்' என்ற தமிழ வழககினை 'prathāna' என்ற வடசொலலடியாகப் பிறந்த 'prathamā' என்ற சொல்லினையொட்டி எழுநதது எனக கூறு வதும, சமஸ்கிருதத்தைத தமிழ் தழுவியது எனக கூறுவதும எவவகையில பொருநதும என்பதனை நன்கு ஆராயந்தால, வட மொழியார கூறறு பொருததமறறது என்று நாம துணியலாம

(i) 'முதலாம' என்ற சொல வழககினை நோககுஙகால, நம தமிழ மொழி மககள முதன்மைச சிறப்பின தொனமை வடிவத்தை உணாதத ஒருககால இவ்வாறு வழஙகினரோ என எணணுவதற்கும இடமுளளது 'ஒன்று' என்ற எண் இல்லையேல பிற இயல எணகள இலலை என்பதனை உணாநது 'முதனமை' எனும தன்மையையுணாதத வேணடி 'முதலாம' என வழஙகுதல சொறபொருளழகை (Semantic theme) மிகுவிககும வழககேயாம. இஃதன்றியும, நம திராவிடககுழு மொழிகளுள வேறுவடிவஙகள் காணபபெற விலலை என்ருல் நாம வலியுறுததும கருத்து ஆற்றல் பெருது அழிய நேரலாம

(ii) தமிழோடு ஒன்றிய பிற மொழிகளுள கன்னடமும, மலையாளமும இசசிககலைப போககும கன்னட மொழியின் கண "ஒணணே கிளாஸ" என்ற சொல வழககும இருததலைக காண லாம். (It is noteworthy that the cardinal number of Tamil is at the base of the ordinal numbers of Kanarese and Malayalam in respect of numeral one). இவ்விரு மொழி வழக்குகளேயல்லாமல், தமிழின் பேசசு வழககும் நமககுத

தக்க துணையாக அமையும் பேச்சுத் தமிழின்கண் திராவிடச் சாயல் பெற்ற சொல்வழக்கு உருவாகி 'ஒணுஞ்நூற்தரம், 'ஒணுஞ்ஙகிளாஸ்' என்ற வடிவங்கள் இருத்தலை நாம் காணுங் கால் நமக்குச் சில உண்மைகள் தெரியவரும். 'ஒன்று + ஆம் > ஒன்றும்' எனவழங்குவது இலக்கணத்துள் இயல்பான புணர்ச்சி நிலையைக் காட்டும் தகுதிப்பாடுடைத்து (Perfect form of the morphophonemic change) அதனைய வழக்கு நம் மொழியிடையே வழங்கப் பெறுதலை நாம் தவிர்க்க முடியவில்லை என்றாலும், தமிழிலக்கணத்தின் நேர்மையை மனத்தளவில் போற்றி, அந்த இலக்கண மரபிற்கு மேலாகப் பொருட்சிறப்பை அழகோடு கூட்டி 'முதலாம்' என வழங்குவதும் சிறப்புடைய இலக்கண மரபே ((Refined grammatical tradition) இதனால், வடமொழியினின்றும் நம்மொழி தன் சாயலைப் பெற்றது எனக் கூறல் பொருத்தமுடைத்தாகாது ஒப்புமை மொழிப் படிப்பில் தனிப்பட்ட ஒரு மொழியின் சிறப்பை எடுத்து விளக்க வல்ல இலக்கணக் கூறுகளுள் எண்ணுப் பெயர்களும் சிறப்பான ஒரிடத்தைப் பெற்று மொழியின் உயிர்த்துடிப்பை (Living spirit of the language) உணர்த்தும் என்பதனை மறத்தல் நன்றன்று ஆதலால் பிற எண்ணுப்பெயர்கள் இயல்பாகப் புணர்வதையும், கன்னடம், மலையாளம், பேச்சுத் தமிழ் ஆகிய மொழிகளின் வழக்குகள் அமைவதையும் நோக்குங்கால் 'ஒன்றும்' என வழங்குவது ஒப்புமையாக்கம் (analogy) என்னும் மொழிக் கூறுக்குத் துணைபுரிவதாகும்.

எண்ணுப் பெயர்களின் தோற்றத்தை அறிவதற்கு அப் பெயர்கள் சிறந்தனவா (Numerals), பெயரடைகள் சிறந்தனவா (Numerical adjectives) என ஆராயுங்கால், பெயரடை வடிவங் களே சிறந்தன என்பதனை நாம் தெளிவாக உணர முடியும் காரணம், எம்மொழியிலும் ஒருபெயரின் பெயரடை மொழியியல் அறிவுக்குப் பெருந்துணை புரிவது தனிச் சிறப்பாகும்

திராவிட மொழிகளுள் எல்லாவற்றிலும் பெயர்களும், பெயரடைகளும் வழங்கப் பெறுகின்றன எண்ணுப் பெயர்களில் காணப்பெறும் பெயரடைகள் தனிச் சிறப்புப் பெறுவதை நாம் காணலாம் 'ஒன்று' என்ற இயல் எண் 'ஒரு' (அல்லது) 'ஓர்' எனப் பெயரடையாக அமையும். அப் பெயரடைகளுள் 'ஓர்' என்பது உயிர் முன்னும் ('ōr'-before vowel) 'ஒரு' என்பது பிற முன்னும் இடம்பெறும் தமிழ் மொழியின் புணர்ச்சி நிலைக் கேற்ப எளிமை நோக்கி ஈற்று மெய்யின் முன்னால் உயிர்வந்து ஒன்றுதல் காணப்படுகிறது. இவ்விதி மட்டுமல்லாமல் "ஓர

உயிர'', ''ஓர் அன்பு'' என்பவை தனிபபட்ட இலக்கணப புணாசசிககும அழகூட்டுதலைககாணக ''தனிககுறினை முன் ர, ழ அணையா'' என்ற அமைபபும இதறகுத தகக காரணம எனச சுட்டுதல சாலப் பொருநதும. 'ஒரு' எனபதிலுளள ஈற்று கரத்தை ஒலித துணையாக (euphonic vowel) நீககினல 'ஓா' என்பது அடிச் சொலலாக அமையும இவ'வொன்று' எனற எணணுப் பெயர் நீஙக, எஞசிய எணணுப பெயாகள் எத தகைய மாற்றமும் பெறுமல தாமே நினறு பெயரடைகளாக வருதலைக காணலாம சான்ருக, 'இரண்டு கண்கள்', 'ஐநது பொறிகள்', 'ஆறு முகஙகள்' என்னும வழககுகளை நோக்குக 'இரணடு' என்ற எணணுபபெயர் 'இரு' எனற அடிச சொல்லைப் பெறும்' 'ஓா' என்பது போல 'இரு' என்பது 'ஈா' என முதல நீண்டு 'ஈராயிரம' என வழஙகப்படுதலை நோககுக. Dr. Caldwell அவாகள் 'மூன்று' என்ற எண்ணுககு 'முா' என்பதனை அடிச் சொல்லாகக் கொண்டாலும் 'மூா' எனபதனையே கொள்ளல வேணடும். ஏனென்ருல் 'முப்பது' எனும தமிழ் வழககும், 'முபபை' என்ற தெலுங்கு வழக்கும நமககுத துணை புரியும

'நால' எனற வடிவமே 'நான்கு' என்ற எண ணு பெயருககு, அடையாக நிறகும எனககொள்ளலாம ஆனல 'நநநான்கு' என்பதனை நோககுஙகால 'நல்'என்பதும நமககுப பொருததமாகத தோன்றும 'ஐநதிணை', 'ஐமபுலன்' எனபவறறை நோககுங கால 'ஐ' என்பதுவே பெயரடை வடிவு என்றும, 'அறு', 'ஏழ்', 'எண்' எனபன அவ்வவ வெணணுப பெயாகளுககுரிய பெயரடை வடிவஙகள என்றும கொளளலாம. 'ஒனபது', 'பதது' எனபன தம அளவில நின்று பெயரடைகளாக வழஙகுவதோடலலாமல இவவெணணுப்பெயாகள காரண வகைகளால சானறுகள பல வறறைக கொணடு தம் வழககை நிலைநாட்டுதல சாலப பொருநதுவது ஒரு மொழி நீரமையே எனின் மிகையன்று. அடிசசொறகளை ஆராயும பொழுது பெயரடைகள பெரிதும துணைபுரிகின்றன. சிறப்பாகப 'பதிஞென்று' முதல 'பத் தொனபது' வரையுள்ள உம்மைத தொகைகளும், 'இருபது', 'முபபது' முதலான பண்புத் தொகைகளும், ஆராயசசிககுரிய பல உணமைகளை நமககுத தெளிவாககுகின்றன என்பதனைக காணக

# 39 (a) 'திராவிட மொழிகளில் காணப்பெறும் எண்ணுப்பெயர் வடிவங்கள்'.

# The Forms of Numerals in the Dravidian Languages.

ஒன்று முதலாம் எண்ணுப் பெயர்களைப் பற்றிய மொழியியல் படிப்பு நம் மொழித் தொன்மையினைப் பாங்குற விளக்க வல்லதாக அமைதலை இனிக் காண்போம்.

| எண்கள் | தமிழ் | மலையாளம் | தெலுங்கு | கன்னடம் |
|---|---|---|---|---|
| 1 | ஒன்று | ஒண்ணு | ஒண்டு / ஒகட்டி | ஒந்து |
| 2 | இரண்டு | ரெண்டு | ரெண்டு | எரடு |
| 3 | மூன்று | மூன்னு | மூடு | மூறு (ரு) |
| 4 | நான்கு | நால / நாங்கு | நாலுகு | நாலு / நாங்கு |
| 5 | ஐந்து | அஞ்சு | ஐது | ஐது—அய்து |
| 6 | ஆறு | ஆறு | ஆரு (று) | ஆரு (று) |
| 7 | ஏழு | ஏழு | ஏடு | ஏளு |
| 8 | எட்டு | எட்டு | எனிமிதி / எம்மிதி | எண்டு |
| 9 | ஒன்பது | ஒம்பது | தொம்மிதி | ஒம்பத்து |
| 10 | பத்து | பத்து | பதி | ஹத்து |

(i) ஒன்று :- 'ஒன்+து>ஒன்று' 'on+tu>onru' என்று கூறுவர். ஆனால், தொன்மை வடிவம் 'ஓர்+து' 'or+tu' ஆக இருக்கலாம். Dr Caldwell 'ஒரு' (oru) என்பதை அடிச்சொல் (Numerical Root) என்றும், அதுவே இடையில் மூக்கினமெய் பெற்று 'ஒன்று' என ஆகும் எனக் கூறுவர். இதில் 'ஒரு (அல்லது) ஓர்' ('oru-ōr') என்பது எண்ணுப் பெயரடை வடிவ

மாக அமையும் ஈற்றிலுள்ள மெய் ரகரமா, றகரமா என்பதை நாம் ஆராய வேண்டும். தமிழில் 'குறு' என்பது 'குன்று' என ஆதல் போலவும், கன்னடத்தில் 'கரு' என்பது தமிழில் 'கன்று' என ஆதல் போலவும், 'ஒரு' என்பதினின்றும் 'ஒன்று' என்பது அமைந்தது எனக் கொள்வர் அன்றியும், 'ஒற்றை' (ஒற்றைக் கால்) எனும் பெயரடையிலும் வல்லின மெய் காணப்படுகிறது. மலையாளத்தில் 'ஒன்னு' (ஒண்ணு) என்ற வடிவத்தைக் காணுங்கால், தமிழில் காணப்பெறும் உண்மை வடிவம் நமக்குத் தெரியவருகிறது. தமிழ் 'றகரம்' மலையாளத்தில் 'னகர'மாகத் திரிதல் (ṟ>ṉ) இயல்பு. இனி, றகரம் டகரமாகத் திரிதல் (ṟ>ṭ) மொழி நூலாருக்கு உடன்பாடு ஆதலால் கன்னடத்தில் 'ஒண்டு' (oṇḍu) என்ற பெயர் அமைகிறது. 'ஒகட்டி' (okaṭṭi) என்பதில் காணப்பெறும் 'ஒக' (oka) என்பதை 'ஏக' (ēha) என்ற வட மொழிச் சொல்லின் திரிபு என Dr Caldwell ஐயுறுவர். ஆனால், 'ஒத்திடு' என்னும் வினைப் பகுதியை நோக்குங்கால் 'ஒக' என்பதும் தமிழ் வடிவமே எனக் கொள்ளலாம். Dr Gundert 'ஒ' என்னும் உயிரையே அடிச் சொல்லுயிராகக் கருதுவர். (ஒக்க – ஒத்து)

(ii) இரண்டு:-

'இர + அண + து' > 'இரண்டு' 'ir + aṇ+tu > iraṇṭu' என்பர். இவற்றுள் 'அண்' என்பதைச் சொல்லாக்க உருபு (Formative particle) எனக் கூறுவர் Dr Caldwell அவர்கள் 'ஈர்' (īr) என்பதனை அடிச் சொல்லாகக் கொண்டு இவ்வெண்ணுப் பெயரினை ஆராய்வர். தமிழ் நீங்கிய பிற மொழிகளில் சிறப்பாகத் தெலுங்கில் காணப்படும் 'ரெண்டு' (reṇḍu) என்ற வடிவம் உயிர் இடம் பெயர்தல் (Metathesis) என்ற ஒலிக்கூறின் இயல்பாம். இகரம் எகரமாகத் திரியும் ஒலிமாற்றத்தையும் நாம் தெலுங்கு, மலையாளம் இவற்றில் காணலாம். கன்னடத்தில் 'எரடு' (eradu) என்பது இத்திரிபை ஒட்டியதே. பேச்சுத் தமிழில் 'இலை>எலை' என அமைவதையும் காண்க (Ta i>e– Mal Tel & Kan) Brahmi மொழியில் 'இர்' (ir) என்பது 'இரண்டு' எனும் பொருளில் (iraṭ) வந்துள்ளது.

(iii) மூன்று:-

'மூ + து > மூன்று' 'mu+tu>mūṉṟu' என்பர். 'மூறு' (mūṟu) என்பது மெல்லின மெய் பெற்று 'மூன்று' என ஆயிற்று

என்பர் இம்மூன்று நெடு முதல் குறுகி ஒரினமாக அமைந்து (assimilation) 'முப்பது' என வருதலைக் காணலாம். மலையாளத்தில் 'ஒன்று' (ஒன்னு) என்பதைப்போல 'மூன்னு' (ṟ > ṉ) எனக் காணப்படும் கன்னடத்தில் காணப்பெறும் 'மூறு' (mūṟu) என்ற வடிவமே தெலுங்கில் 'மூடு' (mūdu) என ஆகிவரும் (Tamil ṟ > ḍ Telugu) தமிழில் 'மூவர்', 'மூவாயிரம்' என்று வருதலைக் காணுங்கால், 'மூ' என்பது எண்ணுப் பெயரடியாக விளங்குதலைக் கொள்வர் 'மூ' குறுகி 'மு' என்று அமைதல் இயல்பு (mū>mu)

(iv) நான்கு :-

'நான்' (அல்லது) 'நால்' அடையாக (nāṉ – nāl) அமையும் பெரும்பாணாற்றுப்படையில் "துணைப் புணர் தொழில் நால் குடன் பூட்டி" என வருவதாலும், "நல் நான்கு பூண்ட கடும்பரி நெடுந்தேர்" என அகநானூற்றில் வருவதாலும் 'நால்கு' (nālku) என்ற வழக்கத்தைக் காணலாம் 'நால்வர்' 'நானூறு', 'நாலாயிரம்' என்பனவற்றில் 'நால்' உள்ளது. 'நாலுகு' (nāluku) என்னும் தெலுங்கு வடிவம், தமிழின் தொன்மையான 'நால்கு' என்பதன் வளர்ச்சியே எனலாம். 'நால்கு > நான்கு' என வருதல் இன்னோசை பெற்ற வடிவமே Dr Caldwell 'நல்' (nal) என்பதனையே அடிச் சொல்லாகக் கொள்வர்.

(v) ஐந்து .-

'ஐ + து' 'ai + tu > aintu' என்பது மூக்கொலி புணர்ந்து 'ஐந்து' எனவாயிற்று பின்னர் அடி ஐகாரம் அகரமாக மாறிப் (ai-> a-) பேச்சு வழக்கில் அடுத்து வரும் மெய்களும் மாற்றம் பெற 'அஞ்சு' (añcu) என ஆயிற்று 'ஐ' என்பதற்குத் 'தலைமை' என்று பொருள் கொள்ளுதல் சிறப்புடைத்து ஐந்து விரல்களை யுடைய கை ஓர் எண்ணைக் குறிக்க, 'அந்தக் கை' என்பதனை மரூஉ 'ஐ' என்பர் Dr Caldwell தெலுங்கு கன்னட வடிவம் 'ஐது' (aitu) என்பது 'ஐ' யினை அடியொற்றியதே.

aintu – ai -> a- } (Phonetic change).
(ஐந்து) -n- > -ñ
-t- > -c } (அஞ்சு) añcu

தமிழில் 'அஞ்சுதலை வாய்க்கால்', 'அஞ்சறைப் பெட்டி' எனும் சொற்கள் உள்ளன.

(vi) ஆறு :-

எல்லாத் திராவிட மொழிகளிலும் 'ஆறு' 'āṟu' என்ற எண்ணே வழங்குவதால் 'அறு' (aṟu) என்பதே எண்ணுப் பெயரடையாகும். சிறப்பு றகரம் ரகரமாகத் திரிதல் ஒலி நூல் மரபாகும் (ṟ > r)

(vii) ஏழு :-

'எழு' 'elu' என்பதே அடையாக நிற்க 'ஏழு' 'ēlu' என முதல் நீண்டு எண்ணுப் பெயராக வழங்குகிறது (lengthening of the initial vowel). ஈற்று 'ழகரம்' மட்டும் அவ்வம்மொழிகளுக்கு ஏற்ப மாறுதலைப் பெறுகிறது. 'கோழி' எனும் தமிழ்ச் சொல் கன்னடத்தில் 'கோளி' (l>ḷ) என வளிநா ஒலி பெற்றும், 'கோடி' (l>ṭ) எனத் தெலுங்கில் டகரம் பெற்றும் வருதல் ஒலியியல் விதிகளாம்.

(viii) எட்டு :-

'எண் + து > எட்டு' 'eṇ+tu>eṭṭu' என்பர் 'எண்' (eṇ) என்பதே அடிச்சொல்லாக யாண்டும் அமையும். 'எண்ணூறு' என்பதில் 'எண்' அடிச் சொல்லாக உள்ளது. எண் + டு > எண்டு (eṇṭu) (Kan). வன்மை பெற்ற வடிவமே தமிழ் 'எட்டு' ஆகும்.

**(No affinity between Tamil 'ettu' and Sanskrit 'ashta')**

இவ்வெண்ணுப் பெயர்களை முறையாகக் காணுங்கால் நமக்கு ஒரு சில உண்மைகள் வெளிப்படும். தொன்மை நோக்கி வந்த முதல் வடிவம் 'ஒன்று' எனக் காணப்பட்டது. இனி, Dr Caldwell அவர்கள் 'ஈர்' என்பதை அடிச் சொல்லாகக் கொண்டு 'பிளத்தல்' என்ற பொருளில் இரண்டு என்பதை வரையறுக்கின்றார். 'முறை' என்ற சொல்லிலுள்ள 'மூறு' என்ற அடிச்சொல்லே இந்த எண்ணுப் பெயருக்கும் அடிச் சொல்லாக நிற்றலைக் குறிப்பிடுவார். இரண்டு வரை எண்ணக் கற்ற மக்கள் அவ்வெண்ணுப் பெயர்களைச் சார்ந்து வரும் முறையை நோக்கி 'மூன்று' என வழங்கியிருக்கலாம் 'நல்' என்ற அடிச்சொல்லுக்கு 'மிகுதி, பன்மை, வன்மை' எனப் பொருள் கொண்டு மிகுதிப் பொருளைச் சுட்டும் சொல்லாகக் கருதி, 'நல் > நால் > நால்கு > நான்கு' (-ku-suffix) எனக் கொள்வர். Dr. Caldwell 'ஐ' என்பதை மரூஉச் சொல்லாக மேலே கண்டது போல் 'ஐ' என்பதன் மற்றொரு வடிவம் 'கை' என்பதாகும் எனக் கருதுவர்.

இவ்வை (ஐ) என்பதற்குத் 'தலைமை' என்ற பொருள் கொண்டு ஒற்றைப்படை எண் வரிசையில் முன் நான்கு எண்களுக்கும் (1 to 4), பின் நான்கு எண்களுக்கும் (6 to 9) இடையே தலைமை நோக்கி வருகின்ற எண்ணை 'ஐந்து' எனக் கொண்டனரோ எனக் கருதலாம். மக்கள் தம் சொல்லாட்சியில் 'ஒரு கை போடு' எனச் சொல்லுங்கால் 'ஐந்து' என்ற எண்ணைக் குறிக்கும் 'கை' என்ற வழக்கத்தைக் காணலாம். 'அறு' எனும் அடிச்சொல்லுக்குப் 'புது வழி வகுத்தல்' எனப் பொருள் கொள்வர். ஐந்துக்கு மேற்பட்ட புது எண் 'அறுதல்' என்ற வினைப் பொருளோடு 'அறு' என அமைதல் காண்க (அறு > ஆறு ஆகும்). அதனைச் சார்ந்து எழுகின்ற புது எண்ணினை 'எழுதல்' என்ற வினைப் பொருளில் 'ஏழு' எனக் கொள்ளுதல் பொருத்தமுடைத்தே. ஏழு வரை எண்ணக்கற்ற மக்கள் அதனை விட ஒன்று மிகுந்ததைக் குறிப்பிட விரும்பி அதனையே எல்லையாகக் கொண்டு 'எண்' என்ற சொல்லை வழங்கினர் போலும்!

(ix) ஒன்பது :-

இவ்வெண்ணுப்பெயர் கூட்டுச் சொல்லாகும் (compound word). தமிழில் 'ஒன்பது', 'ஒன்பான்', 'தொண்டு'–'onpatu – onpāṉ – toṇṭu' என்பன காணப்பெறுகின்றன. எல்லாத் திராவிட மொழிகளிலும் 'ஒன்பது' என்பது காணப்படுகின்றது. இஃது எண்ணுப் பெயராகவும், பெயரடையாகவும், தொகைச் சொல்லாகவும் காணப்பெறும். 'ஒன்பது' என்பதில் காணப்பெறும் பின் மொழியாகிய 'பது' என்பது 'பத்து' என்பதன் திரிபே. (pattu > patu). ஆனால், தமிழில் 'தொண்டு' என்னும் வேறு தமிழ்ச் சொல் வழங்குகிறது. 'பத்து' என்பது 'பான்' (pattu >pāṉ) எனத் திரிதல் உண்டு. இந்த 'ஒன்' (oṉ) என்பது 'ஒன்று' என்ற எண்ணைக் குறிக்கும் என்பர். 'பத்தில் ஒன்று' குறைவுற்ற எண்ணினைக் குறிக்க, 'ஒன்பது' என்பது வழங்கப் பெற்றதோ எனக் கூறுவர். பத்தும் ஒன்றும் கூடிப் 'பதினொன்று' ஆவது போலப் பத்தில் ஒன்று குறைதலை 'ஒன்பது' எனல் ஒருவாறு பொருந்தும். 'ஒன்றன்' திரிபே 'ஒன்' எனக் கொள்வதால் சில இடர்ப்பாடுகள் தோன்றும். 'ஒரு' (அல்லது) 'ஓர்' பெயரடையாக நிற்றலையும் நாம் முன்னர்க் கண்டோம். 'தொண்ணூறு' (toṇṇūṟu), 'தொள்ளாயிரம்' (toḷḷāyiram) 'தொம்மிதி' (tommidhi) என்ற சொற்களை ஆராயுங்கால் 'தொன்மை'என்னும் பொருளில் 'மை' விகுதி கெட்ட 'தொல்'(tol) என்பதே இவ்வெண்ணுப் பெயருக்கு நிலை மொழியாக இருக்க

வேண்டுமெனக் கொள்ள நேரிடுகிறது 'ஒன்பது' என்பது 'தொல்' என்பதன் முதல் மெய் கெட்டு, 'பத்து' (அல்லது) 'பது' என்பதனோடு புணர்ந்து 'லகர' வொற்று 'னகர' வொற்றாக (l>ṉ) மாற, 'ஒன்பது' என்பது இயல்பான வடிவமாயிற்று எனலாம் (தொல் > ஒல + பது > ஒன + பது > ஒன்பது) இதற்குப் பொருள் காணுங்கால், 'பத்து' என்பதற்குப் பழமையானதே எனக்கொள்ளலாம் தொல+மிதி>தொம்மிதி' என்று தெலுங்கு மொழியில் வழங்குவதும் ஈண்டுத் தக்க சான்றாக அமையும் இந்தத் 'தொல்' எனும் நிலைமொழி 'டு' என்ற விகுதிபெற்றுத் 'தொண்டு' (tol + tu > tontu) எனப் பழைய இலக்கியங்களில் காணப்படுகிறது தெலுங்கில் 'tolivāramu' என்பதற்கு 'வாரத்தில் முதல் நாள்' என்றும், 'tolnādu' என்பதற்கு 'முந்திய நாள்' என்றும், 'toli biṭṭa' என்பதற்கு 'முதற் பிள்ளை' என்றும் பொருள் உள்ளதை அறிக தமிழில் 'பத்துக்கு முந்தியது' என்பதே 'ஒன்பது' என அமைவது பொருளடிப்படையில் மிகச் சிறப்பான நிலையைக் காட்டும் என்பது மொழி நூல் தெளிபு.

தொல + பத்து > ஒன்பது. 'tol+pattu>oṉpatu'

**(x) பத்து :-**

தமிழில் 'பத்து', 'பது', 'பான்' 'pattu–patu–paṉ' என்பன வழங்கும். தெலுங்கில் 'பதி (padi), பை (bhei), வை(vai)' என்பனவும், கன்னடத்தில் 'ஹத்து' (hattu) என்பதும் வழங்கும் 'பன் (அல்லது) பல்' என்பதற்குப் 'பல' என்ற பொருள் உண்டு இப் பொருளில் இவ்வெண் அமைந்ததென Dr Caldwell கூறுவர் 'பதினொன்று' முதலான தொகைச் சொற்களில் புதன் மொழி இவ்வெண்ணுப் பெயரின் திரிபே 'பன்னிரெண்டு' என்னும் சொல்லின் முதன் நிலையாகிய 'பன்' என்பது பத்தின் ஒரு வடிவமே (pattu > paṉ) அது 'பதின்' என்பதன் திரிபாகவோ (patin — paṉ), 'பான்' என்பதன் குறுக்கமாகவோ இருக்கலாம்

வடமொழியில் காணப்பெறும் 'பந்தி' (bhandhi-வரிசை) என்ற சொல்லின் அடிப்படையிலே 'பத்து' அமைந்தது எனச் சிலர் கருதுவர். இது பொருத்தமுடைய கூற்று அன்று 'நூறு' 'ஆயிரம்' முதலான எண்களை எண்ணத் தெரிந்த மக்களுக்குப் 'பத்து' என்ற எண்ணினை எண்ணத் தெரியாமல் இருந்திருக்க முடியுமா? மேலே கண்ட வடசொல்லை ஏற்றுக் கொள்வது என்றால், அவ்வெண்ணைக் குறிக்க வட மொழியில் காணப்

பெறும் 'தசம' ('dhasa') என்ற சொல்லினைக் கடன் வாங்கியிருக்க வேண்டுமல்லவா? அச்சொல் வழக்கில்லாதிருப்பதே அக்கருத்துப் பொருந்தாமையைக் குறிக்கும்.

'பன்' என்பது 'பல்' என்பதன் (pan > pal) மாற்று வடிவம் (alternative form). 'பல்', 'பன்மை' என்ற பொருள்களை அது சுட்டியிருக்க வேண்டும் 'பல் + து > பஃது/பத்து' என ஆயிற்று என்பர். இனி, 'பகுதி > பஃதி > பஃது' எனத் திரிதலும் இயல்பு இறுதியாகக் காணப்பெறும் 'பஃது' என்பது இலக்கியத்தில் வழங்கப் பெறுகிறது 'பகு' எனும் அடிச் சொல் 'பாகுபாடு, பகுத்தல் எனும் பொருளைச் சுட்டும் இரண்டு கையளவு தொகையை ஒரு பகுதியாகப் பகுத்திருக்கலாம். ஆதலால்தான் பத்து விரல்கள் அடங்கிய பகுதியை நாம் கணக்கு முறையில் ஏற்றுக் கொண்டது பழங்காலச் சிறப்பு மரபையுமாத்தும் 'பகு > பகல் > பால் > பன்' (paku > pakal > pāl > pan) என இச்சொற்கள் அமைந்திருக்க வேண்டும்

(xi) நூறு :-

தமிழில் 'நூறு' என்றும், அதுவே பிற இனமொழிகளிலும் காணப்படுகிறது அஃதே அடிச் சொல்லாகவும் வழங்கும். 'நீறு' (பொடி, துகள்) என்ற பொருளில் பலவாகப் பரந்துபட்ட ஓர் எண் என்பதைக் குறிக்க 'நூறு' என்பது வழங்கியது எனக் கூறலாம் தெலுங்கில் 'vanta' என்ற சொல் நூறுக்குப் பதிலாக வழங்கப்படுகிறது.

(xii) தொண்ணூறு, தொள்ளாயிரம், ஆயிரம் :-

எண்ணுப் பெயர்கள் பிற எண்ணுப் பெயர்களோடு ஒன்றிப் பேரெண்களாக மாறுங்கால், 'ஒன்பது + பத்து > தொண்ணூறு' என்றும், 'ஒன்பது + நூறு > தொள்ளாயிரம்' என்றும் குறிப்பிடப் படுகின்றன. நிலை, வருமொழிகளில் ஏற்பட்ட சில மாறுதல்கள் (Morpho-phonemic changes) இவ்வாறு எண்கள் அமைவதற்குக் காரணமாய் இருந்தன இலக்கண நூலார் உயிரீறு வருமொழிகளோடு புணருவதைச் சில சூத்திரங்களால் விளக்குவர். அவ்வாறு விளக்குங்கால் காணப்படுகின்ற மாற்றங்கள் நம் மொழி நூல் ஆய்வை மிகச்சிறப்பாக விளக்கும் நன்னூலார் உயிரீற்றுப் புணரியலில் மேலே கண்ட எண்ணுப் பெயர் மாற்றங்களைச் சுட்டுகின்றார்.

"ஒன்பானொடு பத்தும நூறும் ஒன்றின்
முன்னதின் ஏனைய முரணி ஒவ்வொடு
தகரம நிறீஇப பஃதகற்றி னவவை
நிரலே ணளவாகத் திரிபபது நெறியே". (நன் 194)

(1) 'ஒன்பது + பதது' என்பது 'ஒன்பது + நூறு' ஆக மாறி ('முரணி' என்ற விதியால), அடுதது நிலை மொழியின் முதல ஒகரம தகரவொற்றோடு இயைநது, 'தொன்பது + நூறு' என நிறகும. பின்னா, நிலை மொழியீறறுப 'பது' என்ற விகுதி கழியத 'தொன் + நூறு' என நிறகும. பின்னா, நிலை மொழி யீற்று 'னகரம்' வளைநா ஒலியாகிய 'ண'வாகத் திரியும இதனால் 'தொண் + நூறு' என்ற நிலை, வருமொழிகள நிறக வருமொழி முதல் மெய நிலைமொழி ஈற்று மெய்யிறகு ஏறப ஓரினமாககல (**assimilation**) என்ற முறையால் 'தொண்ணூறு' எனப புணரும

(2) இநத விதிப்படி 'ஒன்பது + நூறு' என்ற நிலை, வருமொழிகள புணருங்கால, 'நூறு' எனபது 'ஆயிரமாக' மாறுபட மேலே கண்ட வரிசையின் படி மாற்றங்கள பெற்று. 'தொன்' என்ற நிலை மொழியீற்று 'னகரம' வளைநா ஒலியாகிய 'ள' வாகத் திரியும் இதனால் 'தொள + ஆயிரம' என நின்று தனிக்குறிலைச் சாாந்து நிற்கும் ஒற்று உயிர் வருவதால் இரட்டிததுப் பின் வருமொழி உயிரோடு ஒன்றித 'தொள்ளாயிரம' என அமையும.

இவ்விலககணப் பாகுபாடுகள தனிமுறையில் நின்று பொருடசிககலை ஏறபடுததுவனவாகக காணபபடுகின்றன ஆனால, மொழி நூல் கருததுபபடி பார்த்தால் 'ஒன்பது' என்ற நிலைமொழியினை முழுமையாக எணணுபபெயராககக கொளளாமல 'தொள' என்ற எணணுப பெயரடியாகக (**Numerical Root**) கொணடால் எளிமையாக அமைககலாம. இதறகுத துணையாகத திராவிட மொழிக குடும்பததுள தமிழோடு ஒன்றிய இனமொழிகளின் (**cognates**) வழககுகள நிற்கும தமிழ மொழியில் காணப பெறும 'ஒன்பது' என்ற எண்ணுப பெயா தெலுங்கில 'தொமமிதி' என்று அமையும். தமிழில் 'தொன்மை என்ற வழககு அடிப்படையாகத் 'தொன்' என்ற சொலலும காணப படுகின்றது.

தமிழில 'ஒன்பது' என்ற எண் வரிசையில் 'தொண்ணூறு' 'தொளளாயிரம்' என்ற பேரெண்கள் காணப்பெறத 'தொமமிதி' என்ற தெலுங்கு வழககு 'தொம்பை' என்றும், 'தொமமநூறு'

என்றும் அமைகிறது கன்னடத்தில 'ஒமபதது' என்ற எண் வரிசையில் 'tombhattu, tombhainūru' என்ற நிலைகள் காணப படுகின்றன இவவாறு பிறமொழி வழககுகளைக காணுங்கால, 'தொல' என்ற பழமையைக குறிககும வடிவம் 'தொள' என நின்று 'தொண்ணூறு', 'தொளளாயிரம' என ஆயிறறேரு என்ற கருததினை நாம நன்கு எணண வேணடியுள்ளது 'எள + நெய > எணணெய' ஆவது போலவும, 'கல + மலை > கனமலை' ஆவது போலவும், 'செல + து > சென்று' ஆவது போலவும, 'தொன் + து > தொன்று' என ஆவது போலவும கொளள லாம இநகப புணரியல விதிகள 'தொல + நூறு > தொண ணூறு' என ஆவதறகும, 'தொள + ஆயிரம > தொளளாயிரம' என ஆவதறகும துணை செயயும இததுடனல்லாமல் 'தொணடு' என்ற சொல் 'ஒன்பது' என்ற மதிபபைக குறிககும சொல்லாக வழஙகுவதால 'தொள' என்ற அடிச்சொல் 'து' என்ற விகுதி பெறறுத 'தொணடு' எனவாயிற்றே என்று எணண வேணடி யுளளது ஈணடுத 'தொள' எனபதற்கு 'ஒன்பது' எனப பொருள கொணடால்தான 'தொண்ணூறு', 'தொள்ளாயிரம' போன்ற எணகளை உருவாகக முடியும. Dr Caldwell 'தொல' என்ற சொலலின் திரிபாகத 'தொள' எனபது இருகக வேணடும எனக கருதுவா. இவவாறு இலககண நூலார பலவறறைப் பிரிததும, விரிததும கூற, மொழி நூலார இனமொழிகளைக கொணடு சொறகளை உருவாக்குவது நமகக வியப்பாகவும தோன்றலாம.

**தொல்காப்பியம் :**

> "ஒன்பான் ஒகரமிசைத் தகரம ஒற்றும
> முநதை ஒறறே ணகாரம இரடடும
> பஃதென் கிளவி ஆய்தபக ரஙகெட
> நிற்றல வேணடும் ஊகாரக கிளவி
> ஒறறிய தகரம் றகர மாகும்"—தொல் எழுதது 445

ஒன்பது + பஃது > தொண்ணூறு

(த்) ஒன்பது + பஃது > தொன்பது + பஃது

(ன > ண) தொண் + ண் + பஃது > (பகரம், ஆயதம இவை கெடல.)

(Change of 'ṉ' into 'ṇ' and duplication of the final consonant)

தொண (ண+ஊ) ணூ+து (த>ற)> [t>r)

>தொண்ணூறு

நன்னூல் :

ஒன்பது+பத்து>தொண்ணூறு

ஒன்பது+நூறு

(த) ஒன்பது+நூறு>தொன்பது+நூறு (பது - கெடல்)

தொன+நூறு>(ன>ண) (n>ṇ)

தொண+நூறு>தொண்ணூறு (assimilation) (n>n)

மொழியியல்

(Tamil) ஒன்பது > (Malayalam) ஒமபது > (Telugu) தொமமிதி > (Kannada) ஒம்பத்து.

Ta. toṇṇūru, toḷḷāyiram
Tel. tombhai, tommanūru.
Kan. tombhattu, tombhainūru

tol>toḷ

√tol+tu>toṇṭu -> -ḷ > -ṇ (cacuminals)

[toṇ+nūru>toṇṇūru]

ஆயிரம் :-

தமிழ், மலையாளம் இரண்டிலும் 'ஆயிரம்' என்றும், தெலுங்கில் 'vēlu' என்றும், கன்னடத்தில் 'savara' என்றும் காணப்படுகின்றன 'sahasra' என்ற வடசொல் ஆயிரமாக மாறியது என Dr Gundert கூறுவர்

sahasra>sahasram (+am)>sahasiram (-i-)>

(loss of s-h-s)>a+airam>a+a>ā

ā+iram>āyiram.

## The Dravidian Numerals

| Numerals | Tamil | Malayalam | Kannada | Telugu |
|---|---|---|---|---|
| One | onru; oru, ōr. | onnu; oru, ōr | okati, ondu; oka. | ondu; or |
| Two | irantu; iru, īr. | rendu; iru, īr, | rendu (iddaru) | eradu, ir |
| Three | mūnru; mū, mu. | mūnnu; mū, mu | mūdu (muggaru) | mūru; mu, mu |
| Four | nālu, nānku; nāl | nāl, nāngu | nālugu; nālu; nala, nal | nālu, nalku; nāl; |
| Five | aintu, añcu; ai | añju; ai | aidu, ēnu; ē | aidu; ai |
| Six | āru; aru | āru; aru | āru; aru. | āru; ara |
| Seven | ēlu, elu. | ēlu; elu | ēdu; ēl, de | ēlu; e. |
| Eight | ettu; en | ettu;. en | enmidi, enmidi; ena. | entu; en |
| Nine | onpatu, onpān, tontu, onpattu, tol | ombadu; tol | tommidi; tommandu, tomma | onbhattu; ombhayi, tom |
| Ten | pattu; pan, patu, patin, | pattu; padin (pand) | padi; pada, pan, pei, bhei, vei. | pattu, hattu; bhattu, vattu, padin, padi, pan |
| Hundred | nūru | nūru | nūru | nūru |

# 40. 'இடப்பெயர்கள்'.
## The Pronouns.

அறிவுலகில் மொழிகளின் உறவையும், மொழியினங்களின் தொடர்பையும் விளக்கும் வகையில் மூவிடப் பெயர்கள் தனிப்பட்ட நிலையை எய்திச் சிறப்புறுகின்றன. எந்த மொழியிலும் காலநிலைக்கு ஏற்றவாறு சொற்கள் மாறுபடுவது இயல்பு. ஆனால், மூவிடப் பெயர்களைப் பொருத்தமட்டில் காலச்சூழலுக்கு அடிமையாகாமல் பெரும்பான்மை மாறாமலும், சிறுபான்மை மிகக் குறுகிய நிலையில் மாற்றம் பெற்றும் இருக்கின்ற தன்மையே (no major change but a few minor alterations) இம்மூவிடப் பெயர்களின் சிறப்பினை எடுத்துக் காட்டும். "The pronouns are more permanent even than the numerels, the signs of case, and the verbal inflexions; and though, like everything else, they are liable to change, yet their connections and ramifictions may be traced amongst nearly all the languages of mankind"[1] என்று Dr. Caldwell இவற்றின் பெருமையைக் குறிப்பிடுவர். திராவிட மொழிகளுள் தமிழ், மலையாளம், தெலுங்கு, கன்னடம் ஆகியவற்றில் இம்மூவிடப் பெயர்கள் அமைந்துள்ள நிலையினையும், அவற்றிடையே காணப்பெறும் உறவு முறையினையும் மொழியறிவோடு ஒப்பிட்டுப் பார்த்தால், இக்கூற்று திராவிட மொழிகளின் தனித் தன்மையைக் காத்து வருகின்றது என்பது தெளிவாகும். (Much light is thrown by the pronouns on the relation-ship of languages and family of languages)

(i) தன்மை ஒருமை – First Person Singular.

| Languages | எழுவாய் வடிவங்கள் (Nominative forms) | உருபேற்கும் வடிவங்கள் (Oblique forms) | பால்காட்டும் விகுதிகள் (Pronominal suffixes) |
|---|---|---|---|
| Tamil | யான், நான் yān, nān | என் en | என், ஏன், அல், அன் en, ēn, al, an |
| Malayalam | ஞான் ñān | என் en | என் ēn |

[1] Dr. Caldwell – A Comparative Grammar of the Dravidian Languages P. 359

| | | | |
|---|---|---|---|
| Telugu | ஏனு, நேனு<br>ēnu, nēnu | நன், நா<br>nan, nā | நி, நு, நின்<br>ni, nu, nin |
| Kannada | ஆன, நான்<br>ān, nān | என, நன்<br>en, nan | என, எனெ<br>en, ene |

மொழி முதற்கண் எ, ஏ என்பன முறையே யெ, யே எனத் திரியும் எனவே, 'ஏன்' என்ற மூலத் திராவிட ஒலி 'யேன்' என்றாகிப் பின் 'யான்' எனத் திரிந்திருத்தல் வேண்டும்.

'யான் > நான்' என்பது பின்னைய திரிபு

Tamil 'ந' > Malayalam 'ஞ' → நாலை > ஞாலை
நாகு > ஞாகு
நொடி > ஞொடி

(Ta) நான் > ஞான் (Ma)
(Ta) யான் > ஆன் (Ka)

( The consonants cannot be taken to represent the pronominal idea of the first person)

Dr Caldwell 'நான்' என்பது முதன்மை வடிவம் என்று முதலில் கூறினும், பின்னர் 'யான்' என்பதனையே முடிவாகக் கூறுகின்றார் "In the first edition, I said, the weight of evidence seemed to be in favour of our regarding 'nān', the Tamil nominative, as the best existing representative of the old Dravidian nominative of this pronoun . ... Viewing the question, however, from a purely Dravidian point of view, the conclusion I arrived at did not seem to me quite satisfactory, and the passage cited above had hardly been printed ere I wished I have decided in favour of 'yān'" [2] என்று அவர் கூறியுள்ளமை நோக்குக Dr Gundert அவர்களும், Dr. Pope அவர்களும் அக்கருத்துக்கு உடன்படுகின்றனர் தமிழில் 'யாவர்' என்ற வினாப்பெயர் 'யார்' என்றும், 'ஆர்'

[2] Dr Caldwell – A Comparative Grammar of the Dravidian Languages P 364 – 365.

என்றும் மாறுபால இயல்பு (yāvar > yār > ār) இதனால் 'யான்' என்பது 'ஆன' என மாறிப பின்னர் நகரவொற்றினை முதலில பெற்று 'நான' என மாறியதோ (yān > ān > nān) எனக் கூறு வா முதல நகரம வேற்றுமை உருபேறகும வடிவததில மறைவதும, ஈறறு னகரம பனமை வடிவததில மறைவதும இயல்பாகக காணபபடுகின்றன. இவ்வாறிருகக, எழுவாய் வடிவததில காணபபெறும நெடில ஆகாரமும, உருபேறகும வடிவததில காணபபெறும எகரமும இவவாயவிறகுத துணை செயய வேணடும்.

Dr Caldwell, அசர இகர உகரங்கள் மூவிடபபெயாகளை முறையே காட்ட வலல உயிாகளாக விளங்குகின்றன என்று கூறுவா. ஆனால், மொழி நூல ஆயவாளா திரு வேஙகட ராஜுலு ரெட்டியார் அவாகள தனமையை ஏகாரமும, முனனிலையை ஈகாரமும, படாககையை ஆகாரமும காட்டும எனபா[3] இததன்மை வடிவததுள முதலிலும, இறுதியிலும நிறகும மெயகள தனமைப பெயாகளைக குறிப்பன ஆகா என்றும், யாணடும நிலைத்துளள உயிரெழுததே தன்மையைக குறிசகும எனறும நாம கொளளல வேணடும.

தெலுஙகின் பழைய செய்யுட்களில 'ஏனு' என்னும வடிவு காணபபடுகிறது. 'நேனு' என்னும் பெயரில் ஏகாரம சோந திருபபினும, உருபேறகுஙகால 'நன்' எனறும, 'நா' என்றும மாறுவதால அதன உண்மை வடிவம 'நான' எனபதுவேயாம தமிழிலுளள ஆகாரம தெலுஙகில ஏகாரமாக மாறும் (a>e– யாணடு>ஏணடு, யாடு>ஏட; யாரு>ஏரு). கன்னட மொழியில வேறறுமை ஏறகுஙகால 'என' எனத திரிவதாலும, வினை விகுதிகளில 'என' எனபதுவே காணபபடுதலாலும நெடில் 'ஆ' தன்மையை உணாததும எனக கொளளல பொருந்தாது தமிழில காணபபெறும 'அடியன்' என்ற பெயாச்சொல, தனமை ஒருமையைக குறிகக 'அடியனேன' என மாறும (பொய்யன> பொய்யனேன்) 'பெணடிா' எனனும பெயரும தனமைப பன்மையைக குறிககுஙகால 'பெணடிரேம' என மாறும. (கிளைஞா> கிளைஞரேம) இககாரணஙகளால 'ஏ' என்ற நெடிலே தன்மை ஒருமையைக குறிககும உயிராகக கருதபபெறும

[3] V Venkatarajulu Reddiar–Dravidic Pronouns P 17.

(ii) தன்மைப் பன்மை—First Person Plural :

| Languages | எழுவாய் வடிவங்கள் Nominative forms | உருபேற்கும் வடிவங்கள் Oblique forms | பாலகாட்டும் விகுதிகள் Pronominal suffixes |
|---|---|---|---|
| Tamil | யாம், நாம், யாங்கள், நாங்கள் | எம், நம், எங்கள் | எம், ஏம், அம், ஆம், ஓம், கும், டும், தும், றும் |
| | yam, nam, yangal, nāṅkaḷ | em, nam, eṅkaḷ | em, em, am, am, ōm, kum, tum, ṭum, ṟum |
| Malayalam | ஞங்கள், எங்ஙள், நாம், நோம், நம்மள | ஞங்ஙள், எங்கள், நம், நும், நம்மள | 0 |
| | ñangaḷ, eṉṉaḷ, nām, nōm, nammaḷ | naṉṉaḷ, eṅgaḷ nam, num, nammaḷ | |
| Telugu | ஏமு, மேமு, நேமு, மனமு | மம, மா, மன | மு, மி, அம |
| | ēmu, mēmu, nēmu, maṉamu | mam, mā, maṉa | mu, mi, am |
| Kannada | ஆம, நாம | எம, நம் | எம, ஏவு, அம் |
| | ām, nām | em, nam | em, ēvu, am |

(The most distinctive sign of the plural of the Dravidian pronouns is 'm' which has been derived from 'um', the conjunctive particle. Dr. Caldwell—'um' – the plural sign of the I Person Mr Reddiar-'m'–the plural sign Hence he concludes that the vowel 'ē' is the sign of the I Person Plural )

திராவிட மொழிகளுள் தமிழில் காணப்பெறும் தன்மைப் பன்மைப் பெயர்கள் இருவகை நிலைகளை அடையும். 'நாம்'

என்பதை முன்னிலை அடக்கிய பன்மைப் பெயர் என்றும் (inclusive plural), 'யாம்' என்பதை முன்னிலையை அடக்கிக் கொள்ளாப் பன்மைப் பெயர் (exclusive plural) என்றும் கூறுவர். இப் பன்மைப் பெயர், மகர ஈறாக நின்று பன்மையை உணர்த்துவ தோடல்லாமல் 'கள்' விகுதி ஏற்று (Neuter plural suffix) (விகுதி மேல் விகுதி ஏற்று) 'யாங்கள்', 'நாங்கள்' என அவை வழங்கப் பெறுதலும் நாம் அறிந்ததே. மிகப் பண்பட்ட வழக்காகக் காணப்பெறும் மரியாதைப் பன்மையை (epicene plural) ஏற்ற பெயர்கள் 'நாங்கள்', 'நீங்கள்', 'தாங்கள்' என வழங்கப் படுதலும் இங்குக் காணப் பெறுகின்றன. **Dr Caldwell** 'நான்' என்ற ஒருமை வடிவத்தில் ஈற்று னகரத்தை நீக்கிப் பன்மையைக் குறிக்கும் மகரவொற்றினைச் சேர்த்து 'நாம்' என்பது பன்மையைக் குறிக்க வந்தது என்பர். இனி, 'உம்' என்ற இடைச்சொல்லைச் சேர்த்து 'நான்+உம்>நாம்' என வந்தது என்பர் திரு ரெட்டியார் அவர்கள், **Dr. Caldwell** கொள்கையை மறுத்து 'ம்' (m) என்பது பன்மையைக் காட்ட வந்ததாகக் கொள்வர். தமிழ், மலையாளம், கன்னடம் ஆகிய மொழிகளில் 'எம்' என்பது உருபேற்கும் வடிவமாக இருந்ததைச் சான்றாகக் காட்டுவர். இந்த 'இம்' என்பதே 'எம்' என மாறுதலைக் காணலாம். தமிழ் மொழியின்கண் கீழ் வரும் சொல் நிலைகள் தன்மைப் பன்மைகளைக் குறிக்குங்கால் 'ஏம்' என்பது விகுதியாகக் காணப் பெறுகிறது.

| | |
|---|---|
| கிளைஞர்>கிளைஞரேம் | (ēm is inserted to express the idea of plurality) |
| பெண்டிர்>பெண்டிரேம் | |

'ஏம்' என்பது யகரவொற்றினை முன்னாகப் பெற்று 'யேம்' என மாறிப் பின் இடையுயிர் மாற்றத்தால் 'யாம்' என ஆயிற்றோ எனக் கருதவும் இடமுண்டு.

ஏம்>யேம்>யாம்

எவ்வாறு நோக்கினும் 'நாம்' என்பதை விட 'யாம்' என்பதே மிகப் பழமையான வடிவமாக இருந்திருத்தல் வேண்டுமெனக் கொள்வதில் பிழை ஒன்றுமில்லை. தெலுங்கில் காணப்பெறும் 'நேமு' (nēmu), 'மேமு' (mēmu) என்ற வடிவங்களைக் காணுங்கால் 'எம்>யாம்' ஆவதுபோல, 'நேமு' என்பது தெலுங்கிற்குரிய ஈற்றுகரம் குறைந்து 'நேம்' என நின்று பின்னர் இடையுயிர் மாற்றத்தால் 'நாம்' என மாறியது எனவும் கொள்வர்.

நன்னூலார்,

"அம் ஆம் என்பன முன்னிலை யாரையும்"—என்ற நூற்பாவில் தன்மைப் பன்மை விகுதிகளைக் குறிப்பிடுதலையும் காண்க.

"அம் ஆம் என்பன முன்னிலை யாரையும்
எம் ஏம் ஓம் இவை படர்க்கை யாரையும்
உம் ஊர் கடதற இருபா லாரையும்
தன்னொடு படுக்குந் தன்மைப் பன்மை"
(வினையியல் 13)

இவ்வாறு தன்மைப்பெயர்களின் வளர்ச்சியை நாம் இலக்கணக் கருத்துக்களோடும், இனமொழிகளின் வடிவங்களோடும் ஒன்றிவரக் கண்டோம்.

(iii) முன்னிலை ஒருமை — Second Person Singular :

| Languages | Nominative forms<br>எழுவாய் வடிவங்கள் | Oblique forms<br>உருபேற்கும் வடிவங்கள் | Pronominal suffixes<br>பால்காட்டும் விகுதிகள் |
|---|---|---|---|
| Tamil | நீ<br>nī | நின், உன், நுன்<br>nin̠, un̠, nun̠ | இ, ஐ, ஆய்.<br>i, ai, āy. |
| Malayalam | நீ<br>nī | நின்<br>nin̠ | ∅ |
| Telugu | ஈவு, நீவு.<br>īvu, nīvu | நின், நீ<br>nin̠, nī | அ, வி, மு<br>a, vi, mu. |
| Kannada | நீன்<br>nīn̠ | நின்<br>nin̠ | அய், இ, ஈ, எ, யே<br>ai, i, ī, e, yē |

(The ancient sign of the Second person singular should be 'nīn̠'. As the second person comes for both rational and irrational beings, the final nasal consonants in 'nīn̠' and 'nīm' are lost and for the plural form the 'ir' is suffixed to the base).

திராவிட மொழியில் காணப்பெறும் 'நீ' என்ற வடிவம் சித்திய மொழியினத்தோடு ஒன்றுபட்டது என Dr. Caldwell அவர்கள் கூறுவர். "In Tamil 'nī' is invariably used as the isolated nominative, instead of 'nīn' –the form which would correspond by rule to 'nān' of I Person Singular..... I must first endeavour to establish the first point now mentioned, viz that traces will be found in various languages of the Scythian group of the existence of a pronoun of the second person, apparently identical with, and certainly allied to, the Dravidian 'nī'" [1] என்பர். 'நா' என்பது 'யா' (அ) 'ஆ' ஆக அமைதல் போல (nā>yā>ā), 'நீ' என்ற வடிவம் 'ஈ' ஆக நிற்றல் இயல்பு (nī>ī) என்பர் திரு ரெட்டியார் அவர்கள் ஒப்புமையாக்கம் (analogy) என்ற விதியைக் கொண்டு மூவிடப் பெயர்களை முறைப்படுத்துவர் 'நான்>நாம்' என ஆவது போலவும், 'தான்>தாம்' என ஆவதுபோலவும், முன்னிலைக்கணும் 'நீன்' என்ற வடிவம் 'நீம்' ஆக நிற்றல் வேண்டுமென்பர் [2] தமிழகக் காப்பியமாகிய சிந்தாமணியில் 'நீம்' என்ற முன்னிலைப் பன்மைச் சொல் வழக்கு காணப்படுகின்றது

"அற்றைப் பகலே அடியேன் வந்தடைவன் நீமே
வென்றிக் களிற்றானுழைச் செல்வது வேண்டு மென்றான்"–

எனக் காணப்படுவதினின்றும் 'நீம்' என்பதே தொன்மை வடிவமாக இருத்தல் வேண்டும் எனக் கூறுவர்.

படர்க்கையும், தன்மையும் ஆகிய பெயர்களில் னகர வொற்று ஒருமையைக் குறித்தல் போல, முன்னிலையுள் 'ன'கரத்தை ஈற்றிலுடைய ஒரு பெயரே ஒருமையின்கண் அமைந்திருத்தல் வேண்டும். கன்னடத்தில் 'நீன்' என்னும் வடிவம் காணப்படுகின்றது தமிழ், கன்னடம், மலையாளம், தெலுங்கு முதலான மொழிகளில் வேற்றுமையுருபு ஏற்கும்போது 'நின்' (nin) என்றே திரிகின்றது இக்காரணத்தால் முன்னிலை ஒருமைப் பெயரின் தொன்மை வடிவம் 'நீன்' எனக் கருதுவர். 'கண்டிசின்', 'சென்றிசின்' என்ற தமிழ்ச் சொற்களில் இறுதி

---

[1] Dr Caldwell — A Comparative Grammar of the Dravidian Languages. P. 384

[2] V. Venkatarajulu Reddiar — Dravidic Pronouns. P. 50-51.

நிலையாகிய 'இன்' என்பது 'நீன்' என்பதன் உருபபு ஆதலால் முன்னிலை ஒருமைப்பெயா 'நீன்' என்பது தெளிவாகும. வழக்கிலும 'கேளின்' (கேள+ான்), 'கேளேன்' (கேள+ஏன்) என்ற வடிவங்கள காணப்படுகின்றன. முன்னிலைப் பன்மையுள 'கேளீா' ('ஒரு சொல கேளீா') என்ற வழக்கு இருந்தநிலையும நோக்குக (இரு+ான் > இரீன் < இரேன). 'சொலலாதீ' என்பது 'சொலலாதே' எனப் பின்னா மாறியிருத்தல வேண்டும.

அடுத்து 'நீன்' என்பதன் நகரத்தைப் பற்றிய சில குறிப்புகள ஈண்டு விளக்கமுறக் காணப்பட்டால நமக்குச் சில உண்மைகள புலனாகும.

| தன்மை | முன்னிலை | தாய் |
|---|---|---|
| யாய் | ஞாய | படாககை |
| எநதை | நுந்தை | தந்தை |
| எம்பீ | நுமபீ | தம்பீ |
| எவ்வை | நுவ்வை | தவ்வை (தமக்கை) |

இவ்வடிவங்களை நோக்குங்கால, மொழி நூல கருத்துப்படிச் சில மாற்றங்கள தெரிய வரும. தன்மை, முன்னிலை, படாககை என்னும மூவிடப் பெயாகளில எகரமும, எகரத்தின் திரிபாகிய யகர ஆகாரமும் (e, yā) தன்மையில் முதற்கண நிற்கின்றன. இனி, படாககையில் எத்தகைய வேறுபாடும இன்றித் தகரமே (t) நிற்கின்றது. முன்னிலையில் மட்டும நகரமும், அதன் போலியாகிய ஞகரமும (n – ñ) முதற்கண் வருகின்றன. இவற்றை நோக்குங்கால் எகரத்தின திரிபாக, யகரத்தைக் கொள்ளுதல பலவகை வழக்குகளால பொருந்தும (e > yā). சான்றாக, 'எவன > யாவன்', 'எது > யாது', 'எவா > யாவா' என்ற சொல வடிவங்கள் ஒரே பொருளை உணாத்துவதால நமக்கு இவ்வுண்மை தெரியவரும். இனி, முன்னிலைக்கண் நகரமும ஞகரமும

ஒன்றுக்கொன்று மாறி வருவதால் அவற்றையும் நோக்குதல் வேண்டும் 'ந, ஞ' என்ற இரண்டும் போலியாக அமைந்து 'நண்டு>ஞண்டு', 'நமன்>ஞமன்' என வருதலையும் காண்க.

இனி, 'நீம்' என்பது 'நீ' ஆகத் திரிதலைக் (nīm>nī) காண்போம். (i) இம்மூவிடப் பெயர்களை ஒட்டிய வகையில் Dr Caldwell முதலானோர் ஒருமையைக் குறிக்க னகரமும், பன்மையைக் குறிக்க மகரமும் அமைந்தன என்பர் (ii) பின் காலப்போக்கில் னகரம் ஆண்பாலையும், மகரம் நேர் மாறாக அஃறிணையையும் குறிக்கத் தொடங்கின. தன்மைக்கண் அஃறிணை வழக்கே கிடையாது ஆதலாலும், 'யான்' என்பதில் னகரம் இருப்பதாலும் அதனை ஆண்பாற் பெயர் என்றும், 'யாம்' என்பதில் மகரம் இருப்பதால் அதனை அஃறிணைப் பெயர் என்றும் கருத அவை இடந்தரா. படர்க்கையில் காணப்பெறும் தான், தாம் என்பனவற்றில் னகர, மகரங்கள் ஒருமை (அல்லது) பன்மையைக் குறிக்கின்றனவா, உயர்திணை (அல்லது) அஃறிணையைக் குறிக்கின்றனவா என்ற ஐயப்பாடு நிகழும். இப்படர்க்கையைப் பொருத்தவரை வினைமுற்றிலிருந்து நாம் ஒருவகை முடிபுக்கு வருதல் கூடும். (iii) தன்மைக்கண் அஃறிணை இல்லை; முன்னிலை இருதிணைக்கும் பொது; படர்க்கை இருதிணையிலும் வந்தே தீரும். இம்முன்னிலை மட்டும் இருதிணைகளுக்கும் பொதுவானதால் நாம் அங்கு எதனையும் வரையறுக்க இயலவில்லை. அன்றி, வினைமுற்றைக் கொண்டு தெரிந்து கொள்ள முடியவில்லை. 'நீன்' என்பதில் னகரம் இருப்பதால் ஆண்பால் என்றும், 'நீம்' என்பதில் மகரம் இருப்பதால் அஃறிணை என்றும் நமக்கு மயக்கம் தோன்றலாம் (iv) இத்தகைய காரணங்களால் 'நீன்' என்பதில் னகரத்தை நீக்கியும் (loss of final consonant), 'நீம்' என்பதில் மகரத்தை நீக்கி 'இர்' இணைத்தும் (loss of final consonant and suffixing 'ir' to the base) நாம் வழங்க நேரிடுகிறது.

(iv) முன்னிலைப் பன்மை. — Second Person Plural:

| Languages | Nominative forms | Oblique forms | Pronominal suffixes |
|---|---|---|---|
| Tamil | நீயிர், நீவிர், நீர், நீங்கள்<br>nīyir, nīvir, nīr, nīṅkaḷ | நும், உம், நுங்கள், உங்கள்<br>num, um, nuṅkaḷ, uṅkaḷ | இர், ஈர், மின், கள்.<br>ir, īr, min, kaḷ |

| | | | |
|---|---|---|---|
| Malayalam | நிங்ஙள், நீம். | நிங்ஙள், நிம. | இன் |
| | niṅṅal, nīm | niṅṅkal, nīm. | in |
| Telugu | ஈரு, நீரு, மீரு, மீரலு, ஈரலு | மிம, மீ | ரு, ரி, டு |
| | īru, nīru mīru, mīralu īralu | mim, mī | ru, ri, ṭu |
| Kannada | நீம, நீவு | நிம | இர, இம, இரி, ஈரி |
| | nīm, nīvu | nim | ir, im, iri, īri |

('nīyir' is the ancient form of the II person plural But due to the principle of analogy, 'nīm' should be the form. 'nī+ivar (thou+they)>nīvir'

nīru+ir > nimir > nīvir (The term 'nimir' is still found in the Ramnad District )
The verbal suffix 'min' is found in 'காணமின்' In plural it is found as 'minir' (காண்மினீர).

மலையாளத்தில் காணப்பெறும் 'நிங்ஙள்' என்ற வடிவம்
தமிழில் காணப்பெறும் 'நீங்கள்' என்ற வடிவத்தின் திரிபே.
தமிழ், தெலுங்கு முதலிய மொழிகளில் முன்னிலைப் பன்மைப்
பெயர் மகர ஈற்றவாய்க் காணப்படாவிடினும் உருபேற்ற வழி,
தமிழில் 'நும்' எனவும், தெலுங்கில் 'மிம' எனவும் காணப்பெறு
கின்றன. ஏனைய மொழிகளில் இருவகை வடிவங்களும் மகர
வீறு பெற்றுக் காணப்படுகின்றன. இக்காரணங்களால் திரா
விடக்குழு மொழிகளுள் மிகப் பழமையான தமிழின்கண் பன்மை
யைக் குறிக்க மகர ஈற்றுப் பெயரே வழங்கியிருக்க வேண்டும்
எனத் துணிவாகக் கூறலாம். பன்மைக்கண் மொழிகளில்
மகரவீறு பெற்ற வடிவங்கள் ரகரவீறு பெற்று மாறின. (nīm>
mīm, mīm+ru>mīru). இதற்குக் காரணம் ஆங்குக் காணப்
பெறும் உயர்திணை, அஃறிணை எனும் பாகுபாடற்ற முன்னிலைப்
பெயர் வடிவங்களே. நாம் மேலே கண்டவாறு னகர, மகர ஈறு
களால் நேரும் குழப்பத்தைத் தவிர்க்க முன்னிலைக்கண் மகர
வீறு ரகரவீறாக மாறியது எனக் கொள்ளுதலும் பொருந்தும்.
நீ+இர்>நீயிர் (-y-Prevention of hiatus) என அமைத்துக்

கொண்டனர் போலும்! திராவிடமொழிகளில் நெடில் ஈற்றுச் சொல்லின் முன் வரும் குறில் அழிந்து போதல் இயல்பு இதனால் நீ+இர்>நீர் என மாறியதோ? இனி, 'நீம்' என்பது 'நிம்' எனத் திரிந்து 'நும்' என மாறியது (nīm>nim>num) 'நும்' என்பது 'கள்' விகுதி பெற்று 'நுங்கள்' எனவும் ஆயிற்று 'நீம்' என்பது 'நீவு' என்றாகி 'இர்' விகுதி பெற்று நீவிர் என வழங்கியிருக்கலாம் (nīm>nīvu ; nīvu+ir>nīvir) இவ்வாறு முன்னிலைப் பன்மைப் பெயர் நமக்குப் பல்வகை மொழிநூல் உண்மைகளை மிகத் தெளிவாகக் காட்டும்

(v) படர்க்கை ஒருமையும், பன்மையும்:
Third Person Singular and Plural.

| Language | Singular | Plural<br>Nominative forms | Oblique forms |
|---|---|---|---|
| Tamil | தான்<br>tāṉ | தாம், தாங்கள்<br>tām, tāṅkaḷ | தன், தம், தங்கள்<br>taṉ, tam, taṅkaḷ |
| Malayalam | தான்<br>tāṉ | தாம், தாங்கள், தாங்ஙள், தங்ஙள், தம்மள்.<br>tām, tāṅkaḷ, tāṅṅaḷ, taṅṅaḷ, tammaḷ | தன், தம், தங்ஙள்<br>taṉ, tam, taṅṅaḷ |
| Telugu | தானு<br>tāṉu | தாமு, தமரு, தாரு<br>tāmu, tamaru. tāru | தன தம<br>taṉ, tam |
| Kannada | தான<br>tāṉ | தாம, தாவு, தாங்கள<br>tām, tāvu, tāṅkal. | தன், தம், தங்கள்<br>taṉ, tam, tankal |

('tāṉ' and 'tām' are invariably found in these languages to denote singular and plural respectively)

திராவிடமொழிகளில் படர்க்கை இடத்துப் பெயர்களாகக் காணப்பனவற்றுள் பெரிதும் வேறுபாடின்றி அமைந்துள்ள தன்மையைக் காணலாம். மேலே காட்டப் பெற்ற அட்டவணையை நோக்கினால் 'தான்' (tān) என்பது ஒருமை வடிவமாகவும், 'தாம்' (tām) என்பது பன்மை வடிவமாகவும் இருத்தலைக் காணலாம். இம்மொழிகளில் 'தாம்' என்ற வடிவத்தோடு அன்றித் 'தாம்+கள்' என்ற அஃறிணை விகுதியேற்றும் 'தாங்கள்' என்ற வடிவமும் காணப்படுகின்றது. இப்படர்க்கை வடிவங்கள் இருதிணைகளுக்கும் பொதுவாக அமைந்துள்ளதை நாம் காணலாம். எல்லா மொழிகளிலும் 'தான்', 'தாம்' என்ற வடிவங்கள் ஒரு தன்மையாய் அமைந்திருத்தல் விளங்கத் தக்கது.

Dr Caldwell இப்படர்க்கை வடிவங்களாகக் காணப்படுபவை படர்க்கை இடத்தைக் காட்டிலும் (III Person) சுட்டுப் பெயர் நிலையையே பெரிதும் ஒத்து நிற்கும் என்பர். இப்பெயர்கள் ஒரு வினைமுற்றின் எழுவாய் வடிவமாக (Subject) நிற்கும் என்றால், அப்போது படர்க்கை இடத்தின் விகுதியினையே பெறுகின்றன.

(எ-டு) தான் சென்றான்.

Nominative
Form + Pronominal
suffix of
III person
singular.

தமிழில் 'தான்' என்பது எழுவாய் ஒருமையாக அமையும். ஆனால், 'தான்', 'தாம்' என்ற சொற்கள் மூவிடப் பெயர்களோடும் இணைந்து வருதலின் அவை பொதுப்பெயர் எனக் கொள்ளவும் வழி செய்யும்.

| (எ-டு) நான் தான் சொன்னேன். | I, II, III Persons- Nominative forms+ tān/tām (in singular and plural) |
|---|---|
| நாம் தாம் சொன்னோம். | |
| நீ தான் சொன்னாய் | |
| நீர் தாம் சொன்னீர் | |
| அவன் தான் சொன்னான். | |
| அவள் தான் சொன்னாள் | |
| அவர் தாம் சொன்னார். | |

என வருதலைக் காண்கின்றபொழுது 'தான்', 'தாம்' என்னும் இரண்டும் தேற்றப் பொருளில் வரும் இடைச் சொற்களாகக் கொள்ளப்படும். ஆதலின், இவை பொதுப் பெயர்ச் சொற்கள் எனக் கொள்ளுதல் பொருந்தாது. படர்க்கை இடத்தில் அவன்,

அவர் என்ற சுட்டுப் பெயர்களோடு சார்ந்து நிற்பதையும் நோக்குங்கால, இவை சொற்பொருளை உறுதிப்படுத்த வல்ல சொற்களே (emphatic additions to the personal and demonstrative pronouns) எனக் கொள்ளப்படும் இன்னும் சிலவிடங்களில் 'தத்தம்' (தாம்+தம்) என்றும், 'தமதம்' என்றும் பன்மை வகையில் முறைமை பேணிப் பொருளையுணர்த்த வல்லதாக அவை அமைகின்றன இனி, 'தான்', 'தாம்' என்பன முன்னிலையில் மரியாதை காட்டும் சொல்லாக (a honorific substitute for the second person pronoun) வருதலையும் நாம் காணலாம் சான்றாக, "தாங்கள் சொன்னீர்" என ஒரு வடிவம் இருத்தலைக் காண்க இவ்வடிவம், இந்தோ-ஐரோப்பிய மொழி நிலையில் காணப்பெறும் 'you>thou' என்ற வடிவத்தை நினைவு படுத்தும். அன்றியும், நாம் முன்னர்க் கண்டவாறு உறவுப் பெயர்களோடு (Relative pronouns) இச் சொற்கள் இணைந்து 'எம்+தந்தை>எந்தை' என்றும், 'நும்+தந்தை>நுந்தை' என்றும், 'தம்+தந்தை>தந்தை' என்றும் அமைதலைக் காண்க. இவ்விடங்களில் 'என்', 'உன்', 'தன்' என்ற வடிவங்கள் அமையாமல், 'எம்', 'நும்', 'தம்' என்ற வடிவங்கள் இருப்பதை நோக்குங்கால், நம் முன்னோர் உறவு வகையில் மரியாதை உணர்த்த விரும்பினரோ என எண்ண வேண்டியுள்ளது

இனி, "அவன் தன்னைக் குறித்து வருந்தினான்", "நீ நின்னைக் குறித்து வருந்தினாய்", "யான் என்னைக் குறித்து வருந்தினேன்" என்ற வடிவங்களைக் காணுங்கால், இலக்கண மரபோடு நின்ற பண்பட்ட வழக்குகள் நமக்குப் புலனாகும். (I-myself; you-yourself; he-himself) இவ்விடங்களில் படர்க்கை நீங்கலாக ஏனைய வடிவங்களின் ஒருமை நிலையில் 'தன்' எனனும் வடிவம் நிலலாது, அவ்வப்பெயர்களின் உருபேற்கும் வடிவங்களான 'நின்' 'என்' எனனும் பெயர்கள் நிற்றலை நாம் அறிதல் வேண்டும்

| | | | |
|---|---|---|---|
| III Person | tan | tam | Vowels used are ā, ī and ē respectively in the Dravidic pronouns |
| II Person | nīn | nīm | |
| I Person | nān | nām | |
| | (-ēn) | (-ēm) | |

இவ்வாறு மூவிடப் பெயர்களில் ஒழுங்கு நீர்மைப்பட்ட வடிவங்கள் காணப்பட்டு, தனிப்பட்ட உயிர்கள் 'ஆ' 'ஈ' 'ஏ' முறையே படர்க்கை, முன்னிலை, தன்மை ஆகியவற்றை உணர்த்துதல் காண்க.

# 41. 'சுட்டு வினுப்பெயர்கள்'.
# The Demonstrative and the Interrogative Nouns.

நம மொழியின சுட்டு நிலையில 'அகரம்' சேய்மையையும், இகரம்' அண்மையையும், 'உகரம்' இடைப்பட்ட நிலையையும் உணர்த்தும் தமிழ் இலக்கியத்தில 'உகரம்' மிக அருகிக் காணப்படுகிறது ஆனல், யாழ்ப்பாணத்தில மட்டும் இவ வழக்கு நிலைபெற்று வருகிறது 'எகர'வினு எல்லாத் திராவிட மொழிகளிலும் காணப்படும் ஒன்று உலக மொழிகளில காணப் பெருத தன்மையைக் கொண்டு இத்திராவிட மொழிகளின அகர, இகர, உகர, எகரங்கள சுட்டுவினுப பொருள்களில தொன்றுதொட்டு வழங்கப்பட்டு வருவது மிகச் சிறப்புடைத்து ஒன்றும். அடுத்து, எகரத்தின் திரிபாகிய 'ய' என்பது ஐம்பால விகுதிகளோடு கூடி வருவதும ஒன்றும 'யாவர்' என்ற சொல 'யார' என்று மாறுவதும, பின்னர 'ஆர' என மருவி வருவதும இயல்பு (yāvar>yār>ār) 'எவன' என்ற வினுப்பெயர 'என்' என இலக்கியத்தில அமையும (evan>en) தெலுங்குச் சொற்களிலும 'ஆ', 'இ' எனும சுட்டுக்களே காணப்படுதலை மொழி நூலார நன்கு பகுத்துக் காட்டுவர்

சுட்டு வினுக்களில அடிச் சொற்கள பெயர்ச் சொற்களுக்கு முன்னல் பெயரடையாக வரும் (Demonstrative Adjective) (எ.டு)' அ+சடல>அக்கடல்' மலையாளத்திலும, கன்னடத்திலும சுட்டு வினுக்கள நெடிலாக வருதலே பெரும்பான்மை வழக்கும தமிழில காணப்பெறும 'அந்த', 'இந்த', 'எந்த' எனும வடிவங்கள் பிற மொழிகளில காணப்பெருமல இருப்பதோடல்லாமல தமிழ்ச் செய்யுட்களிலும தக்க இடம பெறவில்லை இவையன்றிச் சுட்டு வினுக்கள வினையாகவும வருகின்றன தமிழ்ச் சொற்களில பெயரடைகள (adjectives) போன்று வினையடைகள் (adverbs) வருதல இன்மையால 'அங்கு', 'இங்கு' 'எங்கு' என்பன போன்ற சொற்கள தனிநிலையில நின்று சுட்டு வினுப பொருளைத் தருகின்றன

'ஆ' 'ஓ' எனும் வினுக்கள பெயர் வினைகளின் பின் சேர்க்கப்படுகின்றன இவ்வுயிர்களைக் கொண்ட வினுச சொற்றொடர்கள் எளிதாக அமைதல திராவிடமொழிகளின தனி மாண்பாம

(எ-டு) முருகனே —ā .. 'ஆ'

அருளவானே —ō 'ஓ'

## சுட்டுவினா அடிச்சொல் -

## (The Demonstrative and the Interrogative base.)

சுட்டுப்பெயரின் அடிச்சொற்கள் 'அ', 'இ', 'உ' என்னும் தனிப்பிரிவுகளா, 'அவ்', 'இவ்', 'உவ்' என்னும் வகர மெய்யோடு சார்ந்த குற்றெழுத்துக்களா (V or VC) என ஆராய்தல் வேண்டும். 'அ', 'இ', 'உ' என்பன அடிச்சொற்களாயின், தொல்காப்பியர் விதிப்படி 'அ+அன்>அவன்' எனப் புணரும் தொடர்களிலும் 'இ+அணி>இவணி' என நிற்க, அவை புணருங்கால் 'இவ்வணி' எனவே அமைகின்றன. ஆதலின், இவ்வடிச் சொற்கள் இகர உயிரும், வகரமெய்யும் சேர்ந்ததாகக் கொள்ளவேண்டியுள்ளது. வகரம் உடம்படுமெய் என்றால், 'இ+அணி>இவணி' என அமையவேண்டும். ஆனால், 'நல்+அணி>நல்லணி' எனப் புணர்தல் போல 'இவ்+அணி>இவ்வணி' எனப் புணர்தலே மொழி நூலார்க்கு உடன்பாடாகத் தோன்றுகிறது. ஆனால், இலக்கண நூலார் "தனிக்குறில் முன் ஒற்று உயிர் வரின் இரட்டும்" —என்பர். 'ஒப்புமையாக்கம்' (analogy) என்ற நிலையை நம் கருத்தில் கொண்டால் இவ்வடிச் சொற்கள் வகரமெய்யோடு சார்ந்த குற்றெழுத்தாகவே காட்சி தரும்.

சுட்டுப் பெயர்களைப் போலவே இருதிணை ஐம்பால் விகுதிகளையுடைய வினாப்பெயர்கள் உள்ளன. தெலுங்கில் மொழி முதல் அகரமும், இகரமும் இடம் பெயர்தலால் (metathesis) திரிபுகள் அமைகின்றன. வகரம் உடம்படுமெய்யே ஆயின், தெலுங்கு மொழியிலுள்ள 'வாரு', 'வீரு', என்பன போன்ற சுட்டுப் பெயர்களில் 'உயிர் இடம் பெயர்தல்' என்னும் விதிப்படி முதலெழுத்தாய் நிற்றமளவிற்கு அதற்குச் சிறப்புத் தோன்ற இடமில்லை. வகரமெய் இத்தகைய சிறப்பிடம் பெற்று நிற்றலால் அஃது அடிச்சொல்லில் அமைந்ததே எனக் கருத வேண்டியுள்ளது. வகரம் அடிச்சொல்லில் அமைந்ததன்று எனக் கூறுவோர், 'அது' என்ற சுட்டுப்பெயரைக்காட்டி அதில் வகரம் இல்லையே என்பர்.

அடு > அஃடு<br>
இடு > இஃடு — என அமைவதே இல்லை.

அது } + உயிர்வரின் அஃது<br>
இது } + உயிர்வரின் இஃது — என மாறுதலைக் காண்க.

## சுட்டுப் பெயர்கள் :-

(Demonstrative Pronouns)

| பால் | தமிழ் | மலையாளம் | தெலுங்கு | கன்னடம் |
|---|---|---|---|---|
| ஆண்பால் | அவன் | அவன் | வாடு | அவ0 |
| | இவன் | இவன் | வீடு | இவ0 |
| | உவன் | | அகடு | உவ0 |
| | | | ஆகடு | ஆத0 |
| | | | இதடு | ஈத0 |
| | | | ஈதடு | ஊத0 |
| பெண்பால் | அவள் | அவள் | அதி, இதி, | அவள் |
| | இவள் | இவள் | அததி | இவள் |
| | உவள் | | இத்தி | உவள் |
| | | | ஆமெ | ஆகெ |
| | | | ஆபெ | ஈகெ |
| | | | ஆகெ, ஈமெ, | ஊகெ |
| | | | ஈபெ, ஈகெ. | |
| பலர்பால் | அவர் | அவர் | வாரலு | அவர், இவர், உவர், |
| | இவர் | இவர் | வீரலு | அவந்திர், இவந்திர், |
| | உவர் | அவர்கள் | வாரு | இவள்திர், உவந்திர் |
| | அவர்கள் | இவர்கள் | வீரு | உவள்திர், |
| | இவர்கள் | | வாண்ட்ரு | அவாகள், இவாகள், |
| | | | வீண்டரு | உவாகள், |
| | | | | ஆத0கள், ஈத0கள், ஊத0கள் |
| ஒன்றன்பால் | அது | அது | அதி | அதி |
| | இது | இது | இதி | இதி |
| | உது | | அததி | அததி |
| | அஃது | | இததி | இததி |
| | இஃது | | | |
| | உஃது | | | |

| | | | | |
|---|---|---|---|---|
| பலவின்பால் | அவ், இவ், உவ்<br>அவை<br>இவை<br>உவை<br>அவைகள்<br>இவைகள்<br>உவைகள் | அவ, இவ<br>அவகள்<br>இவகள்<br>அதுகள்<br>இதுகள் | அவி<br>இவி<br>அவ்வி<br>இவ்வி | அவி<br>இவி<br>ஆவ்வி<br>இவ்வி |

## வினாப்பெயர் :–

## (Interrogativc Pronouns)

| பால் | தமிழ் | மலையாளம் | தெலுங்கு | கன்னடம் |
|---|---|---|---|---|
| ஆண்பால் | யாவன்<br>எவன் | யாவன்<br>ஏவன்<br>எவன் | ஏவா (டு<br>எவ (டு<br>எவ்வா (டு<br>எவ்வ (டு<br>ஏ (டு | ஆவO<br>யாவனு |
| பெண்பால் | யாவள்<br>எவள் | யாவள்<br>ஏவள்<br>எவள் | எதி | ஆவள்<br>யாவளு |
| பலர்பால் | யாவர்<br>எவர் | யாவர்<br>ஏவர்<br>எவர் | எவாரு,<br>எவாரலு,<br>ஏவாண்ட்ருலு,<br>எவரு, எவ்வரு,<br>எவண்ட்ரு,<br>எவ்வண்ட்ரு,<br>எவ்வாரு,<br>எவ்வாரரு,<br>எவ்வாண்ட்ரு | ஆவர்<br>யாவரு |
| ,, | யார் | ஆர் | ஏரு | ஆர், ஆரு |
| ஒன்றன்பால் | யாது<br>எது<br>யாவது | யாது<br>ஏது<br>எது | ஏதி, எதி,<br>எத்தி, எய்யதி<br>ஏய்தி | ஆவுது<br>யாவுது |
| பலவின்பால் | யா<br>யாவை<br>எவை | யாவா<br>ஏவா<br>எவ | ஏவி<br>ஏயவி<br>எய்யவி<br>எவி<br>எவ்வி | அவுவு<br>யாவுவு |

அவன் எங்து ஏயி ஏன்
என், ஏன் ஏனு
என்ன
என்னே

அஃது இஃது என்பனவற்றின் ஆய்தம் பிறிதொரு மெய்யின் திரிபேயாகும்

பலது > பஃது (பத்து)
கல+தீது > கஃறிது
முள+தீது > முஃடீது

இவை போன்றே அவ் + து > அஃது எனக் கோடலே பொருந்தும்

"The loss of 'v' in the initial lengthening of the demonstrative base in poetry, the use of the forms in literature and in the rules and in the commentaries on grammar and the survival of v' in mixed sandhi strongly indicate that the old demonstrative bases were 'av, iv, and uv' என்பர் Dr. A C Chettiar அவர்கள்

Dr Caldwell படர்க்கை யிடத்திற்குத் தனியே பெயர்கள் இல்லை என்றும், சுட்டுப் பெயர்களே பால் காட்டும் விகுதிகள் அடிச் சொற்களோடு புணர, அப்படர்க்கை இடத்தை உணர்த்தின என்பர். "The Dravidian languages are destitute of pronouns (properly so called) of the third person, and use instead demonstratives signifying this or that, with the addition of suffixes of gender and number" [1] என்று கூறியுள்ளமை நோக்குக அவர் 'அ, இ, உ' என்பனவே அடிச் சொற்கள் என்பர் ஆனால், C. P Venkatarama Ayyar இதனை மறுத்துக் கூறி விளக்கியுள்ளமை நோக்குக "The principles of the languages could be well estimated only by a study of forms of words in the literary dialect of the more ancient classics – which were probably not consulted by Dr. Caldwell – and by the comparative and historical study of Tamil grammar When this is done we find that 'avan', 'ivan' and 'uvan' are perfectly regular forms as they arise from 'av', 'iv' and 'uv' and not from a, i and u" [2] இவ்வாறு திராவிட மொழிகளின் சுட்டு வினாப் பெயர்கள் நம் ஒப்பியல் மொழி அறிவுக்கு நல்விருந்தாய் அமைதல் காண்க

---

[1] Dr Caldwell — A Comparative Grammar of the Dravidian Languages P. 420

[2] C P. Venkatarama Ayyar Dravidic Studies No. 1 P. 9.

# 42. 'சொல்லுருபனியல்'.
# The Morphology.

உள்ளத்தெழும் உணர்வுகளை நாம் ஒலி நீர்மையில் செவ்வனே வெளிப்படுத்தக அவ்வொலிகள் தனித்தோ, தொடர்ந்தோ பொருள் தருங்கால் பொருளசையாக (Morpheme) அமையும். இப் பொருளசை நிலை ஒரு மொழியின் இன்றியமையாக் கூறாகவே விளங்குவதால், அதனைப் பகுத்தறிந்து மொழியாக்கத்தை வளப்படுத்த வேண்டும். பொருளசைகள் பற்றிய பகுதியானது 'பொருளசையியல்' அல்லது 'சொல்லுருபனியல்' (Morphology) என்று கூறப்படும்.

தொல்காப்பியர் மொழியின் மூவகை நிலைகளைத் தெளிவுற விளக்குங்கால்,

"ஓரெழுத் தொருமொழி ஈரெழுத் தொருமொழி
இரண்டிறந் திசைக்குந் தொடர்மொழி உளப்பட
மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே" (எழுத்து. 45.)

என்பர். எல்லாச் சொற்களும் பொருள் குறிப்பனவே என்பது நம் இலக்கண மரபு. நன்னூலார்,

"எழுத்தே தனித்தும் தொடர்ந்தும் பொருள்தரின்
பதமாம்" (நூற்பா. 128) என்பர். இதனால் பொருளசை பற்றிய நிலையை நாம் தெளிவுறக் காணவேண்டியுள்ளது.

மொழியியலில் ஒலியனைப் பற்றிய நிலையை அறிய முற்படும் பொழுது, அதனைத் தனித் தனியே பிரித்துப் பொருட் கூறோடு ஒட்டி நின்று வேறுபடுத்திப் பகுத்துணர்ந்தோம். இனி, இப்பகுதியில் பொருளசைகளையும் அவ்வாறே பகுத்துணர வேண்டும். தனி ஒலியனாகவோ, பல ஒலியன்கள் அமைந்த தொடரசையாகவோ பொருளசை விளங்கும். பொருள் நிலையில் அப்பொருளசைகள் வேறுபடும் பொழுது மிகச் சிறிய வடிவமே 'பொருளசை' (Morpheme) என்று வழங்கப் பெறும். C F. Hockett என்பார், "Morphemes are the smallest individually meaningful elements in the utterances of a language" [1] என்பர். ஆங்கில மொழியில் காணப்பெறும் சில சொற்றொடர்களை அடிப்படையாகக் கொண்டு, நாம் பொருளசைகளைப் பகுத்தறியலாம்.

---

[1] C F. Hockett – A Course in Modern Linguistics. P. 123.

(எ. டு) I remember you
I remember him
I remember her
I remember them

இவற்றுள், 'you, him, her, them' என்னும் நான்கும் பொருளுணர்ச்சியால் வேறுபட்டு நின்று சொற்பொருளைப் பகுத்துக் காட்டுதலின், இவற்றைத் தனித்தனியான பொருளசைகள் எனலாம். தமிழில் உள்ள வினைமுற்றுகள் சிலவற்றைக் கொண்டும் இப்பொருளசைகளைப் பகுக்கலாம்.

(எ. டு) 'உண்டான்' 'உண் + ட் + ஆன்'.
'உண்கிறான்' 'உண் + கிறு + ஆன்'.
'உண்பான்' 'உண் + ப + ஆன்'

இவற்றை நாம் தனித் தனியாகப் பிரித்துக் காணும் பொழுது வினையடிச் சொல் (Verbal root), பால் காட்டும் விகுதி (Pronominal suffix) இவற்றிற்கு இடையே உள்ள 'ட, கிறு, ப' என்னும் மூன்றும் முறையே இறப்பு, நிகழ்வு, எதிர்வு ஆகிய முக்காலங்களைக் காட்டுவதால், அவற்றை நாம் கால இடைநிலைகளாகக் (Tense signs) கொள்கிறோம். இவையும் பொருளசையாக அமைதல் கண்கூடு. எனவே ஒலியனைப் (Phoneme) பகுத்தறிந்ததைப் போலவே, பொருளசையையும் (Morpheme) பிரித்துணர்தல் கூடும். இவை இரண்டும் வெவ்வேறானவை. தனிப்பட்ட ஒலியால் நாம் வேறுபாட்டைக் கற்பித்தல் இயலாது. அவ்வொலிகள் பொருட்பாங்கோடு ஒன்றி நின்று பொருளுணர்ச்சியால் வேறுபடும் பொழுதே பொருளசை என்பது இடம் பெறுகிறது.

(எ. டு) 'கொல்வான்'.
'சொல்வான்'.

இவற்றுள் 'கொல், சொல்' என்பன சேர்ந்தே அவை பொருள் சிதையாமல் இருத்தலை நோக்குக.

நம் தமிழ் இலக்கணத்துள், வேற்றுமையுருபுகள், (Case signs), கால இடைநிலைகள் (Tense signs), எண்ணுப் பெயர்கள் (Numerals), இடப் பெயர்கள் (Pronouns), சாரியைகள் (Inflexional increments), இன்னும் இவை போல்வன பிறவும் தனித் தனியே அவ்வப் பொருள் நிலையில் பொருளசைகள் (Morphemes)

ஆக விளங்குதலை அறிவோம பகுதிகள (Stems) சொற்களாக வும இயங்குவதால அவற்றை உரிமைப பொருளசைகள (Free forms) எனகிறோம இடைநிலை, விகுதிகளை அவறறின சார்பு நிலை கருதிச சாாபு அசைகள (Bound forms) என்று கூறுவா.[2] H A. Gleason எனபாா, "A stem is any morpheme or combination of morphemes to which an affix can be added" [3] எனறு கூறுதலையும காண்க

ஒரு சொறறொடரில்சாரியைகள (Inflexional increments) வெறும ஒலித்துணையாகவே வருதலை நாம காணலாம இதனால நாம இவறறைப பொருளசையாகவோ (Morpheme), மாறறுப பொருளசையாகவோ (Allomorph) கொளளாமல வெறறுப பொருளசைகளாகவே (Empty morphemes) கருத வேணடியுளளது இனி, இறநதகால இடைநிலைகளாக நன்னூலாா காட்டும 'தடற' ஒறறுககளும, 'இன' என்பதுவும ஒரு குறிப பிடட சூழநிலையிலே வநதும, ஒரே பொருளில் வநதும் அமைவதால, அவறறை நாம 'மாற்றுப பொருளசைகள' (Allomorphs) எனகினறோம

(எ டு) 'நடந்தான்' → - த - ⎫
'உணடான்' → - ட - ⎬ (Past tense signs )
'சென்றான்' → - ற - ⎪
'உறஙகினான' → - இன - ⎭

இதனை Gleason என்பவா, "An allomorph is a variant of a morpheme which occurs in certain definable environments" [4] எனறு கூறுவா இவவாறே பிற கால இடைநிலைகளையும கொளளலாம இடைச்சொல, உரிச்சொல எனபனவும தனித தனி நீாமையில பொருளசைகளாக வரும சிறபபைப பெறும அவறறுள உரிச்சொறகளின் திறத்தை மேலே பெயரடைகள என்னும பகுதிககண கண்டோம இனி, இபபொருளசைகளை அவவப்பகுதியுள ஆஙகாஙகு முறையாகக காணலாம. ஒரு மொழியின் வளாச்சிப பகுதியில இவை ஆற்றும ஆககப பணி களை நாம வரையறுததுக கூறபபுகின், அம முயற்சி சிறந தோஙகும் எனபது வெளிபபடை

---

[2] Dr ரா சீனிவாசன் – மொழியியல பககம 93

[3] H. A Gleason – An Introduction to Descriptive Linguistics P. 59

[4] -Ibid- P. 61

# 42 (a) 'பதவியல்'-'நன்னூல்-தொல்காப்பியம்-மொழியியல் கண்ணோட்டம்'.

# Morphology as revealed from 'Tolkappiyam and Nannul'.

தொன்மைத் தொல்காப்பியத்தைத் தழுவியும், இளம்பூரணர் உரையைத் தழுவியும் பவணந்தியார் நன்னூல் என்ற ஒன்றினை இயற்றினார். வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன் கண்ட முதனூலை அடியொற்றி, முன்னோர் நூலின் முடிபு ஒருங்கொத்துப் பின்னோன் வேண்டும் விகற்பங்கூறி அழியா மரபினால் இவ்வழிநூல் சிறந்துள்ளது. நன்னூலார் முன்னோர் மொழிபொருளைப் பொன்னே போலப் போற்றும் பெற்றியாளர். தங்கால வழக்கினைத் தழுவி நூல்கண்ட இவர் பொருளியலைத் தவிர்த்து எழுத்து, சொல் என்ற இரண்டினையே தொகுத்தும் விரித்தும் கூறியுள்ளார். இவ்விரு பேராசிரியர்கள் காட்டுகின்ற இலக்கண நெறிகள் இன்றைய மொழியியல் துறைக்குப் பெரிதும் துணைபுரிகின்றன.

நன்னூலார் எழுத்தியலைத் தொடர்ந்து பதவியல் என்ற ஒன்றினைக் கூறுவர். பதம் என்ற வடசொற்குச் சொல் என்பது பொருள் கூறின் இவ்வியல் சொல்லைப் பற்றிய இயலாக நின்று சொல்லதிகாரத்துக் கூறப்படுதல் வேண்டும் எனக் கொள்ளல் தகும். ஆனால், எழுத்தியலின் முதற்கண் அதன் அக, புறவிலக்கணங்களைக் கூறுகின்றவர் எண் முதலாகப் போலி ஈறாக அமைந்த பத்தும் எழுத்தின் அகவிலக்கணமென்றும், அவற்றைத் தொடர்ந்து பதம், புணர்ப்பு என்னும் இரண்டும் புறத்திலக்கணமென்றும் கொண்டு எழுத்தியலைச் சார்ந்து, பதவியல், உயிரீற்றுப் புணரியல், மெய்யீற்றுப் புணரியல், உருபு புணரியல், என்பனவற்றைக் கூறுவர். ஈண்டுக் காணப்பெறும் பதவியல் வடமொழியிலக்கணத்தைத் தழுவி அமைவதால் 'பதம்' எனும் வடமொழியை முற்கூட்டிப் பதவியல் எனப் பெயரிட்டனரோ என்ற ஒரு குறிப்புப் புலனாகின்றது. ஆனால், தொல்காப்பியர் எழுத்ததிகாரத்தில் நூன்மரபு, மொழிமரபு, பிறப்பியல் என்ற வரிசையில் கூறிச்செல்வது தனித்த மாண்பாக இலங்குகின்றது. நன்னூலில் காட்டப்பெறும் பதவியல் கருத்துக்கள் தொல

காபபிய மொழிமரபில மட்டும அமைவதிலலை மாருக, சொல்லதிகாரததில ஆஙகாஙகு இடம பெறறுளளமையை நாம காண இயலும

பதம என்ற பொருளை விளககுஙகால எழுததுத தனிததும தொடாநதும பொருள தரின் பதம, அபபதம பகுபதம், பகாபபதம என இருவகைபபடும எனபா அடுதது, ஓரெழுததொருமொழி, தொடரெழுததொருமொழி என இரணடினைக காட்டுவா

*"உயிாமவி லாறுந தபநவி லைநதுங*
*கவசவி ஞலும யவவி லொன்று*
*மாகு நெடிஞெது வாஙகுறி லிரணடோ*
*டோரெழுத தியலபத மாறேழ சிறபபின"* (129)

*"பகாபபத மேழ பகுபத மொன்பதும*
*எழுதநீ ருகத தொடரு மென்ப".* (130)

தொலகாபபியா மொழி மரபின்கண ஓரெழுததொருமொழி, ஈரெழுததொரு மொழி, இரணடு எழுததிறகு மேறபடட தொடா மொழி என மூனறினைக காட்டுவா.

*"ஓரெழுத தொருமொழி ஈரெழுத தொருமொழி*
*இரணடிறந திசைககுந் தொடாமொழி உளபபட*
*மூனறே மொழிநிலை தோன்றிய நெறியே"* (45)

ஒன்று, இரணடு, பல என்பது வடநூல வழககாதலின், அது பறறியே தொலகாபபியா மொழிநிலையை மூனருககக காட்டினா என்று சஙகரநமசசிவாயா கூறுவா வட மொழியின்கண ஒன்று இரணடு, பல என்பன வழககிற்கேயல்லாமல் மொழியின் எழுததுககளுககு அனருதலின மேலைக கருதது பொருதத முடையதாகாது சிவஞான முனிவா ஈரெழுததொரு மொழி யினைத தொடாமொழி என்பா தமிழின்கண் சில, பல எனனும வழககு நோககி ஈரெழுததொரு மொழி, இரணடிறந திசைககுந தொடாமொழி எனறு தொல்காபபியா கூறினா என்று நசசினாாக்கினியா கருதுவா இவவாறு வழஙகப பெறும மொழிநிலைகள இனறைய மொழியியலில நம சிநதனையை வளாககினறன தனி மொழி (Isolative language) என்ற ஒரு மொழித தனமை மொழியினகண அமைநதுளளமைககு இதுவே சானருக அமையும ஒரே மொழியில தனி நிலை, ஒட்டுநிலை (Agglutinative), உட்பிணைபபு (Inflectional) என்ற மூவகை நிலைகள வநதமைதலும கூடும் எனற மொழியியற் கருததுககு இபபகுதிகள துணைபுரிதல காணக

நன்னூலில் பகாப்பதம், பகுபதம் என்னும் இருபாகுபாடு களை அடுத்து விளக்குகின்றார். பகுபடாமை பயனற்றதும், காரணமின்றி இடுகுறியாக அமைந்ததும் ஆகிய தன்மையுடையதே பகாப்பதமாம். அது பெயர், வினை, இடை, உரி என நான்காகப் பிரியும். இவர் காட்டும் இக்கருத்துக்கள் நன்னூலிலேயே சொல்லதிகாரத்துப் பெயரியல், வினையியல், இடையியல், உரியியல் ஆகிய நான்கு இயல்களில் விரித்துக் கூறப்படுகின்றன. தொல்காப்பியர் சொல்லதிகாரத்தில் சொல்வகையை விளக்கிப் பெயர்ச்சொற்கிளவி, வினைச்சொற்கிளவி, இடைச்சொற்கிளவி, உரிச்சொற்கிளவி என நான்கு வகைப்படும் என்பர். அவற்றை முறையே பெயரியல், வினையியல், இடையியல், உரியியல் என்ற இயல்களில் விளக்குவர். 'நிலம்' என்பது பெயர்ப்பகாப்பதம் என நன்னூலார் கருதுவர். ஆனால், மொழியியலில் 'நில+அம்' எனப் பிரித்து வினையடிச் சொல்லோடு (Verbal Root) ஆக்கநிலை விகுதி (Formative suffix) புணர்ந்தமைதலை நாம் காண்கின்றோம். இக்கருத்து ஒப்பியல் இலக்கணத்தின் வளர்ச்சியைக் காட்டுவதாம். வினைப் பகாப்பதங்கள் அடிச்சொற்கள் எனனும் 'Verbal Roots' ஆகும். இடைச்சொல்லும் (Particle), உரிச்சொல்லும் (Attribute) தமிழ்ச் சொற்களின் வளர்ச்சியைக் காட்ட வல்லனவாய் அமையும்

பகுபதம் என்ற ஒன்றினைப் பொருளிடங்காலம் சினை குணந் தொழிலின் வருபெயராக நன்னூலார் காட்டுவர் இக்கருத்துக்கள் அனைத்தும் பெயரியல், வினையியல் என்பவற்றில் மிக விளக்கமாகக் காட்டப்படுகின்றன சொற்பொருள் அமைதியோடு (Semantic aspect) இம்மொழிச் சொற்கள் அமைந்துள்ளமையை நாம் இலக்கியங்களில் பரக்கக் காணலாம். இதனைத் தொடர்ந்து நன்னூலார் பகுபத உறுப்புக்கள் எனக் கொண்டு,

"பகுதி விகுதி யிடைநிலை சாரியை
சந்தி விகார மாறினு மேற்பவை
முன்னிப் புணர்ப்ப முடியுமெப் பதங்களும்" (133)

என்று சொல்லுவர். இக்கருத்து வினையியல் என்னும் பகுதியில் அடங்கும். தொல்காப்பியர் வினையியலில் இவற்றை வினைமுற்றின் பகுதிகளாக எடுத்துக் காட்டி விளக்குகின்றார். நன்னூல் காட்டும் இக்குறிப்பிட்ட பகுதி இன்றைய மொழியியல் போற்றிவுக்கு நிறைவமைப்பாய் விளங்குகின்றது. பகுதியாவது பெயராயிருப்பின் அதனை 'Noun theme' எனலாம் வினையாயின் 'Verbal base' அல்லது 'வினைப்பகுதி', 'Verbal Root'

அல்லது 'வினையடிச் சொல்' எனக் கொள்ளலாம். விகுதியை 'Suffix' எனப் பொதுவாக அழைத்தாலும் அது பால் காட்டும் விகுதியாகிய 'Pronominal Suffix' ஆகும். பகுதி, விகுதி இரண்டிற்கும் இடைப்பட்ட 'இடைநிலை' கால இடைநிலையாகிய 'Tense-sign' ஆகும். இடைநிலைக்கும் விகுதிக்கும் இடைப்பட்ட அமைப்பில் தோன்றக் கூடிய இலக்கண அமைப்பு 'சாரியை' என்பதாம். 'சார் + இயை' எனப் பிரித்துச் சார்ந்து வரக்கூடிய இயல்புடைய ஒரு சொல் என்பர். இதனை 'Inflectional Increment' என மொழி நூலார் விளக்குவர். ஆனால், இது வெற்றுருபனாகவே (Empty Morpheme) வருதலைக் காண்க. 'சந்தியும்' விகாரமும் சொற்கள் புணர் நிலையில் வருகின்ற காரணத்தினால் அவற்றைப் 'புணரியல் மாற்றங்கள்' அல்லது 'Morpho-phonemic changes' எனக் குறிப்பிடுவர். தொல்காப்பியர் காட்டும் சாரியை, மற்றும் பிற இலக்கணக் கூறுகள் அனைத்தும் நன்னூலாரால் பதவியலின் கண் எடுத்தாளப்படுகின்றன.

நட + த் + த் + அன் + அன் > நடந்தனன்

பகுதி + சந்தி + இடைநிலை + சாரியை + விகுதி > வினைமுற்று
|
(ந்) விகாரம்

**V R + MPC + T. S + I I + P S > F. V (Finite Verb)**

நன்னூலார் காட்டும் 'பகாப்பதங்களே பகுதியாகும்' எனும் நூற்பா திராவிட மொழியாய்வில் ஒப்பியல் மொழிப் படிப்பிற்குத் துணை புரிவதோடன்றித் 'திராவிட அடிச்சொற்கள் ஓரசைச் சொற்களே' என்னும் கொள்கையை வலியுறுத்தும் **"The Dravidian roots were originally mono-syllabic"** என்னும் **Dr Caldwell** அவர்களின் கருத்து இலக்கண நிலையோடு ஒன்றியிருத்தல் காண்க. இதனைத் தொடர்ந்து பண்புப் பெயர்கள் புணருமாற்றைச் சிறப்பு விதிகளாகக் காட்டுகின்றார்.

"செம்மை சிறுமை சேய்மை தீமை
வெம்மை புதுமை மென்மை மேன்மை
திண்மை யுண்மை நுண்மை யிவற்றெதிர்
இன்னவும் பண்பிற் பகாநிலைப் பதமே" (135)

இவையனைத்தும் சொல்நிலையால் பகுபதங்களாகக் கருதப் பெறுகின்றன. இப்பண்புப் பெயர்கள் (Quality nouns) வருமொழிகளோடு புணருங்கால் ஈற்று 'மை' விகுதி கெட அவற்றின் பெயரடை வடிவங்களே (Adjectival forms) நின்று புணர்ச்சி விதிகள் பெறுகின்றன.

"ஈறு போத லிடையுகர மியயாதல்
ஆதி நீட லடியகர மையாதல
தனறொற றிரடடன முனனின்ற மெயதிரிதல்
இனமிக லினையவும பணபிற கியலபே" (136)

எனும் நூறபா வாயிலாகப பணபுப பெயாகள் புணருமாறறை உரிய மாறறஙகளோடு எடுததுக காடடுகினறா

(எ டு) நனமை + அன் > நலலன

இனி, வினைபபகுதியைக காடடுங்கால "நடவா மடிசீ" எனத தொடஙகிச "செயயென் ஏவல வினைப பகாபபதமே" எனப பலவறறைத தொகுததுக காடடுகினறா இவை யாவும முனனிலை ஒருமைககண வரும ஏவல வினை முறறுககளே (Imperative Verbs) மெய்யீறு பெற்ற வினையடிச சொறகள (Verbal roots ending with consonants), உயிரீறு பெறற வினையடிச் சொறகள (Verbal roots ending with vowels) என்று இரு பகுதிகளாக அமையும. இவவேவல வினை முறறுககள் தாமே அடிசசொறகளாக விளஙகுகின்றன ஏவல பகுதிககுப பின் 'செயவி' என்னும ஏவல, 'செய்விபபி' என்னும இணையேவல் (Causal Verb) எனபன நன்னூலாரால கூறபபடுகின்றன

"செயயென் வினைவழி விபபி தனிவரிற்
செயவியென் னேவ லிணையினீ ரேவல". (138)

வினையடிச சொல்லொடு இடைநிலையும் விததியும புணாதல் போலப் பிறவினை விகுதிகள் சோந்து புதியநிலைகளை உருவாக்கு கின்றன.

அடுதது, நன்னூலாா விகுதிகளாகப் பலவற்றைக் குறிப பிடுகின்றா தெரிநிலை வினைமுறறு விகுதிகள, பெயரெச்ச விகுதி கள, தொழிறபெயா விகுதிகள, பணபுபபெயா விகுதிகள, பிறவினை விகுதிகள முதலியன ஈண்டு விளககப்படுகின்றன. இவை மொழியியலாா காடடும பாலகாடடும விகுதிகளே (Pronominal Suffixes) தொல்காபபியா வினையியலில காடடுகின்ற பலவேறு இலககணக கூறுகளை ஈணடு நனனூலாா தொகுத்துக காடடியுளளாா.

இடைநிலை எனவொன்றினை எடுதது விளககுகின்ற பொழுது கால இடைநிலைகள் (Tense-signs) வரையறுககப படவே காலம பற்றிய கருததுககளும் எடுததுச் சொலலபபெறு கின்றன. இறப்பு, நிகழவு, எதிாவு என முக்காலஙகள் தொல்

காப்பியரால் கூறப்பட, அவற்றையொட்டி முக்கால இடைநிலை களையும் நன்னூலார் தனித்தனியே விதந்து கூறுகின்றார்

"தடறவொற றின்னே யைம்பான் மூவிடத்
திறந்த காலந் தருந்தொழி லிடைநிலை". (142)

"ஆநின்று கின்று கிறுமூ விடத்தின்
ஐம்பா னிகழ்பொழு தறைவினை யிடைநிலை" (143)

"பவ்வ மூவிடத் தைம்பா லெதிர்பொழு
திசைவினை யிடைநிலை யாமிவை சிலவில" (144)

மிகப் பழங்காலத்தில் வினையடிச் சொற்கள் கால இடைநிலையை ஏற்காமல் விகுதி ஒன்றினையே ஏற்று அமையும் (Suffixes denote both the tenses and pronominal terminations together in the absence of proper tense-signs) என்ற மொழிநூல் உண்மைக்கு இடந்தரும் வகையில் காலங்காட்டும் விகுதிகள் வகுத்துக் காட்டப் பெறுகின்றன

"றவ்வொ டுகர வும்மைநிகழ் பல்லவுந்
தவ்வொ டிறப்பு மெதிர்வும் டவ்வொடு
கழிவுங் கவ்வோ டெதிர்வுமின் னேவல்
வியங்கோ ளிம்மா ரெதிர்வும் பாந்தஞ்
செலவொடு வரவுஞ் செய்யுநிகழ் பெதிர்வும்
எதிர்மறை யும்மையு மேற்கு மீங்கே" (145)

இவற்றைத் தொல்காப்பியர் 'வினையியலில்'

"கடதற வென்னும்
அந்நான் கூர்ந்த குன்றிய லுகரமோடு
என்ஏன் அல்என வரூஉம் ஏழும்
தனவினை யுரைக்குந் தன்மைச் சொல்லே" (203) என்றும்,

"அவற்றுள்
செய்கென் கிளவி வினையொடு முடியினும்
அவ்வியல் திரியாது என்மனார் புலவர்" (204) என்றும்,

"மாரைக் கிளவியும் பல்லோர் படர்க்கை
காலக் கிளவியொடு முடியும் என்ப" (207) என்றும்

தனித்தனியே கூறப்படுகின்றன. இப்பகுதி திராவிடமொழிகள் ஒட்டுமொழி வகையைச் சார்ந்தவை என்னும் கருத்திற்குத்

துணை செயவதை நாம காணலாம். சாரியை, சந்தி, விகாரம் எனபன பதவியலில தனியே விதந்து கூறபபடுகின்றன.

நன்னூலாா வடமொழியாககம் எனத் தனியே ஒன்றனைப பதவியல இறுதியில விரிததுக காட்டி வடமொழி மதந்தழுவிக கூறியுளள கருததுககள சிநதிததற்குரியன தொலகாபபியா கூறும,

"வடசொற கிளவி வடவெழுத தொரீஇ
எழுததொடு புணாந்த சொல்லா கும்மே" (401)

என்பதனைத தழுவி இவ்வடமொழியாககம வநதிருப்பினும், நனனூலில தறபவம, தற்சமம என விரிவாக விதந்து கூறப படடுளளன. இயலிறுதியில நனனூலாா,

"றனழஎ ஒவ்வு முயிாமெயயு முயிரள
பலலாச சாாபுந தமிழபிற பொதுவே" (150) எனத

தமிழுககேயுரிய சிறபபெழுததுககளையும், பிற பொதுவெழுததுக களையும தனியே காட்டி முடிககின்றா. "Tamilisation of Sanskrit words" என்னும தமிழாகக நீாமையினைப பிறமொழிச் சொறகளுககாக வகைப்படுத்திக காட்டுகின்ற ஒருவகை இயலபு இலககணமரபாக ஈணடு அமைகிறது. இவ்வாறு நன்னூலார் காட்டும பதவியல கருத்துககள தனிதத ஓரியலில் கூறப்பெறு வதை நாம கருததில கொள்ளவேணடும். எழுதததிகாரத்தில் வினையியலுககுரிய மாணபுகளைப பதவியலில விரித்துக கூறு வது நனனூலாரின தனிப்பட்ட படைபபாம். பகுபத ஆராய்சசி எனற இபபகுதி இன்றைய மொழியியல் ஆயவுககுப் பல்லாற் றுனும துணைபுரிவதை நாம் ஈணடு விளககமாகக கண்டோம். இவவாறு இலககண நெறிகளும், மொழியியல் ஆய்வும் ஒருங்கே இயைநது நிறறலே அறிவு வளர்சசி எனலாமே!



# 42. (b) 'இடைச் சொற்கள்'.
# The Particles.

இலக்கண வளமிகு செம்மொழியுள் சொற்களைப் பெயர், வினை, இடை, உரி என நான்காகப் பகுத்தனர். இவற்றுள் இடைச் சொற்களும் உரிச் சொற்களும் பெயர் வினைகளை யடுத்துத் தனியே விதந்து கூறப்படுகின்றன இடைச் சொற்களை 'Particles' என்றும், உரிச் சொற்களை 'Attributes' என்றும் வழங்கலாம். இடைச் சொற்கள் தனித்தியங்கும் தன்மை பெறுமல் பெயர், வினைகளையொட்டி நின்று பொருட் சிறப்பைத் தருகின்றன மொழியியல் துறையில ஒட்டுக்களாக (Affixes or clitics) இவற்றைக் கொள்வர். நம தமிழ இலக்கண நூலகள் அனைத்தும இடைச் சொற்களை முழுச் சொற்களாகவே கருதுகின்றன.

"இடையெனப் படுவ பெயரொடும வினையொடும
நடைபெற றியலும தமக்கியல பிலவே" (249) என்பது
தொல்காப்பியம

சான்று.

'அதுகொல தோழி காம நோயே' (குறுந 5) – பெயர் சார்ந்து வருதல்.

'வருகதில அம்ம எமசேரி சேரர்' (அகம 276) – வினை சார்ந்து வருதல.

தொன்மைத் தொல்காப்பியமும, நன்னூலும் இடைச் சொற்களை உணர்த்தும பாங்கில் கொள்ளும வேறுபாடுகள் பழையன கழிந்து புதியன புகும நிலைக்குச் சான்றுகளாகவே அமையும தொல்காப்பியர் இடைச் சொற்கள் ஏழு வகைப்படும் என்பர்

(1) ஒரு சொலலோடு ஒரு சொல புணரின, பொருள் நிலைக்கு உதவியாக வரும.

(2) வினைச் சொலலை முடிக்குங்கால, காலப் பொருளினை உடையதாய வரும (Tense signs)

(3) செயப்படு பொருள முதலாகிய வேற்றுமைப் பொருட்கள் உருபாய வரும் (Case signs)

(4) அசைநிலைக் கிளவியாக வரும். (Expletives)

(5) இசைநிறைக் கிளவியாக வரும். (Sound fillers or metre fillers)

(6) தத்தம் குறிப்பிற் பொருளுணர்த்துவனவாய் வரும். (Suggestive particles)

(7) ஒப்பில் வழி அவ்வொப்புமைப் பொருள் பயப்ப வரும் (Particles of comparison)

இனி, நன்னூலார் வேற்றுமை, வினை, சாரியை, ஒப்புருபுகள், தத்தம் பொருள், இசைநிறை, அசைநிலை, குறிப்பு எனும் எண் வகையான இடைச்சொற்கள் இயங்கி வரும் என்பர். அவற்றிற்கு உரிய பொருளாய் அமைவன பதினைந்தாம். அவையாவன. தெரிநிலை, தேற்றம், ஐயம், முற்று, எண். சிறப்பு, எதிர்மறை, எச்சம், வினா, விழைவு, ஒழியிசை, பிரிப்பு, கழிவு, ஆக்கம் இவ்வாறு பலவேறு நிலைகளில் பயின்று வரும் இடைச்சொற்கள் சிறப்பு நீர்மையில் பொருள் தருமாற்றைச் சுருங்கக் காண்போம்.

| இடைச் சொல்: | தொல்காப்பியம். | நன்னூல்: |
|---|---|---|
| மன் | கழிவு, ஆக்கம், ஒழியிசைக்கிளவி | அசைநிலை, ஒழியிசை, ஆக்கம், கழிவு, மிகுதி, நிலைபேறு |
| தில் | விழைவு, காலம், ஒழியிசைக்கிளவி. | விழைவு, காலம், ஒழியிசைக்கிளவி |
| கொன் | அச்சம், பயமிலி, காலம், பெருமை | —— |
| உம் | எச்சம், சிறப்பு, ஐயம், எதிர்மறை, முற்று, எண், தெரிநிலை, ஆக்கம். | எதிர்மறை, சிறப்பு, ஐயம், எச்சம், முற்று, அளவை, தெரிநிலை, ஆக்கம். |
| ஓ | பிரிநிலை, வினா, எதிர்மறை, ஒழியிசை, தெரிநிலை, சிறப்பு | ஒழியிசை, வினா, சிறப்பு, எதிர்மறை, தெரிநிலை, கழிவு, அசைநிலை, பிரிப்பு |
| ஏ | தேற்றம், வினா, பிரிநிலை, எண், ஈற்றசை | பிரிநிலை, வினா, எண், ஈற்றசை, தேற்றம், இசைநிறை. |

| இடைச்சொல்: | தொல்காப்பியம்: | நன்னூல்: |
| --- | --- | --- |
| என | வினை, குறிபபு, இசை, பணபு, எண, பெயா | வினை, பெயா, குறிபபு, இசை, எண, பணபு |
| என்று | வினை, குறிபபு, இசை, பணபு, எண, பெயா. | வினை, பெயா, குறிபபு. இசை, எண, பணபு. |
| மற்று | வினைமாறறு, அசைநிலை | வினைமாற்று, அசைநிலை, பிற்து பொருள |
| எற்று | இறநத பொருண்மை | —— |
| மறறையது | சுட்டு நிலை ஒழிய இனங குறிததல | சுடடியதறகினம. |
| மன்ற | தேற்றம | —— |
| தஞசம | எண்மைப பொருள | —— |
| அநதில | அசைநிலைககிளவி, இடபபொருள. | அசைநிலை, இடப பொருள. |
| கொல | ஐயம் | ஐயம, அசைநிலை. |
| ஏல் | ிலககம | |
| ஆர் | இயறபெயா முன்னாப பலரறி சொலலாதல்; அசைநிலை | —— |
| குரை | இசைநிறை, அசைநிலை | —— |
| மா | வியஙகோள அசைசசொல | வியஙகோள அசைசசொல. |
| முன்னிலை அசைச சொறகள | மியா, இக, மோ, மதி, இகும, சின் | மியா, இக, மோ, மதி, அததை, இததை, வாழிய, மாள, ா, யாழ. |
| அமம | கேடபிததல. | உரையசைப பொருள கேணமின் என்னும பொருள |
| ஆஙக | உரையசை. | —— |
| போல (ஒப்பில் போலி) | உரையசை | —— |

| இடைச்சொல் | தொல்காப்பியம் | நன்னூல் |
| --- | --- | --- |
| அசைநிலைச் சொற்கள் | யா, கா, பிற, பிறக்கு, அரோ, போ, மாது | யா, கா, பிற, பிறக்கு, அரோ, போ, மாது, இகும், சின், குரை, ஓரும், போலும், இருந்து, இட்டு, அன்று, ஆம், தாம், தான், கின்று, நின்று |
| ஆக, ஆகல், என்பது | பிரிவில் அசைநிலை | |
| ஒள | சிறப்பு, மாறுபாடு | —— |
| குறிப்புச் சொற்கள் | நன்றே, அன்றே, அந்தோ, அன்னோ | —— |
| உம் | எச்சவும்மை, எதிர்மறை உம்மை } எண்ணிடைச் சொல் | |
| என, எனா, என்று | எண்ணிடைச் சொல் | |

**குறிப்பு** - எனா, என்று எனும் எண்ணின் இறுதியும், செவ்வெண்ணிறுதியும், ஏகார எண்ணின் இறுதியும் தொகை பெற்று வரும் என்பார் தொல்காப்பியர். பெயர்ச் செவ்வெண், ஏ, என்று, எனா ஆகிய நான்கும் தொகை பெறும் உம், என்று, என, ஒடு ஆகிய நான்கும் அத்தொகை பெறுதும் நடக்கும் என்பர் நன்னூலார். என்று, என, ஒடு ஆகியவை ஒருவழி நின்றும், பிறவழியே பிரிந்து சென்றும் ஒன்றிவரும் எனத் தொல்காப்பியம் நன்னூல் இரண்டும் கூறும். இவ்வாறு இடைச் சொற்கள் இருவகை வழக்கின் கண்ணும் பயின்று வருதலை இலக்கண நூலார் வகுத்துரைப்பர்.

**சான்று:-**

மன் (மிகுதி) 'மன்னு மாதர் பெருங்கற் பென்றிருந்தேன் வாழி காவேரி'. (சிலம்பு–கானல்வரி–7)

தில (விழைவு) '................................ சின்மொழி அரிவையைப் பெறுகதில் அம்ம யானே'.

(குறுந்–14)

| | | |
|---|---|---|
| கொன் | (அச்சம்) | 'கொன்முனை இரவூர் போல'. (குறுந்–91) |
| உம் | (எச்சம) | 'குன்றமர்ந்து உறைதலும உரியன்'. (திருமுருகு–77) |
| ஓ | (பிரிநிலை) | 'யானோ தேறேன் அவர் பொய வழங்கலரே'. (குறுந்–21) |
| ஏ | (தேற்றம) | 'யானோ கள்வன்' (சிலம்பு—வழக்குரை 75) |
| என | (பெயர்) | 'நாளென ஒன்றுபோல் காட்டி' (குறள் – 334) |
| என்று | (பெயர்) | 'பாரி பாரி யென்றுபல ஏத்தி'. (புறம. 107) |
| மற்று | (பிறிது) | '... ....... ... . .... மற்றொன்று சூழினுந் தான்முந் துறும'. (குறள் – 380) |
| எற்று | (இறப்பு) | 'எற்றென் உடமபின் எழில் நலம'. |
| மற்றை | | ஆடை கொணரின அது வேண்டாதான மற்றையது கொணு எனல. |
| மன்ற | (தேற்றம) | 'மடவை மன்ற வாழிய முருகே'. (நற்றிணை 34) |
| தஞ்சம | (எண்மை) | 'முரசு கெழு தாயத்து அரசோ தஞ்சம' (புறம. 73) |
| அந்தில் | (அசைநிலை) | 'அந்தில அரங்கத்து அகன பொழில அகவயின' (சிலமபு-காடுகாண – 6) |
| | (ஆங்கு இடப பொருள) | 'ஆங்கத் திறனலல யாங்கழற' (கலி. 86) |
| கொல | (ஐயம) | 'திங்களுஞ் செலவன் யாண்டுளன் கொலலென'. (சிலமபு-அந்திமாலை 4) |
| எல | (அசைநிலை) | 'எலவளை எமமொடு நீ வரின'. (கலி 13) |
| ஆர | | எந்தையார வந்தார. |
| குரை | (இசைநிறை) | 'அளிதோ தானே பெறலருங் குரைத்தே' (புறம. 5) |

மா 'புற்கை யுணகமா கொற்கை யோனே'

மோ (முன்னிலை அசை) 'காமஞ செபபாது கணடது மொழிமோ'

(குறுந 2)

அமம (கேடபிததல) 'அமம வாழி தோழி' (குறுந 104)

ஆஙக (உரையசை) 'ஆஙகக குயிலும மயிலும காடடி'

ஒரும (அசைநிலை) 'அஞசுவது ஒரும அறனே'

(குறள 366)

ஔ (மாறுபாடு) 'ஔ ஔ இனிச சாலும'

உம 'எநதை வநதார, யானும வநதேன'

என 'நிலனென நீரென தீயென வளியென

நானகும'

எனு 'நிலவெனு நீரெனு இரணடும.'

என்று 'நிலனென்று நீரென்று இரணடும'

இவறறைக காணுஙகால இருவகை வழககும வளமபெறறு லன்றி, இலககணததுள இததகைய நுணணியசொல வழககுகள் அறிவோடு ஒன்றிவருதலை நாம எவவாறு வரையறுததுக கூற இயலுமெனக கருதவேணடியுளளது. இடைச்சொறகள் உணர்த தும தனிதத பொருட சிறபபை (Significant semantic theme) நாம கூாநது அறிதல வேணடும யாபபு அமைதியைக காககும வணணம அமையும உரையசை இடைச சொல காலததின கோலததைக காடட வலலது.

'நீககோழி கூபபெயாக குநது' (புறம. 395)

'நாரரி நறவின மகிழதூங குநது' (புறம. 400)

என்னும வழககுகள இனறு இலலையெனினும அககாலததில இருநதமையால், 'உமஉந தாகும இடனுமா நுணமே' (தொல சொல 292) எனும நூறபா அமைநத சூழலை நாம உணர வேணடும.

தொலகாபபியா கூறுத பலவற்றை நனனூலார தஙகால வழககினை ஒடடிக கூறியுளளமையைக காணலாம. மொழியியல மரபில் இவ்விடைச சொறகள (Particles) சொறபொருள உணாத தும (Semantics) பாஙகில் அழகு விளககமாக அமைதலைக கருத

லாம ஒலியழுததம அல்லது அசையழுத்தம (Accent or Stress) எனும அமைபபுககு இவை வழிகோலும் இவறறை 'Non-root morphemes' எனலாம "The 'acai nilais' are formatives and enclitics whose meaning has been lost except for an occasional suggestion of the person-category These must have been suffixes in an earlier age. The 'icai nirais' are metre-fillers

and they are particles inside the words Their meaning has been completely lost; therefore, they are used as the longer variants of any word whenever available, for the sake of rhythm These were probably the auxiliary verbs and suffixes of an earlier age The suggestive particles are like the interjections, now replaced by varying intonations"—என்று Dr தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவாகள மொழிவா. எனவே இடைச்சொறகளானவை அசைநிலையாகவும, இசைநிறையாக வும வநது முறகாலத்தில விகுதிகளாக இருநதமையைப புலப படுத்தும யாபபியலில இனிய இசை நயம நிரமப வேணடி அமைநது, துணை வினைகளாகவும, விகுதிகளாகவும முன நாளில விளஙகியிருநத இசைநிலைகளை நாம இடைச சொற பாஙகில இன்று காணகினறோம குறிபபால வரும இடைச சொறகள பெரிதும வியபபுக கிளவிகளாகவே விளஙகுகினறன எனலாம. இககருத்து வளன் தரும் மாணபினைப பொருள கலைஞொடு பாாததல அறிவுப பணியன்றோ!



---

Dr T. P. Meenakhisundaram – A History of the Tamil Language Pages 76 - 77.

# 43. 'புணரியலும் சாரியைகளும்'. The Morpho-phonemics and the Inflexional Increments.

ஒரு மொழியின்கண் சொற்கள் தம்மோடு புணர்தலை இலக்கண ஆசிரியர்கள் செவ்வனே காட்டியுள்ளனர். தமிழில் நிலைமொழியும் வருமொழியும் தம்முள் புணர்தலை வேற்றுமைப் புணர்ச்சி என்றும், அல்வழிப் புணர்ச்சி என்றும் குறிப்பிடுவர். உயிரீறும், மெய்யீறும் வருமொழிகளோடு புணரும் இவ்வாறு இவை புணர்தலைப் புணரியல் மாற்றங்கள் (Morpho-phonemic changes) என்று குறிப்பிடுவர். மொழிபுணர் இயல்பினை நான்காகக் காட்டுவர்.

(1) மெய் பிறிதாதல்

(2) மிகுதல்

(3) குன்றல்

(4) இயல்பு

இவற்றைத் தொல்காப்பியர்,

> "மெய்பிறி தாதல் மிகுதல் குன்றலென்று
> இவ்வென மொழிப திரியு மாறே" (எழுத்து. 109)

எனக் கூறி இயல்புப் புணர்ச்சியினை இதற்கு முன் நூற்பாவில் குறிப்பிடுவர்.

(எ-டு) மண் + குடம் > மட்குடம் (மெய் பிறிதாதல்)
மலை + தலை > மலைத்தலை (மிகுதல்)
மரம் + வேர் > மரவேர் (குன்றல்)
மண் + மலை > மண்மலை (இயல்பு)

நிலைமொழியும் வருமொழியும் புணருங்கால் இடையே வேற்றுமையுருபுகள் வந்து அமைதல் புணரியலில் மாற்றமாகக் குறிப்பிடப்படுகிறது. இதனைத் தொல்காப்பியர் புணரியல், தொகைமரபு, உருபியல், உயிர் மயங்கியல், புள்ளி மயங்கியல், குற்றியலுகரப் புணரியல் என ஆறு இயல்களில் எடுத்துக் காட்டுவர். பலவகைப் பெயர்களும் உருபுகளோடு புணருங்கால் ஏற்படும் அகநிலை மாற்றங்களை நாம் இருவகைகளில் உணர்தலாம்.

(1) பெயரும உருபும் புண நஙகால சாரியை பெருமை
(2) சாரியை பெறறுப புணாநது நினறமை

நிலை மொழி பெயராகவிருககு, அப பெயா நேரிடையாக உருபேறறல ஒருவகை மரபாம.

(எ டு) அன்பன + காதலிததேன > அன்பன் + ஐ + காதலிததேன்
> அன்பனைக காதலிததேன

இசசானறில் பெயா வடிவததோடு (Noun form) உருபு (Case-sign) நேரிடையாகப புணாநது நிறறலைக காணக சில பெயா கள உருபேற்குமுன சாரியை பெறறுப புணாதல பிறிதொரு மரபாகும

(எ டு) குளம + மீன் > குளம + அதது + மீன் > குளம + அதது + இல + மீன் > குளததில மீன.

ஈணடு அஃறிணைப பெயா வடிவம அததுச சாரியை (Inflectional Increment) பெறறும, பின்னா உருபேறறும் புணருகின் றது இவவாறு இருவகைப புணாசசிகளிலும ஏறபடுகினற மாறறஙகளை நாம நன்கு ஆராயநதால சில உணமைகள் புலனாகும.

(1) நிலை மொழி பெயராகவிருநது ஒருமையாயிருபபின், அது நேரிடையாக உருபேறகும.

(எ டு) கண + ஐ > கணணை.
பெயர் + வேறறுமை உருபு
Noun + Case-sign.

(2) பெயா பன்மையாயிருபபின், அதனோடு பன்மை விகுதி புணாநது பின உருபு புணரும.

(எ டு) கண + கள + ஐ > கணகளை.
பெயா + பன்மை + வேறறுமை.
விகுதி உருபு
Noun + Plural + Case sign.
suffix

(3) எழுவாய்ப் பெயாகள (Nominative forms) நேரிடையாக உருபேற்க மாட்டா. உருபேற்கும வடிவஙகள (Oblique forms) தனியாக நின்று பின்னர் உருபேற்கும.

(எ-டு) நான் + ஐ >
நான் > என் + ஐ > என்னை.
Nominative Form > Oblique Form + Case-sign.

(4) ஒரு சில பெயர்கள் உருபேற்றதன் முன் சாரியைகள் ஏற்றலை நம் மொழியில் காணலாம். இச் சாரியைகள் "Inflectional Increments" என வழங்கப் பெறும். ஆனால், இவை வெற்றுருபன்களாக (Empty morphemes) வருதலை நாம் காணலாம் 'நிலம்' என்ற சொல்லில் 'நில+அம்' எனச் சொற்களைப் பிரித்து வினையோடு 'அம்' என்ற வெற்றுருபன் சேர்ந்து பெயராதலைக் காட்டுவர். இச்சாரியைகள் புணருகின்ற தன்மையினை நாமிண்டு விளக்கமாகக் காண்போம்

அஃறிணைப் பெயர்களில் மகரவீறு பெற்ற வடிவங்கள் உருபோடு புணர்தற்கு முன் சாரியை ஏற்கும்

(எ-டு) மரம் + ஐ > மரம் + அத்து + ஐ > மரத்தை

இதன்கண் மரம் + ஐ > மரமை எனச் சொல் புணருவதில்லை. ஆகவே, இப்புணரியல் மாற்றத்தைக் கீழ் வருமாறு எடுத்துணர்த்தலாம்.

பெயர் + சாரியை + வேற்றுமை உருபு
**Noun** + I Increment + C sign

வேற்றுமையுருபுகள் அனைத்தும் இவ்வாறு அத்துச் சாரியை பெற்றே புணர்தலைக் காண்க.

(எ-டு) நிலம் + ஐ > நிலம் + அத்து + ஐ> நிலத்தை
(Accusative)

கலம் + ஆல் > கலம் + அத்து+ஆல்> கலத்தால்
(Instrumental)

வளம் + இன் > வளம் + அத்து + இன் > வளத்தின்
(Ablative)

களம் + அது > களம் + அத்து + அது > களத்தது
(Genitive)

அகம் + இல் > அகம் + அத்து + இல் > அகத்தில்
(Locative)

ஆனால், நான்காம் வேற்றுமைக்கண் சாரியைகள் பெற்ற வடிவமும், சாரியை பெறா வடிவமும் ஒருங்கே காணப்படுகின்றன.

(எ டு) மனம் + கு > மனம + அதது + கு > மனததுககு
மனம + அதது + இன் + கு > மனததிறகு
(அலலது) மனககு (Dative)

"மனககு நோய் துடை தது"– என்பது

செயயுளில காணப்படுகின்றது. இதன் கண மகர வீறு பெறற அஃறிணை வடிவம் அததுச் சாரியை பெறுதல இன்றியமையாததாகவும (Compulsory one), இன் சாரியை பெறுதல் இன்ஞேசைககாவும (Euphonic but optional) அமைதலேக காணலாம

இன் சாரியை பெறுதல் வெறும இன்ஞேசைக்கே என்பதைக கீழவரும் சான்ருலும உணரலாம.

அன்பு + இல் > அன்பில
அனபு + இன் + இல > அனபினில

இடபபெயாகளோ, உயாதிணைப பெயாகளோ மகரவீறு பெறறிருநதாலும் அவை அததுச சாரியை பெறுவதிலலே.

அத்து, இன் எனற சாரியைகளேயலலாமல பிற சாரியைகளும் ஈம மொழியினகண் உளளன. சாரியை எனபதறகு, "வேருகி நின்ற இரு மொழியும தமமிற் சாாதற பொருட்டு இயைநது நின்றது" என்று நசசினூாககினியர் தம் உரையில குறிபபிடுகின்ருா. (தொல. எழுத்து. 118– இன் உரை). ஆகவே சார் + இயை > சாரியை எனக கோடல் பொருநதும. தொலகாபபியா,

"அவைதாம்
இன்னே வறறே அததே அமமே
ஒன்னே ஆனே அககே இககே
அன்னென கிளவி உளபபட பிறவும
அனன என்ப சாரியை மொழியே" (119)

எனற நூறபாவின கண பலவேறு சாரியைகளே எடுததுக காட்டுவா நனனூலார் இவறறுள் சிலவறறை மாற்றியும, கூட்டியும, நீககியும கொணடுளளாா. 'வறறு' எனபதனே 'அறறு' என்றும, 'அக்கு' என்பதனே 'அ' எனறும, 'இககு' என்பதனைக 'கு' என்றும நன்னூலாா மாறறியும, தொலகாப்பியா குறிபபிட்ட 'ஒன' என்பதனே நீககியும, புதிதாக 'அல' எனபதனேச் சோததும நன்னூலாா கூறுவா

"அன் ஆன் இன் அல அற்றிற் றததம்
தம நம நும ஏ அ உ ஐ குன

இனன பிறவும பொதுசசாரியையே'' (244) என்பது நன்னூல நூறபாவாம இவையெலலாம மொழியின் கண வரும மொழிச சாரியைகளாம இவையனறி எழுததுககடகு வரும சாரியைகளும இலககணததில கூறப்பெறுகினறன 'காரம', 'கரம' 'கான' ஆகியவை தொலகாபபியங காடடும எழுததுச சாரியைகளாம. நன்னூலார,

> ''மெயக ளகரமு நெடடுயிர காரமும
> ஐயௌக கானு மிருமைக குறிலிவ்
> விரணடொடு கரமுமாஞ சாரியை பெறுமபிற'' (126)

எனக காடடுவர

(5) நிலைமொழியும வருமொழியும புணருங்கால உயிர வரும வழியே உடமபடுமெய (Prevention of hiatus) தோனறும.

> ''எலலா மொழிககும உயிரவரு வழியே
> உடமபடு மெயயின உருவுகொளல வரையார''
> (எழுதது 140)

எனபர தொலகாபபியர

(எ. டு) பூ + அழகு > பூவழகு
இந்நிலை புணரியல மாறறததில சிறநதவோர அமைபபாக விளஙகுதலைக காணக

(6) அகர, இகர, உகரச சுடடுககள முன் வலி வருங்கால அவவலி மிககுப புணரும

(எ டு) அ + கண > அககண.
ஞ ந ம என்பன மொழி முதல வரின ஆண்டும் அவையே மிகும.

(எ டு) அ + ஞாண் > அஞ்ஞாண

அ + நூல > அந்நூல்
அ + மணி > அம்மணி

இவை ஓரினமாதல எனனும் மொழியியல மரபைத தழுவி நினறவை. யகர, வகர முதன் மொழி வரின் சுட்டினை யொட்டி வகர வொறறே மிகும

(எ. டு) அ + யாழ் > அவயாழ
அ + வளை > அவவளை. } (y and v - are semi - vowels)

"ஞநம யவவெனும முதலாகு மொழியும்
உயிரமுத லாகிய மொழியும உளபபட
அனறி யனைத்தும எலலா வழியும
நின்ற சொல்முன் இயலபா குமமே" (144)

(7) உமமைத் தொகையில ஆகாரவீறு அகரம பெறறுப புணரும

(எ டு) உவா + பதினன்கு > உவா + அ + பதினன்கு > உவா அப்பதினன்கு.

இரா + பகல > இரா + அ + பகல > இராஅபபகல

இபபுணாசசி வழககு செய்யுள முடிபாகத தொலகாப்பியரால் காட்டபபடுகின்றது எனவே, அளபெடை வடிவங்கள் **(Vowel clusters)** புணரியல மாறறங்களாக வருதலை நாம ஈண்டுக காணலாம

(8) பனி, வளி, மழை எனற மூன்று சொறகள அததுச சாரியை பெறறுப புணருகின்ற பாஙகினைச சிறபபு விதியாகத தொலகாபபியா காட்டுவா.

(எ. டு) பனியததுக கொணடான்.
வளியததுக கொணடான்.
மழையததுக கொணடான்.
} **Noun + Inflectional increment**

இவை அததுச சாரியை பெருமல நேரிடையாக உருபேறறுப புணாவதும இயலபு.

(எ. டு) பனியிற கொணடான்
வளியிற கொணடான
மழையிற கொணடான்
} **Noun + Case sign**

இவற்றை நோககுஙகால அததுச சாரியை முன்னே காட்டிய விதிககு **(Compulsory inflectional increment)** மாறுக அமைநதிருததலைக காணலாம மகரவீறு இன்மையினுல இநநிலைமொழி வருமொழிப புணாச்சியில இத்தகைய நிலையைப பெறறுள்ளன எனலாம. இமமாறறம சாரியை பறறிய பிறிதொரு கருததினை நமககு உணாத்தும் எனவே தான் சாரியையை **'Zero morpheme'** எனக கூறுகின்றோம்.

(9) புளளி மயஙகியலில நாம புணரியல் மாற்றங்களை நன்கு காண இயலும தொழிற பெயாகள **(Verbal nouns)** அகரச சாரியை பெறறுப் புணாதலும், மருஉ முடிபுகள் **(Haplology)**

உருவாகுதலும், ஒற்றுககள இன மொத்த நிலையில மாறறம பெறுதலும ாணடுச சிறபபாகக கூறபபெறும

(எ டு) உரிஞ + ஞான்றது > உரிஞுஞான்றது } உகரச சாரியை
பொருந் + சடிது > பொருநுககடிது. } பெறுதல

(10) ணசர, னகர ஒற்றின் முன் எழுததுககள் புணருங்கால அல்வழி, வேற்றுமை இருநிலைகளிலும இயலபுப புணாசசியே அமையும

''ணனவென் புள்ளிமுன் யாவும ஞாவும்
வினையோ ரனைய என்மனாா புலவா'' (146)

''வேற்றுமைக கணணும வல்லெழுத தலவழி
மேறகூ றியறகை ஆவயி னான'' (148)- என்னும நூற் பாககளை நோககுக

(எ டு) மண + கடிது > மணகடிது } அல்வழி
பொன் + பெரிது > பொன்பெரிது }

மண + நீடசி > மண நீடசி } வேற்றுமை
பொன் + மாடசி > பொன்மாடசி }

ணகர, னகர வொற்றுககள வேற்றுமைககண வலலினம வரின் ட, ற வாகத திரியும

''னகார இறுதி வல்லெழுத தியையின்
டகார மாகும வேற்றுமைப பொருட்கே'' (302) என்பா தொலகாபபியா

(எ டு) சிறுகண + களிறு > சிறுகட்களிறு.
பொன + தகடு > பொறறகடு.

இப்புணரியல் மாறறததில வளைநா ஒலிகளாகிய (**Cacuminals**) ண, ட இரணடும இயைநது நின்று புணாசசியைச சிறபபிககின்றன அதுபோலவே னகர, றகரங்கள் சிறபபித தலையும காண்க வருமொழியில் நகரம வரின் புணாசசியில கெடுதல ாணடுக குறிபபிடததககது

(எ டு) பசுமண + நன்று > பசுமணன்று
செமபொன் + நன்று > செமபொனன்று.

(11) லகர, ளகரங்கள வலலினம் வரின் வேற்றுமைககண் றகர, டகரமாக உறழும் மெல்லினம் வரின் னகர, ணகரமாக மாறும் இடையினம் வரின் இயல்பாம்

(எ. டு) கல + குறை > கற்குறை } l > ṟ [k
முள + குறை > முட்குறை } l > ṭ [k

கல + மாட்சி > கன்மாட்சி } l > n̲ [m
முள + மாட்சி > முண்மாட்சி } l > ṇ [m

கல + யாப்பு > கல யாப்பு }
முள + யாப்பு > முள யாப்பு } No Change

இப்புணரியல் நிலையில் ல, ற, ன என்பனவும், ள, ட, ண என்பனவும் ஒலி முறைச்கு (Phonetic method) ஏற்றவாறு புணர்ந்து நிற்றலை உணரலாம்.

தொல்காப்பியர்,

"ளகார விறுதி ணகார இயற்றே" (எழுத்து. 396)–என்றும்,

"லகார விறுதி னகார இயற்றே" ( ,, 366)–என்றும், கூறுகின்றார். நன்னூலார் இந்நூற்பாக்களை,

"லளவேற் றுமையிற் றடவு மல்வழி
அவற்றோ டுறழவும் வலிவரி னாமெலி
மேவி னணவு மிடைவரி னியல்பும
ஆகு மிருவழி யானு மென்ப" (227) எனக் கூறி யுள்ளமை காண்க

(12) னகர, லகரங்கள் த, ந இவை வரின முறையே ற, ன வாக மாறும் ண, ள என்பன த, ந ஆகியவை வரின் ட, ண வாக மாறும். இவற்றை வருமொழித் தகர, நகரத் திரிபுகளாக இலக்கண ஆசிரியர் காட்டுவர்

(எ-டு) பொன் + தீது > பொன்றீது }
கல + தீது > கற்றீது }

பொன் + நன்று > பொன்னன்று }
கல + நன்று > கன்னன்று }

மண + தீது > மண்டீது }
முள + தீது > முட்டீது }

மண + நன்று > மண்ணன்று. }
முள + நன்று > முண்ணன்று. }

இவற்றை நோக்குங்கால் நிலைமொழி, வருமொழிப் புணர்ச்சியில் நிலைமொழியீற்று மெய்கள் வருமொழி மெய்களை இனவெழுத

தாக மாற்றுதலும், பிறப்புமுறை ஒற்றுமையால மாற்றுதலும, ஓரினமாக்கலும புலனுகும்

$$\left.\begin{array}{l} t > \underline{r} \\ n > \underline{n} \end{array}\right\} \text{followed by '}\underline{n}\text{'.}$$

$$t > t$$

followed by 'n'

$$\left.\begin{array}{l} l > \underline{r} \\ l > t \end{array}\right\} \text{before 't'}$$

$$\left.\begin{array}{l} l > \underline{n} \\ l > n \end{array}\right\} \text{before 'n'}$$

என்னும புணரியல மாற்றங்களை நோக்குக
நன்னூலார்,

> "னலமுன் றனவும ணளமுன டணவும
> ஆகும தநக்க ளாயுங காலே" (237)-எனக் கூறுவர.

புணரியல் மாற்றத்தில் இத்தகைய திரிபுகள் மெய்யொலிகளின் பிறப்பிடத்து ஒற்றுமையையும (Place of articulation), ஓரின மாக்கலையும (Assimilation) உணர்த்தும

(13) ஆயதவொலி லகர, ளகர இவற்றின் மாற்றெலியாக (Allophone) வருதலை இலக்கணத்தார வரையறுப்பர்.

> "ஆயதம் நிலையலும் வரைநிலை யின்றே
> தகரம வருஉங காலை யான" (எழுத்து 399)-என்பது

தொலகாப்பிய விதி

$$\left.\begin{array}{l} \text{(எ-டு) கல + தீது > கற்றீது or கஃறீது} \\ \text{முள + தீது > முட்டீது or முஃறீது.} \end{array}\right\} \begin{array}{l} l > \underline{r} \sim \underline{K} \\ l > t \sim \underline{K} \end{array}$$

இம்மாற்றத்தால லகர, ளகரப புணர்ச்சி ஆய்தவொலியின மாற்று வடிவத்தில் (alternative form) வந்து பொருளமைதியைச சிறப்பிப்பதாகக காணலாம.

(14) ஆடூஉ, மகடூஉ என்னும இயற்கை அளபெடை அமைந்த பெயர்கள் வருமொழியோடு புணருங்கால வேற்றுமைப் புணர்ச்சி யாயின் 'இன்' சாரியை பெறுதல இயலபு எனபது விதியாகக காட்டப பெறுகின்றது.

"ஆறூஉ மகடூஉ ஆயிரு பெயர்க்கும்
இன்இடை வரினும் மான மில்லை" (தொல் எழுத்து. 271)

(எ-டு) ஆடூஉ + கை > ஆடூஉ + இன் + கை > ஆடூஉ வின் கை }
மகடூஉ + கை > மகடூஉ + இன் + கை > மகடூஉ வின் கை }

இவற்றில் அளபெடை வடிவங்கள் புணரியல் மாற்றத்தில் சாரியை பெறுதலைக் காண்கின்றோம்.

(15) தொல்காப்பியர், அங்கை என வரும் மரூஉ முடிபினையும் குறிப்பிட்டுள்ளமையை நோக்குக.

"அகமென் கிளவிக்குக் கை முன் வரினே
முதனிலை யொழிய முன்னவை கெடுதலும்
வரைநிலை யின்றே ஆசிரி யாக்கு
மெல்லெழுத்து மிகுத லாவயி னான" (315)

(எ-டு) அகம் + கை > அ + கை > அ + ங + கை > அங்கை
இதை நன்னூலார்,

"அகமுனர்ச் செவிகை வரினிடை யன கெடும்" (222)—

என்பர் இதைப் போலவே ஆதன் + தந்தை > ஆந்தை, பூதன் + தந்தை > பூந்தை எனவும் சொற்கள் மருவி வருதலை மரூஉ முடிபாகக் காட்டுவர்.

(16) தமிழின் சிறப்பொலியாகத் திகழ்வது குற்றியலுகரமாம் (Shortened 'u' – a dependent but significant sound in Tamil). இக்குற்றியலுகர ஈறு வருமொழியோடு புணருமாற்றலைத் தொல்காப்பியர் 'குற்றியலுகரப் புணரியல்' என்று தனியே எடுத்துக் கூறி விளக்குதலை அறிக. இவ்வீறு பொருட் பெயரோடும், எண்ணுப் பெயரோடும் புணர்தலை நாம் காணலாம்.

(i) குற்றியலுகரம் வருமொழியில் யகரம் வர இகரமாக மாறி ஒலிக்கும் என்பது விதி.

(எ-டு) எஃகு + யாது > எஃகியாது.
இதன்கண் சார்பொலிகள் இரண்டின் பெற்றியை உணரலாம்.

**Shortened 'u' > 'i' (before 'y')** இவ்வுயிரொலி மாற்றம் **(Sound Change)** புணரியலின் ஒரு கூறாகும்.

(ii) வேற்றுமைப் புணர்ச்சியில் குற்றுகர ஈறு வல்லெழுத்து முதன் மொழி வரின் ஈற்று ஒற்று இரட்டித்துப் புணர்தலை அடுத்துக் காட்டுவர்.

"ஈரெழுத்து மொழியும் உயிர்த்தொடர் மொழியும்
வேற்றுமை யாயின் ஒற்றிடை இனமிகத்
தோற்றம் வேண்டும் வல்லெழுத்து மிகுதி" (எழுத்து 411)

என்பர் தொல்காப்பியர்

(எ-டு) நாடு + பற்று > நாட்டுப்பற்று
வயிறு + பசி > வயிற்றுப் பசி.

இவற்றில் நிலைமொழியின் ஈற்று ஒற்று சூழலுக்கேற்ப இரட்டித்து (Duplication of final consonants) நின்று பெயரடை வடிவங்களாக (Adjectival forms) அமைதலைக் காண்க. இப்புணர் மொழியில் 'இன்' சாரியை வர, நாட்டின் பற்று, வயிற்றின் பசி என அமைதலும் உள.

(iii) எண்ணுப் பெயர்கள் (Numerals) பொருட் பெயரோடு புணருமிடத்து உருபு புணர்ச்சியின் இயல்பிலே நின்று 'அன்' சாரியை (I I) பெறுதலைக் காட்டுவர்.

'எண்ணுப் பெயர்க் கிளவி உருபியல் நிலையும்'
(தொல் எழுத்து 419)

(எ. டு) ஒன்று + நிலை >
ஒன்று + அன் > நிலை > ஒன்றன் நிலை

(iv) வருமொழி உயிராயின் சுட்டுப் பெயர்கள் ஆய்த ஒலி பெற்றே வரும். இன்றேல் இயல்பாக நிற்கும்

(எ. டு) அது + இல்லம் > அஃது இல்லம்
அது + வீடு > அது வீடு.

இதனைக் கண் ஆய்தவொலி அமையும் இடத்தை (Place of occurrence of āytam) அமைப்பர். இதைப் போன்றே ஓர், ஒரு எனும் எண்ணுப் பெயரடைகள் (Numerical adjectives) வருதலையும் காணலாம்

(எ. டு) ஒன்று + உயிர் > ஓர் உயிர்.
ஒன்று + முகம் > ஒரு முகம்.

('ōr' occurs before the vowels.
'oru' occurs elsewhere).

(v) எண்ணுப் பெயர்களின் புணர்ச்சி மாற்றம் நம் மொழியியல் அறிவுக்குப் பெருந்துணை புரியும் 'பத்து' என்பதன் முன் ஒன்று, இரண்டு முதலான எண்ணுப் பெயர்கள் புணருங்கால நிலைமொழி மாற்றங்கள் நிகழும்

(எ டு) பத்து + ஒன்று > பத + ஒன்று > பத + இன் + ஒன்று > பதின்ஒன்று

ஈற்றுக் குற்றுகரங் கெட 'இன்' சாரியை வந்து புணர்தலே விதியாம் (**Loss of final shortened 'u' and insertion of inflectional increment**)

"ஒன்றுமுத லாக எட்ட னிறுதி
எல்லா வெண்ணும் பத்தன் முன்வரின்
குற்றிய லுகரம் மெய்யொடுங் கெடுமே
முற்றஇன் வருஉம் இரண்டலங் கடையே" (எழுத்து. 433)
என்பர் தொல்காப்பியர்

இவ்வாறு மொழியாக்கத்தில் நிலைமொழிகள், வருமொழிகள் ஆகியவை புணருகின்ற பாங்கில் நாம் பலவகைக் கருத்துக்களைக் கண்டோம் சொற்கள் புணரும் என்றாலும் ஒலிகள் புணர்தல்தான் சிறப்பாகச் சொல்லப்படும். ஆதலின் தமிழில் புணரியல் மாற்றங்கள் எனப்படுவன நிலைமொழி ஈற்றொலியும், வருமொழி முதல் ஒலியும் புணர்தலைக் காட்டுதலின் ஒலிகளால் வரையறுக்கப்படுதல் எனக் கொள்வது தகவுடைத்து (**Based on phonetic laws and tendencies**). அவ்வொலிகள் சொற்பாங்கில் நின்று பொருள் தொடர்பால் விதிகள் அமையப் புணர்தலையே நாம் கருத்தில் கொள்ள வேண்டும் பொருள் தொடர்பால் அவை புணரும் பொழுது தமிழ்ச் சொற்களின் சொற்பொருளமைதி (**Semantic concept**) அழகு பெறுதலை நனியுணரலாம். வெற்றொலிகள் புணர்வது நம் மொழியின் புணரியல் மாற்றமாகக் கருதப்படுவதில்லை. மொழி வளத்தின் நீர்மையைப் பாங்குறக் காட்டும் பேரமைப்பே இலக்கணச் செறிவு என்ல பொருந்தும் மொழியியல் கருத்துக்கள் இலக்கணக் கருத்துக்களின் பின்னணியில் மாண்புறுதல் அறிவு வளர்ச்சியின் ஆக்க நீர்மையென்றல் மிகையன்றே!



# 44. 'வினைச் சொற்கள்'
# The Verbs.

உலகில் வழங்கப்பெறும் எம்மொழிகளிலும் வினைச் சொற்கள்தாம் உயர்ந்த இடத்தைப் பெறுகின்றன. அன்றியும், மொழி அமைப்பில் இன்றியமையா உறுப்பாகவும் இது விளங்குகிறது. ஒரு சொற்றொடரை அமைக்கும் ஆற்றல் இவ்வினைச் சொல்லுக்கே உண்டு. ஒரு சொற்றொடரின் உறுப்புகளாகிய எழுவாய் (Subject), செயப்படுபொருள்கள் (Object) இவ் வினைச் சொற்களின் விளக்கங்களாகவே வருகின்றன. "The verb is the grammarian's idol It is to him the light and life of the sentence It ushers in the predicate, which is the only interesting and informative part of the sentence Indeed it is the predicate All the rest is mere appendage"[1] என்று P B Ballard கூறுவார் இலக்கண நூலார் காட்டும் நட, வா, செய் என்பன தனியே நின்றும் சொற்றொடர்களாக விளங்கும் இவ்வினைச் சொல்லின் சிறப்பினை நன்னூலார்,

"செய்பவன் கருவி நிலம் செயல் காலம்
செய்பொருள் ஆறும் தருவது வினையே" (320) எனக் கூறுவர். தொல்காப்பியர் சொல்லதிகாரத்துள் இதன் பொதுவியல்பினைக் கூறுங்கால்,

"வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங் காலைக் காலமொடு தோன்றும்" (198) என்பர்

பெயர்ச்சொற்கள் உருபேற்று நின்று பொருட்சிறப்பினைத் தரும் (Nouns – declensions) ஆனால், வினைச்சொற்கள் கால இடைநிலைகள் ஏற்றும், பால் காட்டும் விகுதி புணர்ந்தும் நிறைவான அமைப்பை உருவாக்குகின்றன (Verbs – Conjugations) இவ்வாறு உருபேற்கும் வடிவம் பெயராகவும், கால முணர்த்தும் வடிவம் வினையாகவும் விளங்குதலைக் காணக் (Every Dravidian root is capable of this two fold use)

## வினைச் சொல் அமைப்பும், சிறப்புக் கூறுகளும்.
## The Formation of Verbs and their Special Features.

(1) திராவிட மொழிகளில் பெரும்பாலான அடிச் சொற்கள் பெயர்களாகவும், வினைகளாகவும் விளங்குகின்றன (The Dravidian roots are used as verbs or as nouns)

[1] P. B Ballard – Thought and Language P. 86

(எ டு) சொல், அடி.

இவை வேறறுமையுருபை ஏறபதால பெயாகளாகவும், கால இடைநிலை ஏறபதால் விணைகளாகவும பகுததறிய அமைந துளளன

(எ டு) சொல + ஐ > சொலலை Verbal root + Case sign (Declensional forms)

சொல + கிறு + ஆன் > சொலகிறுன்
V R + T. S + P S [2]

(2) அடிச சொலலோடு கு, து, உ என்னும உறுபபுககள சோவதால விணைச சொறகள அமைகின்றன (Formative or euphonic particles annexed to the roots)

பெரு + கு > பெருகு V Root + Formative suffix > Verbal theme

இவவாறு அமைநத விணைசசொறகள பகுதியாய நிற்க, அவற ேறாடு கால இடைநிலை, பால காட்டும விகுதி இவை சோகின்றன
Verbal Root + Formative Suffix > Verbal Theme + Tense Sign + Pronominal Suffix >
[V. R + F. S > V. T + T. S + P. S > F. V] Finite Verb

இவ்விரண்டாவது வகையில விணையடிச் சொல்லோடு நேரிடை யாகக கால இடைநிலையோ, பால காடடும விகுதியோ புணராமல ஆககநிலை விகுதி சோநத விணைப் பகுதியோடு கால இடைநிலை யும, பால காடடும விகுதியும சோகின்றன.

(எ டு) பெருக + கிறு + அது > பெருககிறது

(3) திராவிட விணைச சொறகள ஒடடு மொழி வகையைச சாாநதவை (The structure of the Dravidian verbs is strictly agglutinative). காலம, இடம முதலியவறறை உணாததும உறுபபுககள அடிச சொலலோடு மிக ஒழுஙகான முறையில சிறிதளவு திரிபு பெறறுப் புணாகினறன

(எ டு) காண + ட் + ஆன > கணடான (V.R+T S+P. S>F.V)

---

[2] 'விணை' பறறிய கடடுரைகளில கீழககாணும குறியீடுகளை ஆஙகாஙகு அமைததுக கொளக.

V R – Verbal Root – விணையடிச சொல.
T. S – Tense Sign – கால இடைநிலை.
P S – Pronominal Suffix பால காடடும விகுதி.
F S – Formative Suffix – ஆகக நிலை விகுதி.

(4) முன்னிலை ஒருமை ஏவல் வினையோடு (Second Person Singular Imperative Verb) காலம், இடம் உணர்த்தும் உறுப்புக்கள் சேர்வதில்லை. அடிச் சொல்லே பெரும்பாலும் ஏவல் ஒருமையாக விளங்குகிறது. இலக்கண நூலார் இவ் ஏவல் ஒருமை வடிவமே வினைப் பகுதி வடிவம் (Base of the verbal theme) என்பர். "The crude theme of the verb, or the shortest form which the root assumes, and which is capable of being used also as the theme of a noun, is used in the Dravidian languages as the second person singular of the imperative"–[3] என்று Dr. Caldwell தெளிவுறக் காட்டுவர்.

(எ-டு) அணி; எழு; செல்.

(5) பெயர்ச் சொற்கள் வேற்றுமையுருபு ஏற்கும் முறை ஒன்றாய் இருத்தல் போல வினைச் சொற்கள் திணை பால் முதலியன உணர்த்தும் முறை ஒன்றாகவே காணப்படுகின்றது.

(எ-டு) மகள்+ஐ>மகளை – Noun + Case sign
விரும்பு+கிறு+ஏன்>விரும்புகிறேன் — V. Root+ T S +P S. (Whether it is a case sign or tense sign, it is suffixed to the noun or verbal root). ஆனால், ஐரோப்பிய மொழிகளில் பலவகையான முறைகள் காணப்படுகின்றன.

(6) திராவிட வினைச் சொற்களின் அமைப்பில் காணப் பெறும் எளிமை போற்றத் தக்கதாய் உள்ளது. முற்று (Finite Verb), எச்சம் (Participle) என்ற இருவகைப் பகுப்பும், இறப்பு (Past) நிகழ்வு (Present), எதிர்வு (Future) என்ற மூவகைக் காலமும், ஏவல் (Imperative), வியங்கோள் (Optative) என்ற இரண்டும் ஓர் ஒழுங்கு நீர்மையில் அமைந்து காணப்படுதல் இத் திராவிட மொழிகளின் தனிச் சிறப்பேயாகும். மலையாள மொழியைத் தவிர, ஏனைய மொழிகளில் வினைமுற்றுக்கள் காலத்தோடு திணை, பால், எண், இடம் முதலியவற்றை உணர்த்துகின்றன.

(எ-டு) தமிழ் உணர்ந்தேன் – தன்மை ஒருமை இறந்தகால வினைமுற்று. ஆனால், பழைய மலையாளச் செய்யுட்களில் திணை, பால் உணர்த்தும் முறைகளை நாம் காண முடியும்.

(7) ஐரோப்பிய மொழிகளில் வழங்குவது போலத் திராவிட மொழிகளிலும் பெயர்ச் சொல்லோடு வினைச்சொல்லைச் சேர்த்து ஒரு சொல்லாக உணர்த்துவதும் உண்டு. "The

---

[3] Dr. Caldwell – A Comparative Grammar of the Dravidian Languages. P. 446.

Dravidian verb is frequently compounded with a noun as the Indo-European one ; but the compound of a verb with a preposition is unknown" [4] என்பார் Dr. Caldwell.

'மேற்கோள்', 'கீழ்ப்படி' எனத் தமிழில் வழங்குவனவற்றுள் மேல், கீழ் என்பன பெயர்களாகக் கொள்ளப்படும் (Similar to the forms like 'undergo' and ''undertake'. Combination of prepositions and verbs are very rare and unknown 'merkol' and 'kilppati' are really nouns and not prepositions proper)

(8) திராவிட மொழிகளில் முன்னடைகளால் வினைச் சொற்களில் பொருளைச் சிறப்பிக்கும் அமைப்பே இல்லை. துணை வினைகளும், எச்சமாக அடுக்கும் வினைகளும் அமைந்து அச் சிறப்பை உணர்த்தும் (The Dravidian verbs acquire new shades of meaning not by prefixing or combining prepositions, but by means of auxiliary gerunds or verbal participles and infinitives) இவ்வாறு திராவிட மொழிகளில் வினைச்சொல் லமைப்பு ஒரே சீராக அமைந்துள்ள பெற்றியைக் காண்க.

## திணை பால் காலம் உணர்த்தும் முறைகள்.
## Verbs denoting Gender, Number and Tenses.

நாம் மேலே கண்ட வினைமுற்றின் அமைப்பில், திராவிட வினைமுற்றுக்கள் திணை, பால், காலம், இடம் ஆகிய இவற்றை உணர்த்த வல்லவை எனக் கண்டோம். அம்மொழியியல் மரபினை ஈண்டு விளக்குவோம்.

1. பால் காட்டும் விகுதிகள் (Pronominal suffixes) வினை முற்றுக்களின் ஈற்றில் சேர்க்கப்படுகின்றன. (V. R+T S.+ P. S). பழைய மலையாளச் செய்யுளில் பால் காட்டும் விகுதிகள் இருந்தபோதிலும் இன்றைய மலையாளத்தில் அவ்விகுதிகள் இல்லை. ஆனால், மலையாளத்தில் காலங் காட்டும் இடைநிலைகள் (Tense Signs) மட்டும் சேர்க்கப்படுகின்றன.

(V P+T. S+ு)

(எ-டு) 'ஞான் அடிச்சு' (Malayalam)

---

[4] Ibid P 448.

(2) ஐரோப்பிய மொழிகளில் பால்காட்டும் விகுதிகள் நேரே வினைப்பகுதியோடு சேர்கின்றன (Verbal theme + Pronominal suffix) ஆனால், திராவிடமொழிகளில் அவை கால இடைநிலைக்குப்பின் சேர்க்கப்படுகின்றன இந்தோ-ஐரோப்பிய மொழிகளில் விகுதியே பாலையும், காலத்தையும் ஒருங்குணர்த்தும் (Suffix denotes both gender and tense). எடுத்துக் காட்டாக, வடமொழி இலக்கணமும், அதையொட்டித் தமிழுக்கு இலக்கணம் வகுத்த வீரசோழியமும் சான்றாக அமையும்.

'செய்தான்' என்பதைத் தமிழில் 'செய் + த் + ஆன்' எனப் (V.R + T S + P.S.)

பிரித்தல்தான் முறை ஆனால், வீரசோழியம் 'செய் + தான்' எனப் பிரிக்கும் (Indo-European Method).

தமிழிலும் கன்னடத்திலும் சில பழைய வினைமுற்றுக்களின் உருவங்கள் காணப்படுகின்றன அவற்றில் பால் காட்டும் விகுதிகள் இல்லை.

'செய்து', 'செய்தும்', 'செய்கு', 'செய்கும்' என்பன தன்மையில் அன்றி ஏனைய இடங்களிலும் வழங்கும். திராவிட மொழிகளில் வினைமுற்றுக்களிலும், மிகப் பழங்காலத்தில் பால் காட்டும் விகுதிகள் இல்லை என்று எண்ண இஃது இடந்தருகின்றது (Non-existence of pronominal in the Dravidian languages).

(4) திராவிட வினைமுற்றுக்களுள் படர்க்கை வினைமுற்றுக்களே திணை பால் உணர்த்துவன தன்மை, முன்னிலை வினைமுற்றுக்கள் ஒருமை, பன்மை மட்டுமே உணர்த்துவன. வினைமுற்றுக்களேயன்றி எச்சங்களும் (Participles) காலங்களை உணர்த்துகின்றன. வினையெச்சங்கள் (Verbal participles) பலவகைப் பாகுபாடும் வேறுபா[illegible] உடையனவாய் அமையச் சில பெயரெச்சங்கள் (Relative participles) வினையெச்சங்களின் அடியாகப் பிறந்து விளங்குகின்றன இக்காரணத்தால் வினைச் சொற்கள் காலங்காட்டும் முறையை நன்கு உணர்த்துவதற்கு வினையெச்ச வகைகளைப் பற்றிய அறிவு நமக்கு இன்றியமையாததாய் வேண்டப்படுதலைக் காண்க

---

# 45. 'முக்காலங்கள்'.
# The Three Tenses.

## (a) நிகழ்காலம் (The Present Tense).

ஒப்பியன் மொழியறிஞர் Dr Caldwell அவர்கள் திராவிட மொழிகளின் நிகழ்வு, இறப்பு, எதிர்வு ஆகிய மூன்று காலங்களையும் காட்ட அவ்வக்கால வினையெச்சங்களோடு பால் காட்டும் விகுதியை இணைத்தால் போதும் எனக் கூறுகின்றார் (Verbal Participles + Pronominal suffixes > Finite Verbs) முக்காலங்களுள் முதற்கண் நிகழ்வு எனவொன்று அமைகின்ற வகையைக் காணலாம்

தெலுங்கு, கன்னட மொழிகளில் வினையெச்சங்களோடு விகுதிகள் சேர்வதால் முக்காலங்கள் உணர்த்தப் பெறுகின்றன. தொன்மையான தமிழிலக்கியங்களில் நிகழ்காலங் காட்டும் தனியமைப்பு இருந்ததில்லை. பழமைத் தமிழில் நிகழ்ச்சி முடிந்த ஒன்று, நிகழ்ச்சி முடியாத ஒன்று (Past and Non-Past) என்ற இருவகைப் பகுப்புக்களே காணப்படுகின்றன. Dr Caldwell அவர்கள் தம் நூலுள், "The Present tense is seldom used in Tamil Poetry and I have never found it in inscriptions though the past and future and combinations of both abound" [1] எனக் கூறுகின்றார். இக்காரணத்தால் தமிழிலக்கியத்துள் நிகழ்காலம் என்பது ஒன்று மிக அருமைப்பாடுடையதாகக் காணப்படுகிறது.

தமிழ், மலையாளம் என்ற இருமொழிகளிலும் நிகழ்கால வினையெச்சம் (Present Verbal Participle) எனவொன்று காணப்படுவதில்லை. அடிச்சொல்லோடு 'கிறு' என்ற கால இடைநிலையையும் (Present Tense-infix or sign), 'ஆன்' என்ற பால் காட்டும் வினை விகுதியையும் (Pronominal Termination) சேர்ப்பர். "Tamil and Malayalam have properly speaking, no present verbal participle, but only a particle denoting present time, which is suffixed to the theme of the verb, and to which, in Tamil, the pronominal signs are then suffixed for the purpose of forming the present tense." [2] என்று Dr Caldwell குறிப்பிடுவர்

---

[1] Dr. Caldwell — A Comparative Grammar of the Dravidian Languages P 494.

[2] Ibid — P 489.

செய்+கிறு+ஆன் >செய்கிருன்.

**V. R +P. T. Infix+P S >Present Tense Finite Verb.**

தொலகாப்பியா காலததில கிறு, கின்று என்னும நிகழ்கால இடைநிலைகள இருநதனவாகக கொளளபபடுவதறகிலலை. அவா இடைநிலைகளைப பற்றிய விளககஙகளைப பெரிதாகக கருத வில்லை தம நூற்பாவுள்,

"காலம தாமே மூன்றென மொழிப"—(199) என்றும,

"இறப்பின நிகழவின் எதிரவின் என்ரு
அம்முக காலமுங குறிப்பொடுங கொள்ளும்
மெய்ந்நிலை யுடைய தோன்ற லாறே"—(200) என்றும

குறிபபிட்டுள்ளார் தனிபபட்ட நிலைகளால் காலததை உணாததுகினற நிலையை அவா போற்றவில்லை. என்ருலும், ஏதோ ஒரு நிலையில காலஙகளை உருவாககும் வகையை மட்டும சிறபபாக அமைககின்ருா எனறு நாம கருத வேண்டியுளளது அவர் சொலலதிகார நூறபாவுள,

"முந்நிலைக காலமும தோன்றும இயறகை
எமமுறைச சொலலும நிகழுங காலதது
மெய்ந்நிலைப பொதுசசொற கிளததல வேண்டும" (240)

என்று குறிபபிடுகின்ருா இவவாறு வழககமாக நிகழும் வினையை நிகழ்கால வாய்பாட்டால உணாத்தும மரபுககு உடன்பட்டு நூறபா வகுகக, உரையாசிரியா சேனுவரையா, "மலை நிற்கும்; ஞாயிறு இயங்கும; திஙகள இயஙகும" — எனச சான்றுகள் காட்டுகின்ருா

(எ. டு) 'வெஙகதிரக கனலியொடு மதிவலந திரிதருந்
தணகடல் வையத்து" –(பெரும்பாண 17)

இதனுல தொலகாபபியா காலததில 'செயயும' (ceyyum) என்பது நிகழகால அமைப்பாகக (**Present Tense Formation**) கருதப பெற்றது எனக காணலாம இவ்வாறு தொலகாபபியா மிகச சிறபபாக எடுததுககாட்டவும (**ceyyum - the formula for the present tense**), சிவஞான சுவாமிகள நனனூலுககு உரை காணுங்கால், 'செய்யும' என்பதை எசசவினை (**Verb Defect or Verbal Participle**) என்று கொணடும, அதுவே பின்னா வினை முறருக அமைநதது எனறும கருதுவா.

நம் தமிழில் காணப்பெறும் 'கிறு', 'கின்று' என்பன கி. பி. 10-ஆம் நூற்றாண்டில் வீரசோழியவுரையாசிரியரால் முதன் முதலாகக் காட்டப் பெறுகின்றன. 'கின்று' என்பது முதன் முதலாகப் பரிபாடலில், "தீரமும் வையையும் சேர்கின்ற கண்கவின்" (பாடல் 22) — எனக் காணப்படுகின்றது. இனி, புறநானூற்றில், "பெண்ணுரு ஒருதிறன் ஆகின்று" என்று கடவுள் வாழ்த்துப் பகுதியில் காணப்படுகின்றது. இதிலிருந்து

√ā ... 'ஆ' — To become
ku .. 'கு' — Formative suffix
in ... 'இன்' — Element for euphony
tu . து(று) — Neuter suffix

என்பன பெறப்படும். 'ஆகின்று'— It has become. "One of the forms of the present in Tamil makes use of a particle of the verb /āku/ 'to become' and that most of the Dravidian presents were formed from futures"[3] என்பார் Dr. Caldwell

பின்னர் 'ஆகின்று' என்பது ஒரு தனிவடிவமாக நின்று பால்காட்டும் விகுதிகளோடு ஈற்றில் சேர்ந்து 'ஆகின்றான்', 'ஆகின்றாள்', 'ஆகின்றார்' என உயர்திணையிலும், 'ஆகின்றது', 'ஆகின்றன' என அஃறிணையிலும் அமையத் தொடங்கிற்று. Dr. Graul என்பாரும், Dr. Gundert என்பாரும் 'கின்று' என்பதை – 'க+இன்று' – எனக் காட்டுவர். அவர்கள் கருத்துப்படி 'க' என்பது எதிர்காலத்தைக் காட்டும் ஒருவகை இடைநிலையாக (indicative of the future tense) அமையும். "Dr. Graul was the first to suggest the origination of this sign from "k=g", a sign of the future in poetical Tamil, and 'inru' – 'now'. The present was formed from the future by the addition of a sign of present time ... The same view seems to have been adopted or independently arrived at, by Dr Gundert"[4] என்று Dr Caldwell கூறியுள்ளமை காண்க. இக்கூற்றுக்குச் சான்றினை நாம் திருவாசகத்துள் காணலாம். "யாரொடு உரைப்பேன்", "யாரொடு நோவேன்" என்பனவற்றிற்கு மாறாக மணிவாசகர், "யாரொடு உரைக்கேம்", "யாரொடு நோகேம்"—

---

[3] Ibid P 491
[4] Ibid P 494.

எனப பாடுகின்ருர் பின்னா 'இன்று' என்பது நிகழகால இடையைக் காட்டுவதால 'க+இன்று>கின்று' எனக் கொண்டு 'எதிர்காலம் அணைந்த நிகழகாலம்' (Present tense with future element) எனக் காட்டுவா

மேனுட்டு மொழி வல்லவாகளும காலவுணாவுகளைப பிரித்துக் கூறுங்கால, நிகழ காலத்திற்கும, எதிர காலத்திற்கும இடையே மிகுதியான வேறுபாடுகளைக் காட்ட முற்படவில்லை Dr Jespersen என்பார், "The present is always an ever fleeting boundary between the past and the future"– எனக் கூறுகின்ருர். குறுந்தொகையில காணபபெறும "நகையாகின்றே தோழி" (347) என்ற சொல்லாட்சியில காணபபடும 'ஆகின்று', 'போகின்று' என்பன இறந்தகால வினை முற்றுககளாக இருந்து பின்னா நிகழகாலத்தையும் உணாத்தத தொடங்கி, நாளடைவில 'கின்று' என்பது நிகழகால இடைநிலையாக (Present tense suffix) மாறியது எனக் கொளவா பேராசிரியா Dr. தெ பொ மீனுட்சி சுந்தரனா அவாகள கலைக் களஞ்சியத்தில குறிப்பிடுங்கால, "பரிபாடலிலும, கலித்தொகையிலும பையத் தலை காட்டி, உலக வழக்கினைப பெரிதும பினபற்றும திருக்குறளிலும, சிலமபிலும மிகமிக உள நுழைந்து, பின் பலலவா காலத்தில் இவை நிலைபேறு எயதி விட்டன" – எனக் கூறுவா அடுத்து, தேவாரம, திருவாய்மொழிகளில 'கின்று' என்பது மிகப் பலவாகக் காணபபடுகின்றது அதுவே பின்னா 'கிறு' என மாறிவிட்டது 'ஆகி', 'நின்று' என்ற இருசொற்கள பிற காலத்தில ஒன்ருக நின்று மருவி 'ஆநின்று' எனக் காணப படுகின்றன நன்னூலாரும் தம இலக்கணத்துள்,

> "ஆநின்று கின்று கிறு மூவிடத்தின்
> ஐமபான நிகழபொழுது அறைவினை இடைநிலை"—(143)

எனக் கூறுகின்ருா.

'கின்று' என்ற வழக்கு 'கின்னு' என்றும, 'இன்னு' என்றும், 'உன்னு' என்றும மாறி மலையாளத்தில காணபபடு கின்றது (Change of consonant in the final due to assimilation and loss of initial consonant). 'வாராயின்னு' (comes not) என்ற சொல வழக்கு மலையாளத்தில எதிரமறையை உணாத்தும. 'அடிக்கின்ருன்' என்ற தமிழ வழக்கு மலையாளத்தில் 'அடிக்குன்னு' எனக் காணபபடுகின்றது. நம தமிழிலும 'கின்று' என்பது முழுமையாக ஒலிககபபடுவது இலலை 'வேகுகின்றது' என்பது 'வேகுது' என நிற்றல் காண்க அடுத்து, தெலுங்கு

மொழியில 'chu' (or) 'tu' என்பதே நிகழ்கால இடைநிலையாக அமைகிறது. 'cheychunnanu' என்பது 'நான் செயகிறேன' என்ற பொருளைத தரவலலது. 'து' என்பது பேச்சுத தெலுஙகில காணககூடிய ஒன்றும். கனனடததில 'ut' (உத்) என்பது நிகழகால இடைநிலையாகக காணப்பெறும. 'madutta' என்பது கன்னடததில 'செய்தல' என்ற பொருளைத தரும் 'maduttene'– 'நான் செயகிறேன்'. பழஙகன்னடததில் 'உது' (utu) என்பது நிகழகால இடைநிலையாகக காணபபெறும. 'tap' என்ற சொல லாட்சியால இறநத காலததையும எதிர்காலததையும இணைத்து நிகழகாலத்தை உருவாககும நிலையும் கனனடததில் காணப பெறும.

இவ்வாறு நிகழகாலம என்ற ஒன்று பிற காலஙகளைப போல் மிகத தெளிவான முறையில தன்னிலையால சிறப்புறுமல அமைநதிருபபது மொழி நூலாருககுப புதிராகத தோன்றும தொல்காபபியததுளளும், அதனை ஒட்டிய சஙக இலககியத துள்ளும நிகழ்காலம என்பது தெளிவாக வரையறுககப்பட விலலை என்றலும, பிறகால நன்னூலாா வீரசோழியததின் வழிநின்று நிகழகாலததை வரையறுப்பதைக காணலாம. ஆனல், பொதுவாக நோககுஙகால மூன்று காலஙகள என்ற நிலைமட்டும காணபபடுதலை நாம மறுததல நனறன்று

## (b) இறந்த காலம்
## (The Past-Tense or The Preterite Tense)

இலககணக கூறுகளுள இறநதகால அமைபபு என்பது தொனமை மரபாகவே நிலவி வருதலை நாம நனகுணரலாம. ஒரின மொழிகளின உறவு முறையைச செவவனே அறிய இவவமைபபு துணைபுரியும "The mode in which a language forms its preterite constitutes one of the most distinctive features in its grammatical character, and one which materially contributes to the determination of the question of its relationship" [1] என்று Dr Caldwell மொழிதலின் சீரமையை நோககுக

---

[1] Dr Caldwell — A Comparative Grammar of the Dravidian Languages. P. 495.

இறந்தகால வினையெச்சத்தோடு பால்காட்டும் விகுதியைச் சேர்த்தால் இறந்தகால வினைமுற்றுக்கள் உருவாகும்.

(Past Verbal Participle + P Termination > Past Tense Finite Verb)

'செய்து + ஆன் > செய்தான்'. V. P + P. S > F V (Past Tense)

இந்தச் 'செய்து' என்னும் வாய்பாட்டு எச்சம் 'த் (அல்லது) இன்' என்ற இடைநிலையோடு சேர்ந்து அமைவதாகக் கொள்ளப்படும்.

தொல்காப்பியர் சொல்லதிகாரத்துள் இறந்தகால இடைநிலையைப் பற்றி யாதொன்றும் குறிப்பிடவில்லை. உகர ஈறு பெற்ற சில வடிவங்களே வினையெச்சங்களாக நின்று இறந்த காலத்தைக் காட்டும் எனக் கூறுகின்றார். சொல்லதிகாரத்தில்

'செய்து செய்யூச் செய்பு செய்தெனச்
செய்யியர் செய்யிய செயின்செயச் செயற்கென
அவ்வகை ஒன்பதும் வினையெஞ்சு கிளவி'' — (228) எனக் குறிப்பிடுகின்றார். இவ்வாறு 'செய்து' என்னும் வாய்பாட்டின் அடியாக அவர் வினையெச்சங்களைக் குறிப்பிடுதல் நோக்கத் தக்கது. உகர ஈறேயன்றி அகரவீறும் அதே கருத்தில் வருதலை அவர் குறிப்பிடுவர்.

மழை பெய்யக் குளம் நிறைந்தது – 'ceya'
உண்டெனப் பசி கெட்டது – 'ceytena'

என்பவற்றுள் 'செய' என்ற வாய்பாடும், 'செய்தென' என்ற வாய்பாடும் இறந்தகாலம் காட்டுதலைக் காணலாம்.

இனி, நன்னூலார் தாமாக வகுத்த பதவியலில் 'த், ட், ற், இன்' ஆகிய நான்கினையும் இறந்தகால இடைநிலைகளாகக் காட்டுவர்

''தடறவொற் றின்னே யைம்பான் மூவிடத்
திறந்த காலந் தருந்தொழி லிடைநிலை''. (142)

நன்னூலார் 'செய' என்ற வாய்பாட்டினைக் காட்டுங்கால், 'உரையிற்கோடல்' எனும் உத்தியால் கீழ்வரும் காலவேறுபாடுகளை உரையாசிரியர் காட்டுவர்.

(i) கோழி கூவப் பொழுது புலர்ந்தது.–நிகழ்வு (உடனிகழ்வு)
(ii) மழை பெய்ய நெல் விளைந்தது.–இறப்பு (காரணம்)
(iii) நெல் விளைய மழை பெய்தது –எதிர்வு (காரியம்)

'ceya' denotes three tenses by contexts

ஆனால், மொழிமரபுபபடி நோககின் 'த' என்பதும், 'இன்' என்பதும இறநதகாலததை உணாததும ஆறறல பெறறவை எஞசிய 'ட்', 'ற' என்பன தகரவொறறின் புணாசசி மாறறங களாகக (Morphophonemic changes) கொளளபபடும அடுதது, நன்னூலாரும தொலகாபபியரை ஓரளவு பினபற்ற வேணடிக காலங்காட்டும் இடைநிலை தவிர்ததுக காலஙகாடடும் விகுதி களாகச (Suffixes denoting tenses) சிலவறறைக காடடுவா ''றவ்வொடு உகரம உமமை'' எனத் தொடஙகும நூற்பாவின வாயிலாக நாம காலஙகாட டும விகுதிகளை அறியலாம

''றவவொ டுகர வும்மை நிகழ பலலவுந
தவவொ டிறபபு மெதிாவும டவவொடு
கழிவுங கவ்வோ டெதிாவுமின் னேவல்
வியஙகோ ளிமமா ரெதிாவும் பாநதஞ
செலவொடு வரவுஞ செயயுநிகழ பெதிாவும
எதிாமறை மும்மையு மேறகு மீஙகே'' – (நன் 145)

'று', 'து', 'டு', 'ப' என நானதும் சொல்லீறறில வநதால இறநதகாலங காடடும என்ற கோடபாடு தொலகாபபியா காட்டும் 'செய்து' என்ற வாயபாடடில் அடஙகியது. 'பகர'வீறு அகரததில அமைவதால அதுவும 'செய' எனற வாயபாடடில அடஙகும நன்னூலார் காடடும நாலவகை இடைநிலைகளுள எவை காலததால முநதியவை என ஆராயதல மொழியியல அறிவுககுப பெருநதுணை புரியும. 'டகர', 'றகர'வொறறுககள புணாசசி விதிகளில (Morphophonemic changes) இயலபாக அமையக கூடியவை. 'ல + த > ற' ஆகவும, 'ள + த > ட' ஆகவும மாறுதலை நாம 'போல + த > போன்ற' என்றும, 'தாள + தலை > தாடலை' என்றும் அமைவதில் காணலாம. (lt>ṟ ; lt>ṭ)
'செயதான்', 'உழுதான்', 'தொழுதான்' என்ற வழககுகளில தகரவொற்று இறந்தகாலததைக காட்டுவதும, 'உறஙகினான்', 'புழுங்கிற்று' என்ற வழககுகளில் 'இன்' என்பது இறந்தகாலத்தைக காடடுவதும காணக தமிழேயல்லாமல 'வாழநதேன் > பாளநதேன்'(bāḷndēn) என்ற கன்னட வழககிலும தகரவொறறு இறந்தகாலத்தைக காட்டிநறது வினையடியோடு சோகின்ற இடைநிலை, பால்காட்டும விகுதி ஆகியவற்றைப பற்றிய ஆராயச்சியில தகரவொற்றே பெரும்பாலும, 'இன்' சிறுபான்மையாகவும அமையப பிற நிலைகளில தமிழின் தனித தன்மைககு ஏற்றவாறு வடிவங்கள் அமைவதை நாம காணலாம். (The Conjugational System of Dravidian Verbs). ''The Dravi-

dian preterite tense is ordinarily formed, like the present by annexing the pronominal signs to the preterite verbal participle The preterite verbal participle is used in Tamil with a wider range of signification than in any other dialect, though its proper and inherent meaning is that of the preterite alone"[2] என்பர் Dr Caldwell

திராவிட மொழிகளுள் இறந்தகால வினைமுற்றின் அமைப்பு (Formation of Preterite Tense) இருவேறு நிலைகளாகக் காணப்படும்

(i) பகுதியின் ஈற்று ஒற்று இரட்டித்து இறந்தகாலம் காட்டும்

(எ-டு) புக > புக்கு — Reduplication of final consonants in the root to form the preterite tense
விடு > விட்டு
அறு > அற்று

(ii) இறந்தகால இடைநிலையைப் பகுதியோடு சேர்ப்பதால் உணர்த்தப் பெறும்.

செய்+த+ஆள்>செய்தாள் V. R+T. S+P. S.

(i) Dr Caldwell இத்தகைய இறந்தகால வினை நிலைகளை "the formation of the past tense by the reduplication of the final consonants in the roots"— எனத் தம் நூலுள் குறிப்பிடுவார். கன்னட இலக்கண நூலார் இக்கொள்கையை மறுப்பார். அவர்கள் இவ்வகை வினைகளும் இடைநிலையோடு புணர்ந்தன எனக் கூறுவர்.

puk+t+u > puk+∅+u > puk+k+u > pukku

V R+T S+u > V P

(Loss of the tense sign; assimilation in concurrence with the consonants found in the root )

புக+த+உ>புக்கு
விட+த+உ>விட்டு
அற+த+உ>அற்று

இவ்வாறு பகுதி இரட்டித்தல் தனித்த மொழியொன்றின் மரபு எனக் கருதி இடைநிலையோடு புணர்ந்து அமைந்தன எனக்

[2] Ibid P 496

கொள்ளுதல் பொருத்தமாகவே அமையும். இந்த வினையடிச் சொற்கள் சிலவிடங்களில் இருவேறுபட்ட வகைகளிலும் வருதல் உண்டு. சான்றாக, 'விடு > விடுத்தேன் > விட்டேன்' எனவும், 'நகு > நகைத்தேன் > நக்கேன்' எனவும், 'புக > புகுந்தேன் > புக்கேன்' எனவும் வருதலைக் காணுங்கால் ஒரே வினை இருவகையாக வருகின்ற நிலையினை உணரலாம்.

(ii) இனி, இரண்டாவது வகையில் நாம் மேலே கண்டவாறு வினைப்பகுதியோடு இறந்தகால இடைநிலை புணர்ந்து பின் விகுதியேற்றலைக் காணலாம். சான்றாக,

செய் + த + ஆன் > செய்தான் -t-<br>
உறங்கு + இன் + ஆன் > உறங்கினான். -in- } The two distinct tense signs

(In the tense sign -'in'- the consonant is considered as an euphonic inflexional increment)

இவ்வாறு தகரவொற்றும், 'இன்' என்பதும் இடைநிலையாக வருதலைக் காண்க. சில தமிழ்ச் சொற்களில் உயிர், ஒரு சொல் ஈற்றில் வந்து இறந்தகாலம் காட்டுதலைக் காணலாம். 'போ' என்ற வினையடிச்சொல் இறந்தகால எச்சமாக மாறப் 'போய்' (அல்லது) 'போயி' (போஇ) என நிற்கும். ஈற்றில் யகரவொற்று இருந்தாலும் அதனோடு சேர்ந்த இகரத்தைக் கொண்டு இகரவுயிரே இறந்தகால நிகழ்ச்சியைக் காட்டும் (The final -i- denotes the past tense) ஆற்றல் பெற்றதாகக் கூறுவர்.

(ய்+இ>; இ – for the verbal participle).

மலையாள மொழியில் காணப்பெறும் இறந்தகால இடைநிலைகள் தமிழில் காணப்படுவது போலவே அமையும். ஆனால், அம்மொழியின் ஒலியமைப்பில் மிகுதியாக மெல்லோசை இயங்கி வருவதால் (Nasal endings) சில மாறுதல்கள் காணப்பெறும். (Nasal theme is unique in Malayalam) 'நடந்து' என்ற இறந்தகால வினையெச்சம் 'நடந்நு' என மலையாளத்தில் ஈற்றயல் நகரத்தோடு ஒரினமாகி (assimilation) வரும். ஆனால், Dr Gundert கூறுமாறு நாளடைவில் இம்மொழியின் நீர்மை மாறி வருதலைக் காணலாம்.

தெலுங்கு மொழியில் எல்லா வினையெச்சங்களும் எத்தகைய மாறுபாடும் இன்றி, வினைப்பகுதியோடு இகரம் இயைய அமையும். 'கொள + த் + உ > கொண்டு' (l+t>nt) என்ற தமிழ்

வடிவம் தெலுங்கில் 'கொள + இ > கொண்ணி' என அமையும். (குற்றியலுகரத்திற்கு மாறாக இகரவுயிர் நிற்றலைக் காண்க — The vowel 'i' occupies the place and the significant 'u' is lost) ஆனால், தெலுங்கின் உயர்மொழிச் சொற்களில் 'தகரவொற்றும்', 'இகர உயிரும்' இயைந்து வந்ததையும் காணலாம்

(எ டு) ādittini ஆடு + த + இ + னி > ஆடிதினி

(Both represent the significance of the preterite tense.)

கன்னடமொழியில் தகரவொற்றும், இகரவுயிரும் தத்தம் நிலைக்கு ஏற்றவாறு வரும். 'இழி > இளி > இளிது' என்ற சொல் 'இறங்குதல்' என்ற பொருளைத் தரும் இதில் 'தகரவொற்று இறந்தகாலத்தைக் காட்டும் மற்றொரு வகையில் 'மாடு' என்பதில், இகர உயிரொலி 'மாடி' (having done) என இறந்த காலங் காட்டும்.

(எ டு) 'mādidenu' (I did)

"All that can be safely be concluded, therefore, is that the 't' of the Dravidian preterite was probably in its origin a neuter singular formative, converting the verbal root to which it was attached into a verbal noun ; not into an abstract verbal noun, but into a concrete or conjugated noun, in which the action of the verb was arrested and localised"[3] என்று Dr Caldwell இறந்தகால இடைநிலை உருவாகியுள்ள நிலையைத் தக்கவாறு ஆராய்ந்து கூறியுள்ளார் இவ்வாறு இறந்தகாலத்தைப் பொருத்தவரையில் எல்லா மொழிகளிலும் தகரவொற்றும், இகரவுயிரும் அமைதலைக் காண்கின்றோம். அவ்வாறு மிகையாகக் காணப்படுவன பிற்காலத்தில் இலக்கண எளிமையைப் பேண வந்தனவோ என எண்ண வேண்டியுள்ள நிலையை நோக்குக

## (c) எதிர் காலம். (The Future Tense.)

திராவிட மொழிகளில் இறந்தகால அமைப்பு, இறந்தகால வினையெச்சத்தோடு பால் காட்டும் விகுதியைச் சேர்ப்பதால் அமைதலைக் கண்டோம். ஆனால், எதிர்கால அமைப்பு மட்டும் எதிர் கால வினையெச்சத்திலிருந்து அமைவது இல்லை வினைப் பகுதியோடு எதிர்கால இடைநிலை சேர்ந்து வினைமுற்றுகள்

[3] Ibid. P, 512

அமைகின்றன (V R +T. S +P. S >F V.) "The future is generally formed, not from a future participle, but by suffixing to the verbal theme some particle which is regarded, whatever its origin may have been, as a sign of future time and adding to that particle the pronominal terminations" [1] என்பர் **Dr Caldwell** திராவிட மொழிகளை ஆராய்கின்ற பொழுது "எதிர்கால வினையெச்சம்" என்ற ஒன்று இம் மொழிகளில் இல்லையென்றே கூறலாம் (**The Dravidian languages are destitute of future verbal participle**) எவ்வகைப்பட்ட விதிக்கும் புறனடை அமைவது போலப் பொதுவாகக் காணினும் இவ்விதிக்கு மாறுபட்டவைகளை நாம் காண முடியும். இலக்கியத் தமிழிலும், மலையாளத்திலும் எதிர்கால வினையெச்சங்கள் இந்த நிலைக் காணலாம் வான் ஈற்று, பான் ஈற்று வினையெச்சங்கள் எதிர்காலத்தைக் காட்டும் எனக் கூறுவர்

(எ டு) ஒப்பீயன் மொழிநூல் பயில<u>வான்</u> சென்றேன் —வான்

ஏங்கைதயைக் காண<u>பான்</u> இலலம் சென்றேன் —பான்

—வினையெச்சங்கள்.

பிற்காலத்தார் இந்த வினை முற்றுக்கள் ஒன்றுக வருதல் இல்லையென்று உடன்பட்டு இவ்வகைகளை முற்றெச்சங்களாகக் கூறத் தொடங்கினர் நம் தமிழின் பேச்சு வழக்கை ஆராய்ந்தால் எதிர்காலப் பொருளை நிகழ்காலமாக வழங்கும் மரபை உணரலாம். இது காலவழுவமைதி என்று பிற்காலத்தில் கூறப்பெற்றது

(எ டு) நான் நாளை வருவேன் > நான் நாளை வருகிறேன்

திராவிட மொழிகளுள் தமிழில் சில வழக்குகளை நாம் காணின் சில மொழிநூல் உண்மைகள் தெரியவரும் 'செய்கு', 'செய்தும்' என்பன எதிர்காலத்தில் வழங்கியதை ஆராய்ந்தும், 'கு' என்பது தொழிற்பெயர் விகுதியாக (**Suffix of the Verbal Noun**) வருவதை உணர்ந்தும், 'செய்கு' போன்றவற்றைத் தொழிற்பெயர் (**Verbal Noun**) என்பர் **Dr. Caldwell.** "The particles by which it is expressed seem to show that originally it was a verbal noun, denoting abstractly the idea contained in the verb" [2] என்று அவர் மொழிவர் அவர் கருத்துப்படி

---

[1] Dr Caldwell — A Comparative Grammar of the Dravidian Languages P 513

[2] -Ibid- 513.

தொழிற்பெயராக இருந்தவை முக்காலத்திற்கும் பொது வினை யாக மாறி, நாளடைவில் எதிர்கால வினையாக அமைந்திருக்கும். 'கு' போலவே 'வு', 'பு' என்பவையும் தொழிற்பெயர் விகுதிகளே.

(செலவு – celavu, சார்பு – cārpu)
[V R +(F T S )+Suffix of the Verbal Noun).
(F. T. S Future Tense Sign.)]

நம் இலக்கணங்களுள் காணப்பெறும் சில முடிபுகள் வேறுவகை நிலையை உணர்த்தும். 'என்பார்' என்பது 'என்மனார்' என அமைவது போல வருதலின் எதிர்கால இடைநிலையாக உள்ள 'ப்'கரம் 'ம்'கரமாகவும் மாறும் என்பது தெரிய வருகிறது (ப ~ ம) 'உம்' விகுதி பெற்ற சில வினை முற்றுக்கள் பால் காட்டும் விகுதிகளைப் பெறாமல் அமைதலைக் காணலாம் .

(எ. டு) அது செய்யும் } √V. R. + um (No existence of
அவை செய்யும். } pronominal suffix.)

இந்தத் தொடர்களில் காணப்பெறும் வினைமுற்றுக்கள் வினை யெச்சங்களாக வழங்காமல் பெயரெச்சங்களாக வழங்குதலைக் காணலாம்.

(எ. டு) பணி செய்யும் மகள். } ('ceyyum' is only an
யாழ் மீட்டும் விரல்கள். } adjective )

நன்னூலார் பகர, வகர வொற்றுக்கள் எதிர்காலத்தை யுணர்த்தும் இடைநிலைகள் எனக் கூறுவர்.

"பவ்வ மூவிடத் தைம்பால் எதிர்பொழுது
இசைவினை யிடைநிலை யாமிவை சிலவில". (நன் 144)

சங்க கால வழக்குகள் விகுதிகளைக் கொண்டு எதிர்காலத்தை உணர்த்தவும் (அறிய), பிற்காலத்தில் இடைநிலைகள் காலங் காட்ட முற்பட்டமை மாற்றமேயாம் தமிழில் எதிர்காலம் சில புதுமை வடிவங்களையும் தருகின்றது. 'அவன் இருப்பான்' என்பதில் வினைப்பகுதி கால இடைநிலை பெற்றுப் பாலகாட்டும் விகுதியோடு புணர்தலைப் போல, 'அது இருப்பது' என்ற வடிவம் அமைவதில்லை மாறாக, 'அது இருக்கும்' என்ற வடிவமே எதிர் கால ஆற்றலை உணர்த்துகின்றது இனி, இலக்கியத் தமிழில் 'வருந' என்ற ஒரு வடிவம் (things that will come) காணப் படுகின்றது.

(எ-டு) மலையாளம் - ஞான் எழுதும் (I will write) - பால் உணர்த்தும் விகுதியில்லை.

கன்னடம் - வ & ய (Semi Vowels)

தெலுங்கு - வு - வ + உ ( v - Future Tense Sign -u- Euphony.

எதிர்கால அமைப்பு.

(Formation of Future Tense)

I V R.+T S +P S பாடு+வ்+ஏன்>பாடுவேன்.

II V R +kum (suffix denoting tense) செய் + கும் > செய்கும்.

III V. R +um (suffix) மீடு + உம் > மீடும்.

எதிர்கால வினையெச்சங்கள் - Future Verbal Participle.

இலக்கியத் தமிழிலும், மலையாளத்திலும் 'ஆன்' ஈறுபெற்ற 'பான்', 'வான்' என்ற வடிவங்களேயல்லாமல் 'பாக்கு' எனத் தோன்றும் உள்ளது (எ-டு) 'உண்பாக்குச் சென்றேன்'. இவற்றில் முதல் மெய் பகரம் அல்லது வகரமாதலால், அவையே எதிர்கால இடைநிலைகளாக அமையும். கன்னடத்தில் வகர ஒற்றே இவ்வாற்றலைப் பெறுகிறது.

## கால வேறுபாடுகள் (Compound Tenses)

இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் முக்காலங்கள் பல வேறு நிலைகளைப் பெற்று நம் மொழியின்கண் பயின்று வருகின்றன. கால வேறுபாடுகளை உணர்த்தும் பொழுது கால இடைநிலைகள் பெருகி அமையாமல், துணை வினைகள் (auxiliary verbs) ஆங்காங்குச் சேர்ந்து பொருட் சிறப்பைக் கால நிலைகளோடு உணர்த்தி நிற்றலைக் காணலாம். "It is unnecessary to enter into an investigation of the Dravidian compound tenses and they are formed in the simplest possible manner, by suffixing the various tenses of the substantive verb to the verbal participles of active verbs" [3] என்று Dr Caldwell குறிப்பிடுவர்.

(எ-டு) செய்திருப்பான் > செய்து + இரு + ப + ஆன்,

V P + Auxiliary verb + T S + P. S > Compound Tense.

(or)

செய்திட்டான் > செய்து + இட்டான்

V P + Finite Verb > Compound Tense.

இவ்வாறு காலவேறுபாடுகள் உருவாகும் பொழுது வினையெச்சங்களோடு வேறு வினைமுற்றுக்கள் காலத்தை உணர்த்த வருதலையே நாம் பெரிதும் காணலாம்.

---

[3] —Ibid— P 520

## Table of Classification of verbs according to the Conjugations as found in the Tamil Lexicon

| Conjugation No | Root | Present Tense | Past Tense | Future Tense | Infinitive 'ceya' |
|---|---|---|---|---|---|
| I | cey | ceykiṟēṉ | ceytēṉ | ceyvēṉ | ceyya |
| II | āḷ / āḷu | āḷkiṟēṉ<br>āḷukiṟēṉ | āṇṭēṉ | āḷvēṉ / āḷuvēṉ | āḷa |
| III | col / collu | colkiṟēṉ / collukiṟēṉ | coṉṉēṉ | colvēṉ / colluvēṉ | colla |
| IV | aṟi | aṟikiṟēṉ | aṟintēṉ | aṟivēṉ | aṟiya |
| V | ākku | ākkukiṟēṉ | ākkiṉēṉ | ākkuvēṉ | ākka |
| VI | naṭu | naṭukiṟēṉ | naṭṭēṉ | naṭuvēṉ | naṭa |
| VII | uṇ / uṇṇu | uṇkiṟēṉ<br>uṇṇukiṟēṉ | uṇṭēṉ | uṇpēṉ<br>uṇṇuvēṉ | uṇṇa |

| Conjugation No. | Root | Present Tense. | Past Tense. | Future Tense. | Infinitive. |
|---|---|---|---|---|---|
| VIII | tin / tinnu | tinkiren<br>tinnukiren | tinren | tinpen<br>tinnuven | tinna |
| IX | kel | ketkiren | ketten | ketpen | ketka |
| X | kal | karkiren | karren | karpen | karka |
| XI | tir | tirkkiren | tirtten | tirppen | tirkka |
| XII | nata | natakkiren | natanten | natappen | natakka |
| XIII | ta ; ca ; kan | These occur after undergoing changes in the verbal roots | | | |

# 46. 'பெயரெச்சம்'.
# The Relative Participle.

நம் திராவிட மொழிகளுள் "பெயரெச்சம்" என்பது தனிப்பட்ட சிறப்பு நீர்மையினை உடையது. ஐரோப்பிய மொழிகளில் காணப்பெறும் இணைப்பு இடப் பெயர்கள் (Relative Pronouns) திராவிட மொழிகளில் இல்லை ஆனால் அப்பெயர்கட்கு ஈடாகத் திராவிட மொழிகளில் மிகச் சிறந்த பெயரெச்ச அமைப்பு (Formation of the Relative Participle) இருப்பது இவற்றின் விழுமிய மாண்பினை நனியுணர்த்தும் தக்க சான்றாகும்.

"It is a remarkable peculiarity of the Dravidian languages, that they have no relative pronouns whatever, and that the place of the relative pronoun is supplied by a part of the verb which is called the relative participle, or the adjectival participle, a participle which is invariably, followed by a noun and proceded by the words or phrases that depend upon the relative" [1] என்று Dr Caldwell குறிப்பிட்டு நம் பெயரெச்சப் பான்மையினை விளக்குவர்.

'The man who came' என்ற ஆங்கிலச் சொற்றொடரை 'வந்த மனிதன்' என்ற அமைப்பால் நம் மொழியில் உணர்த்தலாம் இதனையே Dr. Caldwell அவர்கள் 'Relative participle' (அல்லது) 'Adjectival Participle' என்பர். இவ்வகையில் முற்று வினை எச்சமாக நின்று பெயரினைத் தழுவி வருதலையும் காணலாம்.

'I saw the man who came' என்ற சொற்றொடரையும், 'வந்த மனிதனைக் கண்டேன்' என்ற சொற்றொடரையும் ஒப்பு நோக்குங்கால், ஐரோப்பிய மொழிகளின் இயல்பும், திராவிட மொழிகளின் இயல்பும் தெளிவாகத் தெரிகின்றன திராவிட மொழியின் தனித்தன்மை சொற்சுருக்கத்தை மேற்கொண்டு மிக்க அழகோடு பொருந்தியுள்ளது இவ்வாறு திராவிட மொழிகளில் காணும் அமைப்பினைப் "பெயரெச்சம்" என்று குறிப்பிடுகிறோம் (பெயரெச்சம் → Noun defect or noun complement, a word which requires the complement of a noun to complete its signification)

---

[1] Dr Caldwell — A Comparative Grammar of the Dravidian Languages. P 512

தொலகாபபியா இதனைப் "பெயரெஞ்சு கிளவி" என்றும், நன்னூலாா 'பெயரெசசம்' என றும கூறுவா முககால வாயப பாடுகளைக காட்டி முற்றுவினைகள எசசப பொருளபட்டு நினறு பெயாகளைககொணடு முடிதலையே நம இலககணம உணாததும

"நிலனும பொருளும காலமும கருவியும்
வினைமுதற் கிளவியும் வினையும உளபபட
அவவறு பொருட்குமோ ரன்ன உரிமைய
செய்யும செயத என்னும சொலலே" —
(தொல சொல. 234)

என்று 'செயயும', 'செய்த' ஆகிய இரு சொற்களும் நில முதலிய ஆறு பொருட்கும ஒதத உரிமைய எனத தொல்காபபியா மொழிவா

(எ.டு) வாழும் நெஞசம. —'செயயும' } பெயரெசசஙகள
சிநதிய கணணீா. —'செயத' }

எசசவியலுள் இபபெயரெசசம பெயா கொணடு முடியும எனபா

'பெயரெஞசு கிளவி பெயரொடு முடிமே' —
(தொல சொல. 433)

நன்னூலாா,
"செயத செய்கின்ற செயயுமென் பாட்டிற
காலமுஞ் செயலும தோன்றிப பாலொடு
செய்வ தாதி அறுபொருட் பெயரும
எஞச நிறபது பெயரெச சமமே" — (சொல 340)

என்று கூறுவர்.

| (எ.டு) | நொநத உளளம் | — 'செய்த' | முககாலப |
|---|---|---|---|
| | கழிகினற நாட்கள. | — 'செயகின்ற' | பெயரெசச |
| | கவலும மனம. | — 'செயயும' | வடிவஙகள. |

இனி, மொழிநூலார் பெயரெசச நீரமையை விளககும பொழுது, இறநத கால வினையெசசததோடு அகர ஈறு புணரு மெனின், அது பெயரெசசமாகும எனபா.

(எ. டு) செய்து + அ > செய்த.

Verbal Participle + 'a' suffix > Relative Participle.

(V P + 'a' > R. P)

வினையடிச் சொல்லோடு இறந்தகால இடைநிலையும், அகர விகுதியும் (செய் + த + அ) புணர்ந்து உருவாதலையும் கொள்ளலாம். இது போலவே நிகழ்காலத்திலும் பெயரெச்சம் உருவாதலைக் காண வேண்டும். நிகழ்கால வினையெச்சப் பாங்கு சீரிதாக இன்மையால், நம் இலக்கண மரபுக்கு ஏற்றவாறு வேறு வகையான அமைப்பைக் கொள்கின்றோம். வினையடிச் சொல்லோடு நிகழ்கால இடைநிலையும், அகர விகுதியும் புணர்கின்றன.

(எ-டு) செய் + கின்று + அ > செய்கின்ற.

| Verbal Root | + | Present Tense Sign | + | 'a' sufix | > | Relative Participle |
|---|---|---|---|---|---|---|

**(V R + T S + 'a' > R P)**

ஆனால் எதிர்காலத்தில் பகர, வகர இடைநிலைகளைக் கொண்டு வாராமல், 'உம்' என்பது வினையடிச்சொல்லோடு சேர்ப் பெயரெச்சம் அமைதலைக் காட்டலாம்.

(எ-டு) செய் + உம் > செய்யும்

| Verbal Root | + | 'um' Suffix | > | Relative Participle |
|---|---|---|---|---|

**(V. R. + 'um' > R. P.)**

உடன்பாட்டு வினைமுற்று (**Affirmative**) அன்றி எதிர் மறை வாய்பாட்டால் (**Negative**) எதிர்காலத்தைக் குறிப்பிடும் பொழுது அகர விகுதியினைக் காணலாம்.

(எ-டு) செய் + ஆ + த + அ > செய்யாத

| Verbal Root | + | Negative Particle | + | Tense Sign | + | Suffix of the Relative Participle | + | Negative Relative Participle |
|---|---|---|---|---|---|---|---|---|

இவ்வாறு முக்காலத்திற்கும் உரிய பெயரெச்சங்களைக் காணும் பொழுதும், எதிர்மறைப் பாங்கினைக் காணும் பொழுதும், நாம் பெரும்பான்மை நோக்கிப் பெயரெச்ச விகுதி என்று கூறத் தகுவது 'அ'கரமே என்று துணியலாம்.

திராவிட மொழிகளில் இப்பெயரெச்சங்கள் இணைப்பு இடப்பெயர்களைத் (**Relative Pronouns**) தவிர்த்து வழங்கப் படுகின்றன. 'வந்த மகன்' என்பதில் 'வந்தவன் யாவனோ அந்த மகன்' என்னும் பொருள் விரிந்து நிற்றலில் இவ்வமைப்பை

நன்கு உணரலாம. தமிழ மொழியுள் இபபெயரெசச அமைபபுககள செயபபடுபொருளேயும, இடபபொருளேயும தழுவி வருதலேக காணலாம.

(எ. டு.) நூலே எழுதின புலவன் (செயபபடுபொருள).
காட்டில திரிகின்ற யானே. (இடப பொருள)

இனி, நம மொழியில பெயரடைகளாக வரும நலல, தீய, பழைய, பெரிய முதலிய சொற்களிலும அகர விகுதியே காணப படுவதாலும, அபபெயரடைகள் பெயாகளேத தழுவி நிறபதாலும இவற்றை நாம 'குறிப்பு பெயரெசசங்கள' (**Implied Relative Participles**) என்கினேறும.

(எ. டு) நல்ல மகள (நன்மை>நலல)
தீய நடபு (தீமை >தீய)
பழைய மரபு (பழமை>பழைய)
புதிய சூழல (புதுமை>புதிய)
பெரிய வெற்றி (பெருமை>பெரிய)

'நன்மை' என்பது 'நலல' என்று 'மை' விகுதி கெட்டு, 'நல' என்ற பணபடியோடு (**Quality Root**) 'அ'கர விகுதி புணாநது குறிபபுப பெயரெசசமாக அமைநதது பணபுப பெயாகளே அலலாமல ஏனேய பெயாகளிலும அகர விகுதி அமைநது இவ்வாறு ஆதல் உணடு ஆனல இததகைய வழககுகள இலககியஙகளிலதான் மிகுதியாகக காணபபெறும

(எ டு) பாலேய சுரன
(**Noun+'a' suffix**)

குறிபபுப பெயரெசசஙகளின வழககு மிகுதியாக தெரிநிலேப பெயரெசசஙகளுள சில நாளடைவில பெயரடைகளாக நின்று பணபை மட்டும உணாததும நிலே பெறறன

(எ டு) உயாநத மனம.
தாழ்நத நிலே
**Verbal Root+Tense Sign+'a' suffix.**

இவறறுள 'உயாவு', 'தாழவு' என்பனவறறின் ஈற்று உயிா மெய கெட்டு, விணேயடிகளாக அமைநது பின் கால இடைநிலே புணாந்து பெயரெசசப பானமை ஏறறுலும, அவை காலம உணாததுவன அலல

**Formation of the Relative Participle** — பெயரெசச அமைடபு

| | | |
|---|---|---|
| i) | **V. R + T S + 'a' suffix** | செய் + த + அ > செய்த |
| ii) | **V P + 'a' suffix** | நொநது + அ > நொநத |
| iii) | **V R + T. S + 'a' suffix** | காண + கினறு + அ > காணகின்ற |
| iv) | **V R + 'um' suffix** | வாழ + உம > வாழும் |
| v) | **V R + N P + T S + 'a' suffix** | செய் + ஆ + த + அ > செயயாத |
| vi) | Q R. + 'a' suffix | நல + அ > நலல |

இவ்வாறு திராவிட மொழிகளில பெயரெசசங்கள் பல்வகை நிலைகளைப பெறறு நம தொன்மை மாணபைச சிறபபாகப போறறி வருதல காணகூடு



# 47. 'வினையெச்சம்'.
# Tbe Verbal Participle.

நம் திராவிட மொழிகளின் தனிப் பெரும் பண்பாக ஒளிரும் இலக்கணக் கூறுகளுள் 'பெயரெச்சம்' என்பதுவும் ஒன்று எனக் கண்டோம். உயரிய இலக்கண மரபுகளால் தமிழ் மொழியின் தனித் தன்மை தெள்ளெனப் புலப்படும் வண்ணம் இலக்கிய உலக வழக்குகள் அமைந்துள்ளமை கண்கூடு. "பெயரெஞ்சு கிளவி" என்பதைப் போலவே முற்று வினை எச்சப் பொருள்பட்டு வினைகொண்டு முடிய அதனை இலக்கண நூலார் 'வினையெஞ்சு கிளவி" அல்லது 'வினையெச்சம்' (Verbal Participle) என்பர். அதன் நீர்மையினை நாம் ஈண்டுச் சுருங்கக் காண்போம்.

தொல்காப்பியர் வினையியலில் தக்க வாய்பாடுகளைக் கொண்டு வினையெச்சத்தை விளக்குவர்:

> "செய்து செய்யூச் செய்பு செய்தெனச்
> செய்யியர் செய்யிய செயின்செயச் செயற்கென
> அவ்வகை ஒன்பதும் வினையெஞ்சு கிளவி" —
> (தொல். சொல். 228)

இதற்கு உரைகண்ட சேனாவரையர் இறுதியிலுள்ள இடைச் சொற்களால் பாகுபடுத்துவர். வினையெஞ்சு கிளவிக்கு உரிய ஒன்பது வாய்பாடுகளும், 'உ, ஊ, பு, என, இயர், இய, இன, அ, கு' என்னும் இறுதி நின்ற இடைச் சொல்லான் வேறுபட்டன என்பது அவர் உரை விளக்கம்.

சான்றுகள்:

| | | | |
|---|---|---|---|
| i | உகரம். | உண்டு வந்தான். | — இறப்பு |
| ii | ஊகாரம்: | தின்னூ சென்றான் | — இறப்பு |
| iii | பகரவுகரம். | நகுபு வந்தான். (நகாநின்று) | — நிகழ்வு |
| iv | என. | சோலை புக்கெனப் பசி நீங்கிற்று. | இறப்பு |
| v | இயர் | செய்யியர் அமைந்தனர் | எதிர்வு |
| vi | இய. | காணிய சென்றாள். | எதிர்வு |
| vii | இன: | மெய்யுணரின் வீடு எளிதாம் | எதிர்வு |
| viii | அகரம் | ஞாயிறு பட வந்தான். | இறப்பு |
| ix | ககரவுகரம்: | பாடற்கு இசைந்தாள். | எதிர்வு |

அடுதது, 'பின, முன், கால, கடை, வழி, இடதது' என்னும ஈறறவாய வருவனவும, அவை போலக காலங கருதி வருவனவும வினையெசசங்களை என்பா தொலகாபபியா.

"பின்முன் காலகடை வழிஇடதது என்னும
அனன மரபின் காலங கணணிய
என்ன கிளவியும அவறறியல பினவே"

(தொல சொல் 229)

'வான, பான, பாகக்' என்னும வினையெசச வாயபாடுகள 'காலங கணணிய' என்பதனால பெறபபடும இவவாறு பதினைநது வினையெசசப பாஙகினுள 'செயது', 'செயயூ', 'செயபு' என்னும முதல நிலை மூனறும வினை முதல வினையால முடியும.

(எ டு) கறறுச சிறநதான
உணணூா வநதான
கையிறுபு வீழநதான.

பிற வினையெசசங்கள் வினை முதல வினையானும, ஆண்டு வநது பொருநதும பிற வினையானும, தாம பொருந்தும் வகையில முடியும என்பது இலககண நெறி

(எ. டு) மழை பெயதெனப புகழ பெறறது
மழை பெயதறகுக கு வுள வாழததுதும.
இறநதான இளமை வாராது
கணவன இனிது உணடபின் காதலி முகமலாநதது

இவ வினையெசசங்கள அடுககி வரினும பொருட சிறபபுறும எனபதனைப,

"பனமுறை யானும வினையெஞசு கிளவி
சொன்முறை முடியாது அடுககுந வரினும
முன்னது முடிய முடியுமன பொருளே"

(தொல. சொல 233)

என்று கூறுவா

(எ. டு) அவள யாழ எடுதது இசை கூடடிப பாடிப புகழ கொண்டாள்

தொலகாபபியா எசசவியலுள இவவினையெச்சம தெரிநிலை, குறிபபு என்னும இருவினைக கணணும் வரும் என்றும், குறிப்பு வினையாக வருங்கால ஆகக வினை கொணடு முடியும என்றும கூறுவா.

"வினையெஞ்சு கிளவிககு வினையுங குறிப்பும்
நினையத தோன்றிய முடிபா குமமே
ஆவயிற குறிபபே ஆககமொடு வருமே"
(தொல. சொல 432)

(எ. டு) உழுது வந்தான்
மருந துணடு நலலனுயினுன்.

இருவகை எசசஙகளும் எதிர்மறைப் பொருளில வரினும பொருணிலை திரியாது என்பது இலககண முடிபு

"பெயரெஞசு கிளவியும வினையெஞசு கிளவியும
எதிரமறுதது மொழியினும பொருணிலை திரியா'
—(தொல சொல. 236)

(எ. டு) வணையாக கோல்
பாடாது சென்ருள்.

நனனூலார,

"தொழிலுங காலமுந தோன்றிப பால்வினை
ஒழிய நிறபது வினையெச சமமே" (நூறபா 342)

என்று வினையெசசத்திற்கு இலககணம கூறிப் பின்னர் உரிய வாய்பாடுகளைச சுட்டுவா

"செய்து செய்பு செய்யாச செய்யூச
செய்தெனச செயச செயின் செயயிய செய்யியா
வான்பான பாககின வினையெச்ச சமபிற
ஐந்தொன்று ஆறுமுக காலமும முறைதரும"
(நூற்பா. 343)

என்று கூறி, முன் ஐநதும் இறந்த காலத்தையும், 'செய' என்பது நிகழ்காலததையும், எஞசிய ஆறும எதிாகாலததையும முறையாக உணர்ததும என்பா.

"அவற்றுள
முதலில நான்கும ஈற்றில மூன்றும்
வினைமுதல கொள்ளும பிறவுமேற குமபிற".
(நூற்பா 344)

செய்து, செய்பு, செயயா, செய்யூ, வான், பான், பாககு. } வினை முதல் கொள்ளும.

(எ. டு) தான் கல்லாச் கழித்தான்.
தான் கொலவான் செல்வான்.
தான் அலைப்பான் புகுந்தான்.
தான் தருபாக்கு வருவான்.

(பிற மேலே காண்க)

செயதென, செய, செயின், } வினை முதல வினையின்றிப்
செயயிய, செயயியா. } பிற வினையையும கொள்ளும

(எ. டு) தானுணடென மகிழநதான்.
பிறனுணணக காணகிறுன்.
தானுண்ணின் மகிழ்வான
பிறனுணணிய கொடுபபான்.
தானுணணியா போவான்.

இனி, "சொறறிரி யினும் பொருள் திரியா வினைககுறை"
(நூறபா 346)

என்பதனுல வினையெச்ச வாயபாடுகள் வேறுபட்டு வரினும அவறறின பொருளகள் மாறுபடா என்பா நன்னூலாா.

(எ டு) ஞாயிறு பட்டு வநதான். (பட்டு < பட)
யான் கொள்வான் பொருள கொடுததேன்.
(வான் < செய)

இனி, மொழிநூலார் இவ்வினையெசசததை, 'The Verbal Participle' அலலது 'The Adverbial Participle' என்பா. வினையடிசசொலலோடு காலஙகாட்டும இடைநிலையும, ஒலித துணை உகரமும புணரின் வினையெசசமாக அமையும எனபர்.

(எ டு) செய+த+உ > செயது
Verbal Root + Tense Sign + Enunciative Vowel, 'u' > Verbal Participle
(V R + T S + 'u' > V P.

பெயரெசச விகுதியைப போல வினையெசசததிற்குத தனிதத விகுதியைத தெளிவாகக கூற இயலவிலலை அடிசசொலலோடு கால இடைநிலை புணாநது நம மொழிததனமைககு ஏற்றவாறு இறுதியில வலலொலி வர உசரம அமைகிறது பிற இடஙகளில வினையெசச வாயபாடுகளுககு ஏறற வகையில நாம அவறறைக காணலாம

"There is no separate verbal participle suffix By the mere addition of the tense sign to the root, the verbal participle is formed. 'u' is found only when the verbal participle will otherwise end in a plosive Therefore it stands there only as an enunciative particle" — என்று நாம ஒரு வரையறையை ஒழுங்குபடுததி வினையெசச நீரமையை

உணர்த்த முற்படுகின்றோம். பல்வேறு வினையெச்ச வாய்பாடுகளுள் 'செய' என்னும் வினையெச்சம் தரும் பொருட்சிறப்பைத் தனியே காண்பது நம் மொழி வளத்தின் பெருமைக்குத் தக்க சான்றாக அமையும்.

## 'செய' என்னும் எச்சம் ('Ceya'-the form of the Verbal Participle)

'செய' எனும் எச்சவினை நம் திராவிட மொழிகளின் வினையெச்ச வகைகளுள் ஒன்றாகக் கருதப்படுகின்றது.

(எ-டு) பாட வேண்டும்
காண விரும்பினார்
ஆடத் தொடங்கினார் } 'ceya' - the verbal participle

இவ்வெச்சங்கள், பாடல், காணல், ஆடல் முதலிய தொழிற்பெயர்கள் (Verbal nouns) ஈற்று மெய் கெட்டு நின்றமையே (Loss of final consonants).

இனி, 'பாடற்குத் தொடங்கினான்' என்பது போலத் தொழிற் பெயரோடு நான்கனுருபு சேர்ந்தும் அப்பொருளில் வருதல் உண்டு (Verbal Noun + Dative Case - sign)

(எ-டு) பாடல் + கு > பாடற்கு.

தமிழில் எச்சங்களாக உள்ள வடிவங்கள் கன்னடம் முதலிய ஏனைய திராவிட மொழிகளில் தொழிற் பெயராக இருந்தலும் கண்டு ஆராய்ந்து உணரத் தக்கதாம். இனி, இச்செயவென் எச்சங்கள் பலவகையாக அமைதலையும் காண்போம்.

(i) காரியப் பொருளில் எதிர்கால வினையெச்சமாக வழங்குதல். (Future Verbal Participle)

(எ-டு) வாழப் பிறந்தேன்.

(ii) உடனிகழ்ச்சிப் பொருளில் நிகழ்கால வினையெச்சமாக வரும். (Conjunctive-Present Tense Verbal Participle)

(எ-டு) என் மகள் வரக் காண்கின்றேன்.

(iii) இறந்தகால வினையெச்சமாகக் காரணப் பொருளில் வரும் (Past Tense Verbal Participle.)

(எ டு) மழை பெய்ய நெல் விளைந்தது.

(iv) பண்புப் பெயர்களுடன் 'ஆக' என்பது சேர்ந்து வினையடையாக (adverb) வழங்கும்

(எ டு) நீர் நன்றாகப் பேசினீர் } நன்மை + ஆக
மகள் நன்றாகப் பயின்றாள் } Quality Noun + āka

(v) இரட்டித்து நின்று மிகுதிப் பொருள் தரும்
(Duplication of the Verbal Participle form.)

(எ டு) படிக்கப் படிக்க அறிவு வளரும்.

(vi) பல செயல்களை ஒரு காலத்தில் நிகழ்ந்தனவாகக் கூறும் போது பல வினைகள் இவ்வாய்பாட்டால் அடுக்கி வரும்

(Continuous occurrence of the 'ceya' forms)
முகில் எழ, வான் இருள, இடி இடிக்க, மழை பெய்தது.

இச் செயவெனும் எச்சத்தை 'Infinitive' என்று மொழி நூலார் அழைப்பர் Bray என்பார், "The infinitive is a verbal noun declinable throughout the singular" [1] என்பர் Dr. Caldwell இது பற்றிக் குறிப்பிடும் பொழுது, "I have no doubt that the true infinitive was originally a verbal noun also (as in the Scythian languages it is always found to be), and this origin of the Dravidian infinitive will, I think, be proved in the sequel" [2] என்று கூறுதல் காண்க இவ்வாறு 'செய' எனும் வினையெச்ச நீர்மை நம் மொழியின்கண் அமைந்து பொருள் நலனை மிகுவித்தல் காண்க



1 Bray – The Brahui Language. P 134
Dr. மு. வ - மொழிநூல் – P. 244.

2 Dr. Caldwell - A Comparative Grammar of the Dravidian Languages. P. 532.

# 48. 'வினைப்பாகுபாடுகள்'.
# The Classification of Verbs.

நம மொழியின்கண வினைசசொற்களின் பலவேறு நிலைகளை நனகு பகுததுக காடட இயலும தொழில நீரமையை அடியொறறி இவ்வினைபபாகுசெவவனே அமைவதால நாம கருதது நிலைககு ஏறறவாறு பல்வேறு வகைகளாகப பாகுபடுதது கினறோம. ஏவல, வியஙகோள என்றும, தெரிநிலைவினை, குறிபபு வினை என்றும், உடன்பாடு, எதிரமறை முறறு எனறும, செயபபாடடு வினை எனறும் இவவாறு கொளவதை இலககண நூலார நன்கு காடடுவர. தமிழ வினைச சொறகளுட சில பகுதியிலுள்ள ஒறறு இரடடியும (Duplication of the consonants), பல இடைநிலைகளாலும (Tense-signs), இனனும சில விகுதிகளானும (Suffixes) காலஙகாடடுதல் இயலபு. காலஙகள மூன்ருக இருபபினும, தொனமைக காலததில நிகழ காலம (Present Tense) என ஒன்று இருநததிலலை எனபது தெளிவாகத தெரிய வருகினறது தொலகாபபியா நிகழகால இடைநிலைகள கூறுதொழிய, நனனூலார தஙகால வழககு நோககி மூன்று இடைநிலைகளைக குறிபபிடுவர. முககாலங களின போககினை நாம் இன்று பின்வருமாறு பகுததுக கூறலாம்.[1]

(1) இறந்தகாலம் :

i) இறபபில இறப்பு — செய்திருநதான்.

ii) இறபபில நிகழவு — செயதிருககிருன்.

iii) இறபபில எதிரவு — செயதிருபபான்

(2) நிகழகாலம :

i) நிகழவில இறபபு — செயயாநினறுன.

ii) நிகழவில நிகழவு — செயயாநிறகிருன்.

iii) நிகழவில் எதிரவு — செயயாநிறபான

(3) எதிரகாலம : செய்வான்

இதனகண கால வேறுபாடுகள் இடம பெருமை நோககுக

---

[1] வி கோ சூரியநாராயண சாஸதிரியார — தமிழ மொழியின வரலாறு. பக. 75.

## (i) குறிப்பு வினை முற்று. The Appellative Verb.

எத்தகைய பெயர்ச் சொல்லையும் வினைக்குறிப்பாக மாற்றுவது நம் திராவிட மொழி மரபு. இலக்கியச் சொல்லாட்சிகள் பெருவழக்காக இருக்க, இன்றைய பேச்சு வழக்கில் அஃது அரிதாகவே காணப்படுகின்றது. இவ்வகை வினைமுற்றில் கால இடைநிலைகள் இல்லை. மாறாக, நாம் காலத்தைக் குறிப்பாகவே உணர்த்த வேண்டும்.

"இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்ற
அம்முக் காலமுங் குறிப்பொடுங் கொள்ளும்
மெய்ந்நிலை யுடைய தோன்ற லாறே" —
(தொல். சொல். 200)

என்று தொல்காப்பியர் குறிப்பு வினைமுற்றினைக் காட்டுவர்.

(எ. டு.) அவர் சான்றோர்.
நீர் நல்லர்.

இவை காலங்காட்டா எனினும் நிகழ்காலப் பொருண்மையுடையதாகவே கொள்ளல் நேரிது. Dr Caldwell, "Appellative verbs are conjugated through every number and person, but they are restricted to the present tense; or rather, they are of no tense, for the idea of time is excluded from them"[2] என்று கூறுவர். இத்தகைய குறிப்பு வினை முற்றுக்களைப் பெயர்ப்பயனிலை என்று கூறுவதையும் நாம் இலக்கண அமைதியாகக் கொள்கின்றோம். இக் குறிப்பு வினை முற்றுக்கள் பெயராக அமையுங்கால் குறிப்பு வினையாலணையும் பெயராகக் கருதப்பெறும்.

## (ii) 'செய்வி' என்னும் ஏவல். The Causal Verb.

திராவிட மொழிகளில் 'செய்வி' என்னும் வினை (Causal) சிறப்பாக வழங்கும் ஒன்றாம். நன்னூலார் இவ்வினையைச் 'செய்வி என்னும் ஏவல்' என்னும் பெயரால் குறிப்பிடுகின்றார். ஆனால், உரையாசிரியர்கள் 'பிறவினை' என்னும் பெயரால் வழங்குகின்றனர். 'செய்வி' என்னும் ஏவலுக்கும், பிறவினைக்கும் இடையே சிறிது வேற்றுமை உள்ளது என்பதை ஊன்றி ஆராயும்போது காண முடியும்.

---

[2] Dr Caldwell — A Comparative Grammar of the Dravidian Languages. P. 478.

(i) 'செய்வி' என்னும் ஏவலும், பிறவினையும் செயப்படு பொருள் குன்றா வினைகளே

(ii) பிறவினை அஃறிணையாகவும், 'செயவி' என்னும் ஏவல் உயர்திணையாகவும் இருத்தலே இவற்றிடையே காணப் பெறும் வேறுபாடாம்

செயப்படு பொருள் குன்றா வினை – Subject + Object + Predicate
செயப்படு பொருள் குன்றிய வினை – Subject + Ø + Predicate

தன்வினையானது எழுவாயைச் செய்கின்ற வினையாம். (Subjective verb)

(எ டு) அடங்கினேன்

பிறவினையானது எழுவாயல்லாத பிறிதொன்று செய கின்ற வினையாம். (Objective verb).

(எ டு) அடக்கினேன்

Dr Caldwell அவர்கள், பிறவினையைச் செயப்படுபொருள் குன்றாவினையென்றும், தன்வினையைச் செயப்படுபொருள் குன்றிய வினையென்றும் கூறுகின்றார் ஆனால், இக் கருத்து நமக்கு உடன்பாடாக அமையவில்லை. "Dr. Caldwell classified the Dravidian verbs into transitive and intransitive But the English connotations of these expressions cannot apply to the Tamil division In Tamil 'தன் வினை' can be either transitive or intransitive according to the place where it occurs Therefore 'தன்வினை' can be called subjective verb and 'பிறவினை' objective verb" – Dr A C Chettiar தன்வினை செயப்படுபொருள் குன்றிய வினையாகவோ, குன்றா வினையாகவோ வரலாம்

தன்வினை:-

(எ. டு) (i) நான் நடந்தேன் Sub. Pred. (SP)
(ii) நான் பாடலைப் பாடினேன். Sub Obj Pred (SOP)

திராவிட மொழிகளில் உருபின் மூலம் 'செயவி' என்னும் ஏவலை உணர்த்துகின்றோம். இது வேறு எம்மொழிக்கும் அல்லாத தனிச்சிறப்பான இயல்பாம். ஏனைய மொழிகளில் இவ்வியல்பை இரண்டு வினைச் சொற்களைக் கொண்டு உணர்த்துவார்கள்.

(எ டு) 'I caused him to build a house' என்னும் ஆங்கிலத் தொடரை "நான் வீட்டைக் கட்டுவித்தேன்" என்ற சொல்லால

எளிதாக உணாததலாம ஆஙகிலததில 'him' 'house' எனற இரணடு செயபபடுபொருளகள அமைகின்றன. ஆனால், தமிழில 'வீடடை' எனற ஒரு சிறபபுப பொருளை எடுததுக கொணடு பிறவறறைக கருபபொருளாகக கொணடு உணாதத வேணடுமெனறால், 'அவன' எனபதை 'அவனால', 'அவனைக கொணடு' எனறு விரிததுணாததலாம

ஆஙகிலததில இருவினைகளால உணாதத வேணடியதைத தமிழில ஒருவினையைக கொணடு உணாததுகினறோம 'கடடுவிததேன' எனற தமிழ வினைச சொலலில கடடுதலாகிய தொழிலும, ஏவுதலும சோநது வநது அமைநதுளளன தன வினைகள அனைததும பிற வினைகளாகவும அமையும் திணை, பால, இடம, ஆகிய இவறறையுணாததும உறுபபுகளைச சோபபதில இவை வேறுபடுதல இலலை C J Beschi எனபாா இதனை ஏவல வினை (Verbs of Command) என்பா

'செயயென வினைவழி விபபி தனிவரின்
செயவிபென ஏவல் இணையின வேரேவல'' — (நன. 138)

நனனூலாா வி, பி என்பவறறைப பிற வினைபபகுதிகள எனபா. ஆனால், திராவிட மொழிகளில (Euphonic purpose) ஒபபு நோககுஙகால, வகர, பகர மெயகள ஒலிததுணையாக வநது தோனறினவே அன்றிப பிறவினைப பொருளில வருவது இகர உயிராறறலே எனக கொளளலாம (The vowel 'i' is the unique force denoting the causal verb theme).

(எ. டு) செயவிகக (தமிழ) > செயஞச (தெலுஙகு)
(-i-) (y ~ i)

தமிழில காணபபெறும் 'செயவி' என்னும வடிவம கனனடததில 'மாடு கொடு' (mādu kodu) என்றாதம தமிழிலும கூடக 'கற்பி' என்பதைக 'கற்றுக கொடு' என்று உணாததுவா. 'செய', 'பணணு' என்னும சொறகள வினையுடன் சோநது பிறவினைப பொருளைத தருகினற வழககு இககாலததில பெருகி வருகின்றது.

(எ டு) உண்பி > உணணச செய (or)
உண்ணப் பணணு
(Both 'cey' and 'pannu' act as auxiliary verbs)

பகுதியின ஈற்றிலுளள வலலினம இரட்டிததுப் பிறவினை அமைகிறது

(எ டு) வாடு > வாட்டு<br>
ஆகு > ஆக்கு } (Reduplication of the final consonant of the verbal base).

பகுதியில் உள்ள மென்தொடர் வன்தொடராக மாறிப் பிறவினை அமையும்.

(எ டு) திருந்து > திருத்து<br>
அடங்கு > அடக்கு } (Nasal Consonant > Plosive Consonant)

பகுதியில் ஒரு மாறுதலுமின்றி இடைநிலையும், பகுதியும் புணருமிடத்து, வல்லினம் மிகுந்தால் பிற வினையாகும் சொற்கள் உள்ளன. வல்லினம் மிகா இடத்து அவை தன் வினையாகவே நிற்கும்.

(எ டு) சேர்கின்றேன் > சேர்க்கின்றேன்.<br>
சேர்வேன் > சேர்ப்பேன் } (Duplication of the Plosive Consonants)

கு, சு, டு, து, பு, று என்னும் ஆறனுள் ஒன்று பகுதியுடன் சேர்தலால் பிறவினை அமையும்.

(எ. டு) உருள் > உருட்டு<br>
நட > நடத்து.<br>
எழு > எழுப்பு } V R { + tu, + tu, + pu

இவ்வாறு திராவிடமொழிகளில் பிறவினைகள் அமையும் நிலைகளை ஒப்பு நோக்குங்கால், இகரமும் தகரமும் பிறவினை விகுதிகளாக (Suffixes of the causal verb) வருதலைக் காணலாம். நச்சினார்க்கினியர் வி, பி எனக் கொள்ளாமல், இகர உயிரினையே கொள்ளுகின்றார். வல்லினம் இரட்டித்தலும், மென்தொடர் வன்தொடராக மாறுதலும் நன்கு காணப்பெறின், அவற்றுள் தகரவொற்று பிறவினை விகுதியாக அமைந்திருத்தலை நாம் அறியலாம்.

கு, சு, டு, து, பு, று என்னும் ஆறுக்கக் கொண்ட விகுதிகளுள் ஒலிநூல் துணைகொண்டு நோக்குவோமாகுத 'து' என்பது ஒன்றே விகுதியாகத் தெரியும். இகரவுயிரும் தகர வொற்றும் இறந்தகாலப் பொருளைத் தருதல் போலப் பிறவினைப் பொருளையும் தரலாயின. (Dual role of 'i' and 't')

ஐரோப்பிய மொழிகளில் பிறவினைப் பொருளையுணர்த்த வேண்டின் இரண்டும் பலவுமான சொற்கள் யாதொரு தொடர்புமின்றி அமையும். ஆனால், திராவிட மொழிகளுள் சொல்லின்

கண் ஏற்படும சிறு மாறுதலால (Minor morpho-phonemic changes) பிறவினைப பொருளை உணாததலாம. Dr Caldwell அவாகள சிந்திய மொழிகளிலும இததகைய மொழியாகக அமைபபு இருநததாகக கூறுவதினினறும, அவாதம விழுமிய மொழிநூற புலமையை நாம வியககாமல இருத்தலும கூடுமோ?

## (iii) எதிர்மறை வினை. The Negative Voice.

உலக மொழிகளில உடன்பாடு, எதிாமறை என்னும இருவகை நீாமைகள மிகப் பணடைடு வழங்கி வநதிருததலை நாம நனகு காணலாம மககளின் மனப் பாஙகுககு ஏறப, இவை இரணடும சொறறொடா அமைபபினுள் (Syntactic structure) சில மாறறஙகளைபபெறறு வழககிடையே நிலவுகின்றன. இததகைய அமைபபுககள இருததலே ஒரு மொழியின் நாகரிக வளாசசிககுச சிறநத சானறும எனக கூறின் மிகையனறு

திராவிட மொழிகளிலும, பிறமொழிகளிலும காணப்பெறும எல்லா வினைச சொறகளும உடனபாடடுப பொருளையே (Affirmative) உணாததுவன எதிாமறை உணாததும இடைநிலை (Negative sign) பெறுவதால அவை எதிாமறைப பொருளை (Negative) உணாததும சிறபபைப பெறுகின்றன (**All verbal themes are naturally affirmative, and the negative signification is expressed by means of addition or changes**)

**Verbal Root+Tense Sign+Pronominal Suffix>**
**Finite Verb**

**Verbal Root+Negative Sign+Pronominal Suffix>**
**Negative Verb.**

வினையடி+எதிாமறை இடைநிலை+பாலகாடடும விகுதி
காண + ஆ +ஆா>காணா.

திராவிட மொழிகளின இயலபு மேலே கணடவாறு உருவான ஒருவகை அமைபபே ஆகும ஆனால, அனைதது ஐரோபபிய மொழிகளிலும எதிாமறை உணாததும சொல வினைச சொலலின் உறுபபாகாமல தனிததே நிறகின்றது (separable existence).

(எ டு) He comes, He does not come

திராவிட மொழிகளிலோ பகுதிககும விகுதிககும இடையில எதிாமறை இடைநிலை புணாநது வினைசசொல அமைகினறது இவ்வெதிாமறை இடைநிலை முககாலததிறகும உரியது

(எ டு) செய்யான் < செய் + ஆ + ஆன் }
V R+N S+P S }

Dr Caldwell, "In general, the Dravidian negative verb has but one tense, which is an aorist, or is indeterminate in point of time" [1] என்று கூறுவர்.

எதிர்மறை வினைமுற்றுக்கள் கால இடைநிலை இல்லாத காரணத்தால் (The tense sign is Ø in the negative verbs) முக்காலத்திற்கும் பொதுவெனக் குறிப்பிட்டாலும் இவை எதிர் காலத்திற்கு உரியவாய் வழங்குகின்றன. ஏனைய இறந்தகால, நிகழ்காலங்களில் எதிர்மறை வினைகள் அமைகின்றபொழுது வினையடியோடு காலஇடை நிலையும், எதிர்மறை இடைநிலையும் ஒருங்கே வரப் பால்காட்டும் விகுதியோடு முடியும்.

(எ டு) செய் + த் + இல் + அன் > செய்திலன்.
V.R+T S+N S+P S > Past Tense Negative Finite Verb

உண் + கின்று + இல் + அன் > உண்கின்றிலன்
V.R+T S+N S+P.S > Present Tense Negative Finite Verb.

எதிர்கால வினைச்சொற்களில் மட்டும் இவ்வாறு இருவகை இடைநிலைகள் உடன் நிற்றல் இல்லை.

(எ.டு) வாரான் } V R+N S+P S > Future Tense
செய்யேன். } (The tense sign is Ø in these illustrations)

மலையாளத்தில் முக்காலத்திற்கும் உரிய எதிர்மறை வினைகள் உள்ளன. இந்த எதிர்மறை வினைகளில் பகுதியும் விகுதியும் ஒரு சிறிதும் மாறாமல் இருத்தல் கவனிக்கத்தக்கது.

(எ.டு) கொள்ளான் < கொள் + ஆ + ஆன்.
கொள்ளீர் < கொள் + ஆ + ஈர்.
கொள்ளோம் < கொள் + ஆ + ஏம்.

(The negative sign and the pronominal suffix undergo morpho-phonemic changes.)

வாழாது < வாழ் + ஆ + து
V.R+N S+P S

(The negative sign is clearly found and suffixed to the root.)

[1] Dr Caldwell - A Comparative Grammar of the Dravidian Languages P. 468.

இவற்றில் அஃறிணை வினையை நோக்கின், எதிர்மறை இடைநிலை இருத்தல் தெளிவாகும். பிற வினைகளில் எதிர்மறை இடைநிலையும், பால்காட்டும் விகுதியின் முதல் உயிரும் புணர்ச்சி விதிகட்கு ஏற்ப இயைதலைக் காண்கின்றோம். தெலுங்கு மொழியில் மட்டுமே எதிர்மறை வினைகளின் எதிர்மறை இடைநிலையாம் அகரம் 'a' இருத்தல் ஐயத்திற்கு இடனாக இருக்கின்றது. கன்னடத்திலும் அகரம் 'a' எதிர்மறை இடைநிலையாம்.

தமிழில் வினைமுற்றுக்களை அன்றி எச்சங்களின் எதிர்மறை வடிவங்களை ஆராயின், ஆகாரம் (ā) இடைநிலை என்பது ஐயமின்றிப் புலப்படும்.

(எ-டு) வாழாமல் < வாழ்+ ஆ +மல்
(Negative Verbal Participle) V R+N S+Suffix of the V P
உண்ணாத < உண்+ஆ+த்+அ
(Negative Relative Participle) V R+N S+T S+Suffix of the R. P

இவற்றில் ஆகாரமும், விகுதிகளும் தெளிவாக நிற்றல் காண்க. 'ஆ' என்பதுவேயன்றி, 'அல், இல்' என்பனவும் எதிர்மறை இடைநிலைகளாம்.

(எ-டு) வாழற்க < வாழ்+அல்+க
(Negative Optative Verb) V R+N S+Suffix of the O V
உண்டிலன் < உண்+ட்+இல்+அன்
(Negative Verb of the III Person) V R+T S+N S+P S

இவ்வாறு திராவிட மொழிகளுள் முறையாக எதிர்மறை இடைநிலை அமைந்து வர, இன்றைய பேச்சு வழக்கில் இம்முறை மாறியுள்ளது. 'வந்திலன்' என்பதை 'வரவில்லை' என்றும், 'வாரான்' என்பதை 'வரமாட்டான்' என்றும் நாம் வழங்கி வருதலினின்றும் இம்மாற்றத்தினைக் காணலாம்.

(எ-டு) வர+இல்லை > வரவில்லை
ceya+Negative Finite Verb.
(V. P)

ஒருமொழி காலப்போக்கில் பலவகை மாற்றங்களைக் கொண்டு விளங்குதலின், அடிப்படை உயிர்ப் பண்புகளோடு முரணுதவாறு, அமைப்புகள் மட்டும் மாறுபட்டு இருக்கின்றன. இனி, எதிர்மறை என்ற மொழி இலக்கணக் கூறும் அவ்வகையில் சில மாற்றங்களை அடைய அவற்றையும் அணைத்துக் கொள்ளுதலே மொழி மரபாம் எனல் அறிஞர் துணிபு.

